# முன்னுரை

ஏகநாதர் மஹாராஷ்ட்ர தேசத்தில் விளங்கிய ஒரு சிறந்த வைணவ பக்தர். அவர் சரித்திரம் தமிழில் **பக்தவிஜயம், பக்தலீலாமிர்தம், பக்தமாலை** யென்னும் நூல்களிற் காணப்படுகின்றது. இந்நூல்க ளனைத்தும் பண்டரிநாதரிடத்து அபார பக்திபூண் டொழுகிய மஹாராஷ்ட்ர மஹான்களின் சரிதங்களை யுரைப்பனவே. ஆயினும், அவற்றில் சரிதங்கள் மஹாராஷ்ட்ர நூல்களி லுள்ளவாறு உரைக்கப்படாமல் பெரும்பான்மை சுருக்கியும் சிறிது மாற்றியும் உரைக்கப்பட் டுள்ளனவாகத் தோன்றும். மஹாராஷ்ட்ர ஆசிரியர் உரைத்தவாறே யுரைக்கும் நோக்கத்துடன் இவ் வேகநாதர் சரித்திரம எழுதப்பட்டது. கி. பி. பதினெட்டாம் நூற்றாண்டினராகிய மகீபதி யென்பார் எழுதிய **பக்தலீலாமிர்த**த்தில், பதின்மூன்றும் அத்தியாய முதற் பன்னிரண் டத்தியாயங்கள் ஏகநாதர் சரித்திர முரைப்பன. அவற்றைப் பெரும்பான்மை தழுவி இந்நூல் எழுதப்பட்டது. **பக்தலீலாமிர்த**த்தில் இந்தப் பகுதிக்கு அங்கிலத்தில் நேர் மொழி பெயர்ப் பொன்று ஓர் அமெரிக்க (Justin E. Abbott) ரால் எழுதி வெளியிடப்பட்டுளது. இந்தத் தமிழ்ச்

சரித்திரத்தை யெழுதற்கண் அது பேருபயோகமா யிருந்ததென்பது இங்கு உரைக்கற்பாற்று. சைவ நாயன்மார் சரித்திரங்களையும் வைணவ ஆழ்வா ராதிகளின் பிரபாவங்களையும் தமிழ்நூல்களிற் படித் தறிந்த தமிழ் மக்கள், மஹாராஷ்ட்ர தேசத்தில் முந் நூற்று முப்பதாண்டுகளின் முன் விளங்கிய பெரியா ரொருவர் சரித்திரம் அத் தேசத் தாசிரியரொருவரால் எவ்வாறு எழுதப்பட்ட தென்பதை யறிய விரும்பல் கூடுமென்று இம் மொழிபெயர்ப்பு நூல் செய்யப் பட்டது.

ஏகநாதர் கி. பி. பதினாறும் நூற்றாண்டில் விளங் கியவர். அவர் நூல்களெல்லாம் பிராகிருதமாகிய மராட்டி மொழியிலேயே எழுதப்பட்டன. அவற்றின் பெயர்கள் வருமாறு :

1. பாகவத புராணத்தின் இரண்டாம் ஸ்கந்தத் தின் ஒன்பதாவது அத்தியாயத்திற்கு மராட்டி வியாக் கியான ரூபமா யிருக்கிற சதுசுலோகி பாகவதம். காற்பத்தைந்து சம்ஸ்கிருத சுலோகங்களுக்கு வியாக் கியானமாக ஆயிரத்துக்கு மேற்பட்ட செய்யுள்கள் கொண்டது.

2. 4001 அபங்கங்கள் (அபங்கம் - மஹாராஷ்ட்ர மஹான்கள் பகவானைத் துதித்தற்கும் பக்தர்க்குத் தத்துவ முணர்த்தற்கும் பெரும்பான்மை கொண்ட செய்யுள் வகை.)

3. சங்கராசாரியர் அருளிய ஹஸ்தாமலகம் பதி னன்கு சுலோகங்களுக்கும் வியாக்கியானம். 674 செய்யுள்கள் கொண்டது.

4, சுகாஷ்டகம் எட்டுச் சுலோகத்திற்கும் வியாக்கியானம். 447 செய்யுள்கள் கொண்டது.

5. ஸ்வாத்மஸுகமென்னும் வேதாந்த நூல். 511 செய்யுள்களாலானது.

6. பக்தி நெறியை விளக்கும் ஆனந்தலஹரி. 154 செய்யுள்களாலானது.

7. குருசிஷ்ய ஸம்வாத ரூபமான அநுபவாநந்தம் அல்லது ஆநந்தாநுபவம் என்னும் வேதாந்த நூல்.

8. ருக்மிணி ஸ்வயம்வரம். (பாகவத கதை).

9. பாகவத புராணத்தின் பதினொராவது ஸ்கந்தம் முப்பத்தோ ரத்தியாயத்திற்கும் மராட்டி வியாக்கியான ரூபமாயிருக்கிற ஏகநாதீ பாகவதம். (பாரகாவியம்).

10. வால்மீகி ராமாயணத்தின் மராட்டி மொழி பெயர்ப்பாகிய பாவார்த்த ராமாயணம்.

இந்நூலில் ஆங்காங்கே அதிசயோக்திகள் காண்போர் பக்தர்களால் எழுதப்பட்ட மஹான்களின் சரித்திரங்களில் அவை காணப்படுத வியல்பேயென்றுணர்ந்து அவற்றினின்று உண்மை தேர்வர். அன்றியும் ஏகநாதர் மஹாராஷ்ட்ர தேசத்துப் பக்தர்களால் விஷ்ணுவின் அவதார விசேஷமாகக் கருதப்பட்டார். அவதாரங்களென்று வைதிக ரனைவராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட ஸ்ரீ ராமாதியர் சரித்திரங்களில் இன்னும் அதிகமாகவே அற்புதச் செயல்கள் வர்ணிக்

கப்பட்டுள்ளன. மற்று, ஏகநாதர் சரித்திரத்தால் பக்தியின் பெருமையும் பக்தியின் அற்புத சக்தியும் தெளிவாகப் புலப்படுவதோடு நல்லொழுக்கத்தின் மாண்பும் உலகம் திருத்தமடைவதன்கண் அதன் உபயோகமும் நன்கு விளங்குகின்றன. ஒருவனுக்குப் பக்தியும் நல்லொழுக்கமும் அமையுமாயின் இவ் வுலக வாழ்க்கையாற் பெறலாகும் இன்ப மனைத்தை யும் பெறுதற்கு அவற்றைவிட அவனுக்கு வேண்டற் பாலது வேறு யாதுளது? ஆதலால் இச் சரித்திரங் கற்போர் அடையும் பயன் பெரிது.

அ.



# அத்தியாயப் பொருளடக்கம்

# பிழை திருத்தம்

நூல் வாசிக்கத் தொடங்குமுன் இப்பிழைகளை திருத்திக் கொள்க :

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 12 | 1 | சளித்தா | சலித்தா |
| 16 | 1 | அங்கு | அங்குப் |
| 45 | 24 | இந்த | இந்தச் |
| 64 | 2 | பேர்த்தி | பேரத்தி |
| ,, | 21 | ,, | ,, |
| 82 | 11 | யென்றனர் | யென்றான் |
| 84 | 8 | புறப்பட்டு | புறப்பட்டுச் |
| 101 | 14 | இந்த | இந்தப் |
| ,, | 16 | காதலாற் | காதலால் |
| 126 | 6 | நீ | நீர் |
| ,, | 7 | கொண்டிரு | கொண்டிரும் |

# ஏகநாதர்

## முதல் அத்தியாயம்

**ஏகநாதர் பிறப்பு**

மஹாராஷ்ட்ர தேசத்திலே பைடணபுரி யென்னும் நகர மொன்றுளது. அது முற்காலத்திலே பிரதிஷ்டான மெனப்பட்டது. அந் நகரத்திலே ஏகநாதர் பிறந்தார். இவர் பானுதாசர் என்னும் பக்த சிகாமணியின் வழித்தோன்றல். பானுதாசர்க்குச் சக்ரபாணி யென்னும் புத்திர ரொருவ ரிருந்தார். சக்ரபாணியினுடைய புத்திரர் சூரியநாராயணர். அவருடைய மனைவி உருக்குமணி. இவ் விருவருக்கும் புத்திரராகக் கலியுகத்திலே உலகம் கடைத்தேறும் வண்ணம் பரம்பொருளே அவதரித்த தென்று சொல்லும்படி ஏகநாதர் வந்து தோன்றினர். ஏகநாதர் குழந்தையா யிருக்குங் காலத்தேயே தந்தையும் தாயும் மரித்தனர். அவருடைய பிதாமகராகிய சக்ரபாணியே அவரை வளர்த்து வந்தார். சக்ரபாணியும் அவர் மனைவியும் குழந்தையைச் செல்வமாக வளர்க்கையில் அவரிடத்தில் நல்ல குணங்கள் பல இருத்தலைக் கண்டு மகிழ்ந்தனர்.

**இளமையில் பக்திக் குறிகள்**

ஏகநாதருக்குப் பிள்ளை விளையாட்டுக்கள் பிடிக்கவில்லை. அவர் தம்மிடத்து உள்ள கோலிக் குண்டுகளை வரிசையாக வைத்து இவை தேவர்கள் என்று சொல்லி அவற்றிற்கு முன் புஷ்பங்களை இடுவார். தம் தோள்மீது ஓர் அகப்பையை வைத்து இது வீணை யென்பார். தம்முடைய திருந்தா மொழிகளால் வைகுண்ட நாதனை வாழ்த்துவார். சில சமயங்களில் பாகவதர்கள் பஜனை பண்ணிக்கொண்டு வருவதுண்டு; ஏகநாதர் கவனத்தோடு கேட்டுக்கொண்டிருந்து தாமும் அப் பாட்டுக்களைப் பாடி ஆநந்தக் கூத்தாடுவார். ஏகநாதர் எப்போதும் ராமா, கிருஷ்ணா, கோவிந்தா, அச்சுதா என்று சொல்லிக்கொண் டிருப்பார். ஒரு சிறு கொம்பைக் கையிலெடுத்து அதில் கந்தையைக் கட்டிக் கொடிபோலாக்கி அதைத் தோள்மீது வைத்துக்கொண்டு, "நான் பண்டரிபுரம் போகிறேன்" என்பார். சிறு வயதிலேயே இவ்விதமான பக்திக் குறிகள் இவரிடத்து இருந்ததைக் கண்ட சக்ரபாணிக்கும் அவர் மனைவிக்கும் உள்ளம் பொங்கிப் பூரித்தது. மற்றக் குழந்தைகளைப்போல ஏகநாதர் காரண மில்லாமல் அழுவதும் உபத்திரவிப்பதுமில்லை. தமக்குத் தின்னுதற்கு என்ன கொடுத்தாலும் அதைக்கொண்டு திருப்தியாயிருப்பார். இந்தக் குறிகளெல்லாம் பின் அவர் ஒழுக்கம் இன்ன மாதிரி யிருக்குமென்பதை அறிவித்தன.

**பானுதாஸர் பெற்ற வரம்**

ஒரு சமயம் சக்ரபாணி தம் மனைவியை நோக்கி, "என் பிதா பானுதாஸர் பாண்டுரங்கரைச் சேவித்துக்கொண் டிருந்த காலத்தில் ஒருநாள் அவர் மகிழ்வெய்தி, 'பானுதாஸ், ஏதாவது வரங் கேள்' என்றார்.

பாநுதாஸரும் 'என் குலத்தில் தேவரீர் அவதரிக்க வேண்டும். வேறு எனக்கு இச்சை யில்லை' என்று வேண்டினார். பகவானும் 'அங்ஙனமே யாகுக' என்றனர். இப்பொழுது ஏகநாதராய்ப் பிறந்திருப்பது பகவான் தான் என்று எனக்குத் தோன்றுகிறது" என்றார். அவ் வம்மையும் "நீர் சொல்லிய தொக்கும். இவ்வளவு அற்புத குணங்களையுடைய குழந்தை மனிதப் பிறவியன்று. அதனைப் பார்த்துக் களிக்கத் தந்தையும் தாயும் இல்லாது போயினரே" என்றாள். அப்படிச் சொல்லும்பொழுதே தன் பிள்ளையின் ஞாபகம் வர அவள் கண்களிலிருந்து நீர் பெருகிற்று. பின்னும் அவள் தைரியமாக, "இந்தக் காண்முளைமட்டும் உயிரோடிருக்குமாயின் நம் குலத்தை யெல்லாம் ஈடேற்றும்" என்று சொல்லித் தன்னைத் தேற்றிக் கொண்டு தன் பேரனைப் பிரியமாக வளர்த்து வந்தாள்.

**அற்புத ஒழுக்கம்**

ஏகநாதர்க்கு ஆறும் ஆண்டில் உபநயனம் நடந்தது. தம் குலகுரு சொல்வழியே நின்று அவர் மூன்று காலமும் சந்தியாவந்தனுதிகளைத் தவறாது செய்தார், காலைக் கடன்களைக் கிரமப்படி யாற்றினார்; குளிக்கு முன் நீர் அருந்தார், உண்ணுங்கால் உரையாடார். தம் பிதாமகரிடமிருந்து மஹாராஷ்ட்ர வித்யையைச் சுலபமாகக் கற்றுக்கொண்டார். ஏகநாதர் உலக நடையை விரும்பவில்லை. அவர் வழியே வேறாயிருந்தது. உயர் குலத்திற் பிறந்த உத்தமர்கள் அப்படித்தானிருப்பார்கள். ஜனங்கள் அவரைப் பார்த்து அதிசயித்து, "இவ்வளவு சிறுவயதில் இவர் மனம் உலக விஷயங்களிற் சிறிதும் பதியாமலிருக்கிறது. வேடிக்

கைக் கதைகளுக்கும் பரிகாச வார்த்தைகளுக்கும் இவர் செவிகொடுக்கிறதில்லை; புராணங்கள் கேட்கப் பிரியப்படுகிறார். சுலோகங்களை ஒப்பிப்பதிலும் அவற்றிற்குப் பொருள் சொல்லுவதிலும் இவர் கொஞ்சங்கூடத் தவறுவதில்லை. பிராமணோத்தமர்கள் இவரைத் தவக்குறையாற் பிறந்த பிள்ளையென்று சொல்லுகின்றனர். இவருக்கு வேதாந்த சாஸ்திரம் நன்றாகத் தெரிந்திருக்கிறது. இவர் உலகம் உஜ்ஜீவிக்கும்படி தோன்றிய அவதார புருஷரென்று நான் சொல்ல வேண்டும்'' என்பர்.

**வித்யா குரு வியப்பு**

ஏகநாதர் தம்முடைய வித்யா குருவாகிய பிராமண பண்டிதரோடு தனித்திருக்குங்கால் அவரைக் கேள்விகள் கேட்பார். அவற்றைக் கேட்ட பண்டிதர் பிரமித்து, 'நாங்கள் அறிந்ததெல்லாம் கேட்டு அறிந்தது. ஜீவனோபாயமாகப் புராணங்களிலுள்ளவற்றைக் கற்றுத் தெரிந்திருக்கிறோம். இவர் சொல்லுபவை நம் அனுபவத்துள் வாராதவை' என்று எண்ணி, ''ஏகநாதா, உன்னுடைய கேள்விகள் விசித்திரமானவை. சமுத்திரம் கண்ணுக்குப் புலப்படாதவரை சிறு குட்டை வாரி போல் தோன்றும். அப்படி எங்கள் அறிவு உன்னுடைய அறிவு முன் எங்கே? உன்னுடைய கேள்விகளை நான் கவனித்துக் கேட்டாலும் அவற்றின் முழுத் தாற்பரியமும் எனக்குத் தெரிந்துகொள்ளக் கூடவில்லை. சந்திரன் உதியாதவரை தானே நக்ஷத்திரங்கள் அழகாகத் தோன்றுகின்றன; நீ கேள்விகள் கேட்டவுடனே என்மனம் தடுமாறுகின்றது. சூரியன் தோன்றியவுடனே சந்திரன் மேகம்போல்

வெளிறித் தோன்றுவதுபோல என் சொற்கள் உன் அறிவின் முன் பயனிலவாகின்றன" என்று ஏகநாதரைப் புகழ்வார். அதனைக் கேட்ட ஏகநாதர் புராணிகரை நமஸ்கரித்து, "சிறு பிள்ளைத் தனமாக ஏதோ சொல்லிவிட்டேன். கோபித்துக் கொள்ளக்கூடாது" என்று பணிவோடுரைப்பார். ஒருநாள் புராணிகர் எழுந்து அவரை அன்போடணைத்து, "உனக்குத் திருஷ்டி சுற்றிப் போடவேண்டும். நீ பரபிரமத்தின் பிரதிமைபோ லிருக்கின்றாய். உன்னைக் காணுதற்கு என்னுடைய கண்கள் என்ன புண்ணியஞ் செய்தன!" என்றார். ஏகநாதர் "என் மனத்தில் ஐயந்தோன்றுமாயின் நான் யாரைப் போய்க் கேட்டால் தெளிவுண்டாகும்? இப்பொழுதே சொல்லும்" என்று கேட்டார். பண்டிதர் "இவ்வுலகத்தில் அதற்குச் சற்குரு அனுக்கிரகம் வேண்டும். அது கொண்டு தான் பாச மொழிந்து பிறப்பிறப்பிற் சுழலுந் துக்கந் தீரும்" என்றார்.

**சற்குரு நாட்டம்**

இவ் வார்த்தைகள் ஏகநாதர் மனத்தில் தைத்தன. அவர் 'அநந்ய பக்தியோடு சற்குருவைச் சரணடைய வேண்டும். சற்குரு பிரபஞ்சமெல்லாம் வியாபித்திருக்கிறார். அவரிலலாத இடம் இல்லை. என்றாலும் சகுணரூபத்தில் அவரைத் தேடி யடைந்து பகலும் இரவும் அவர்க்குத் தொண்டு செய்யவேண்டும்' என்று உறுதி பண்ணிக்கொண்டு, 'அப்படிப்பட்ட ஸ்வாமியை நான் எப்பொழுது காணப்போகிறேன்' என்று இடையறாது எண்ணிக் கொண்டிருந்தார். வேறொன்றிலும் அவர் மனம் செல்லவில்லை. ஒருநாள் ஏகநாதர் சிவாலயத்

துக்குப் போயிருந்தார். அப்பொழுது இரவில் இரண்டாம் யாமம். அவர் தனியாகப் பக்தியோடு சேவித்துக்கொண் டிருந்தார். அவர் மனத்தில் எப்பொழுது சற்குரு காட்சிதருவாரோ என்ற ஒரே எண்ணந்தான தடித்திருந்தது. திடீரென்று ஒரு தெய்வ வாணி, "தேவகிரிக் கோட்டையில் ஜநார்த்தனபந்த் என்னொருவன் இருக்கின்றான். அவன் ஸ்ரீ தத்தருக்குச் சிஷ்யனாயிருக்கும் பாக்கியம் பெற்றவன். போய் அவனைப் பார்" என்றெழுந்தது. அதனைக் கேட்ட ஏகநாதர் ஆனந்தபரவசராய்த் தம் பிதாமகர் பிதாமகியிடத்துஞ் சொல்லிக்கொள்ளாமல் நேரே பயணப்பட்டு விட்டார். கோடை வெயிலில் தாகமேலிட்டவன் தண்ணீரைத் தேடிப் போய் அதில் முழுகுவதைப் போல ஏகநாதர் சற்குருவைக் காணுதலையே விரும்பினார்.

**சற்குருவை யடைதல்**

பைடணபுரிக்கும் தேவகிரிக்கும் நாற்பது மைல். அவ் வழியனைத்தும் ஆவலோடு நடந்தொழித்து ஏகநாதர் சற்குரு வீட்டையடைந்தார். துவாரபாலகன அவரைத் தடுத்து உள்ளே ஜநார்த்தனரிடத்துச் சென்று, "யாரோ ஒருவர் வந்திருக்கிறார். உம்முடைய சிஷ்யராம், உம்மைப் பார்க்கவேண்டுமாம். பெயர் ஏகோபாவாம்" என்றான். ஜநார்த்தனர் நிகழ்ந்த குறிகளையெண்ணி, 'இன்று நற்குறிகள் பல நிகழ்கின்றன. என் வலக கண் துடித்துக்கொண்டே யிருக்கின்றது. வலத் தோளும் அடிக்கடி துடிக்கின்றது. என்னைப் பார்க்க வந்திருக்கிறவன் நல்ல சாதுவாயிருக்க வேண்டும்' என்று தமக்குள் தீர்மானித்துச் சடக்கென எழுந்து வாயிலண்டைச் சென்று வைஷ்ணவ வீரரைப் பார்த்

தார், தழுவினார்; அவர் கண்களில் நீர் பெருகிற்று. சற்குருவைப் பார்த்த ஏகநாதர் சாஷ்டாங்க தெண்டனிட்டு, "அடியேன் என் காலத்தை யெல்லாம் தேவரீருடைய சேவையில் கழிக்க விரும்பினேன். அபயந் தந்து இரட்சிக்க வேண்டும்" என்று சொல்லிப் பின்னும் கைகூப்பி, "பக்தர்களை யாட்கொள்ளும் சற்குரு நாதரே, நாயேனையும் ஆட்கொள்ளுக. வேறு சரணில்லேன். காமாதி அறுபகைகளால் மொத்துண்டு வந்த நாயேனைக் காப்பது உம் பாரம்" என்றிரந்தார். இவர் பக்குவத்தை யறிந்த ஜநார்த்தனர் மிகவும் மகிழ்ந்து இவரை ஆர்வத்தோடு மார்புறத் தழுவி, "உன்னுடைய கூட்டரவால் என் வாழ்க்கையே நலம் பெறும்" என்றார். இது கேட்ட ஏகநாதர் ஆனந்த மேலிட்டு அன்புருவானார். தந்தையோடேடித் தனியே காட்டி லலைந்த குழந்தை துருவன் நாரத முனியைக் கண்டபோது எப்படிக் களித்தானே அப்படிக் களித்தார் ஜநார்த்தனரைக் கண்ட ஏகநாதரும். அவர் ஆத்மானந்தத்தில் அமிழ்ந்தினவராய் மெய்ம்மறந்தார், வீட்டை மறந்தார், தம்மை மறந்தார். சற்குரு இவரைக் கையைப்பிடித்து அழைத்துக்கொண் டுள்ளே போய்க் கொஞ்சம் உணவு கொடுத்தார்.

**சற்குரு சேவை**

ஏகநாதர் சற்குரு சேவையி லீடுபட்டவராய் அவருடைய காரியங்க ளனைத்தையும் கவனித்து வந்தார். விடியற்காலையில் நாலு நாழிகை யுண்டென்னு மளவிலே யெழுந்து பகவந்நாமத்தை ஸ்மரிப்பார். பின் தந்ததாவனஞ் செய்து வீட்டு வேலைகளைக் கவனிப்பார். துடைப்பம் கொண்டு வீடுமுழுதும் தம் கையாலேயே விளக்கு

வார். விளக்கிக் குப்பை யெல்லாம் திரட்டி முறத்தி லிட்டு அதைத் தூரத்தே கொண்டெறிவார். வேலைக் காரரும் வேலைக்காரிகளும் நன்றாக உறங்கும்பொழுது இவர் தரை மெழுகிக்கொண்டும், பூஜாபாத்திரங்களை வெளியே கொண்டுவந்து அவற்றைத் துலக்கிக் கொண்டு மிருப்பார். ஜநார்த்தனர் விழித்த வுடனே ஏகநாதர் அவர்க்கு கால்கை சுத்திபண்ணத் தண்ணீ ரும் மண்ணும், தந்ததாவனத்துக்குப் பற்குச்சியும், வாய் கொப்பளித்தற்குக் குளிர்ந்த ஜலமும், ஸ்நா னத்திற்கு வெந்நீரும் தயாராக வைப்பதில் தவறுவ தில்லை. பூஜா பாத்திரங்களும், புஷ்பங்களும், துளசியும் ஸித்தமா யிருக்கும். இவற்றை யெல்லாம் ஸித்தமாக வைத்துவிட்டு ஏகநாதர் தாம் ஸ்நானஞ்செய்து தம் குருவின் மடிவஸ்திரத்தை எடுத்து மடித்து வைப் பார். பின் இவர் அவருக்கு ஸ்நானத்துக்கு ஜலம் மொண்டு கொடுத்துவிட்டு மடிவஸ்திரத்தோடு சமீ பத்தில் நின்று கொண்டிருப்பார். ஈரவஸ்திரத்தைப் பிழிந்தெடுத்து அவர் பாதரக்ஷைகளைக் கொண்டு வந்து முன்னே இடுவார். இவற்றை யெல்லாம் செய் வதில் ஏகநாதர்க்கு மிக்க பிரியம். சற்குரு வீட்டில் வேலைக்காரர்கள் பலரிருந்தாலும் ஏகநாதர் தாமொரு வரே அவருடைய வேலைக்காரரென்று எண்ணி நடந் தார். எல்லா வேலைகளையும் தாமே செய்தாலன்றி இவருக்குத் திருப்தியுண்டாகாது. ஸ்வாமி விஷ்ணு பூஜைக்கு உட்காரும்பொழுது ஏகநாதர் வாசனைத் திர வியங்களைக் கூட்டிவைத்துத் தூபதீபங்களை யெல்லாம் அருகே எடுத்து வைப்பார். பூஜைக்குப் பின் அவர் நிஷ்டையி லமர்ந்திருக்கும்பொழுது இந்த சற்சீடர் என்ன செய்வார்? போய்க் குருவினுடைய படுக்கை

யறையைப் பெருக்கி அவர் படுக்கையை உதறிப் போடுவார். தாம்பூலம் தயார் செய்து ஒரு தட்டில் வைப்பார். பிரியத்தோடு அவருடைய படிக்கத்தைக் கழுவிச் சமீபத்தில் கொண்டுவந்து வைப்பார். அவர் உண்ணுதற்கமரும் பொழுது இவர் பக்கத்தில் நின்று ஈயோட்டுவார். அவர் உண்டபின் அவர் தட்டிலுள்ள சேடத்தை ஆனந்தமாய் உட்கொள்ளுவார். 'நான் அதிகமாய்த் தின்றேனால் சோம்பல் வந்துவிடும், என் சுவாமி பணிவிடையில் பிழைப்பேன்' என்று சொல்லிக்கொண்டே கொஞ்சமாய்ச் சாப்பிடுவார். தாம்பூலத்தை எடுத்துத் தாமே குருவுக்குக் கொடுத்துக் கைகூப்பிக்கொண்டு முன்னே நிற்பார். அவர் படுக்கையி லமருங்கால இவர் அவருக்குக் கால பிடிப்பார். இந்தப் பணிவிடைகளில் இவர் தவறியதேயில்லை. இம்மாதிரியாக மாதங்கள் சென்றன; ஆண்டுகள சென்றன. இவர் சலிக்கவேயில்லை. இந்தச் சேவையின்பத்தில் தம்முடைய குருவைச் சேவிக்கிறதற்கு அதிகாரம் தமதேயென்றும் தாமுயிரோடு இருக்கும்வரை தம்மையன்றி வேறொருவரும் அது செய்யப்படா தென்றும் ஏகநாதர் நினைத்தார். வீட்டுக் கணக்குகளை யெல்லாம ஒரு புஸ்தகத்தில் குறித்து வைத்தார். தப்புச் செய்ததேயில்லை. ஏகநாதர் வயதில் சிறுவரே யாயினும் புத்தியில் பெரியவராயிருந்தார். இப்படி ஊக்கத்தோடு குருசேவை செய்வதில் அவருக்கு வேறு கவலையெல்லாம் ஒழிந்தது. ஜநார்த்தனர் ஒரு சமயம் அவரை நோக்கி, "உன்னுடைய மாதாபிதாக்களைவிட்டு என்னோடேயே தங்கிவிட்டாயே, அவர்கள் எப்படி யிருக்கிறார்களோ!" என்று கேட்டதற்கு, ஏகநாதர் "என் மாதாபிதாக்கள் இறந்து விட்டனர்.

பாட்டன பாட்டி பைடணபுரியிலிருக்கிறார்கள். இங்கு வருகிறதற்காக அவர்களை விட்டேன். ஸ்வாமி சேவையை விட முக்கியமான கடமை என்ன இருக்கிறது!'' என்று சொல்லி விட்டார் ஏகநாதர் பழைய சங்கதிகளை ஞாபகத்தில் வரவிடுகிறதேயில்லை. தாம் தம் குருவினுடைய பொருள் என்றே எண்ணினார். சற்குருஸேவையே ஜபம், சற்குருஸேவையே தவம். வேறுவிதமாக நினைத்தல் பாபம். பக்தராகிய ஏகநாதர் தம் சற்குருவின் அருளில் நாட்டமுற்றவராய் அவருடைய படிக்கந்தி துள்ளளைத் தவறாம லுட்கொண்டுவந்தார். அவர் சுவைத்த தாம்பூலத்தை மீண்டும் சுவைப்பார். தேவாமிர்தம் இதற்கு நிகராகுமோ என்பார். அவர்க்கு அச் சமயங்களிலிருந்த நினைவுகளை அவர் ஒருவருக்கும் சொன்னவரல்லர். ஜநார்த்தனர் **அமிர்தாநுபவம், ஞானேசுவரி** யென்னும் புஸ்தகங்களை உரக்க வாசிக்கும்பொழுது ஏகநாதர் ஆனந்தமாய்க் கவனத்தை அதிலேயே செலுத்திக் கேட்டுக்கொண்டிருப்பார்.

**தருவுருத் தாங்கிப் பகைப் படையை வெல்கை**

காலைக்கடன்களெல்லாம் தீர்ந்தவுடனே அரசனைப் போய்க் காணுவது ஜநார்த்தனருக்கு வழக்கம். அங்கு உத்தியோகக் கடமைகளைச் செய்து முடித்துவிட்டு வீட்டுக்குத் திரும்புவார். ஒருநாள் நாலாவது நாழிகையில் தேவகிரியைப் பிடிக்கும் நோக்கத்தோடு ஒரு பெரும் படை திடீரென்று வந்தது. ஒற்றர் வந்து அரசனுடைய சத்துரு ஒருவன் படையெடுத்து வருவதாகச் சொல்லினர். அரசன் நடுங்கினன். சேவகர் ஓடி ஜநார்த்

தனர் வீட்டிற்கு வந்து ஒரு பெரும் படையோடு சத்துரு வந்தானென்றும் அவர் உடனே வரவேண்டு மென்றும் சொல்லினர். ஜநார்த்தனர் ஸ்நானாதிகள் செய்து பூஜை முடித்து நிஷ்டையி லமர்ந்திருந்தார். அச்சமயத்தில் அவர்க்கு இச்சங்கதி தெரிவித்தல் அயுக்தமன்றோ ? அற்புதச் செயல்கள் புரியப் பிறந்த ஏகநாதர் ஓர் அற்புதம் புரிந்தார். ஜநார்த்தன ருடைய வடிவந் தாங்கினார். அது வேறொருவருக்குந் தெரியாது. தம்முடைய குருவின் உடையை வேக மாகத் தரித்துத் தம் ரூபத்தையும் அவர் ரூபமாக மாற்றினார். அவர் உடைவாளை எடுத்துக்கொண்டு பல் லக்கில் ஏறியிருந்தார். பேச்சிலும் நடையிலும் கொஞ் சங்கூட வேறுபாடு தெரியவில்லை. அரசன் சபையிற் புகுந்து எல்லாச் சங்கதியும் அறிந்தார். அரசன் திகைப் புற்றிருந்தான். "ஒரு பெருஞ் சத்துருப் படை வந் துளதே ! நாம் என்ன உபாயம் செய்யலாம் ?" என்று ஆவலாகக் கேட்டான். ஏகநாதர் "உம்முடைய புண் ணிய பலத்தால் இந்தச் சத்துருவை இதோ வென்று விடுகிறேன்" என்றார். படைத்தலைவரை "உடனே தயாராகுங்கள்" என்று கட்டளையிட்டார். அப் பொழுதே பேரிகைகள் முழங்கின. பலவித வாத்தி யங்களும் ஒலித்தன. படையும் நகரைவிட்டு வெளிப் பட்டது. அவதார புருஷராகிய ஏகநாதர் தம் அதிசய சக்தியைச் சத்துருவுக்குக் காட்டினார். அவர் படையோ சிறியது, ஆயினும் சத்துருவுக்கு அது மிகப் பெரியது போற் றோன்றிற்று. அம்புகள் சணசணவென்று பாய்ந் தன. சஸ்திரங்கள் கணகணவென்று தாக்கின. வீர பராக்கிரமங்கள் அதிகரித்தன. கொலை மிகுந்தது. நாலுகடிகை போர் நடந்தது. ஆகாசமெங்கும் தூளி

பாந்தது. பின்னும் வைணவ வீரர் சளித்தாரில்லை. ஆனால் சத்துரு படையோ ஓடத் தொடங்கிற்று. சத்துருவுக்குத் திகில் மூடிப் போயிற்று. "ஐயோ கெட்டோமே" என்றனன். ஓர் உயர்ந்த உத்தியோகஸ்தன் படைத்தலைவனிடம் வந்து "சமாதானம் பேச வந்தோம்" என்றான். அதைக் கேட்ட சற்குருபக்தராகிய ஏகநாதர் இரங்கிச் சத்துருவரசனோடு விளையாட்டாகப் பேசி அவனைத் தம் அரசனிடம் கொண்டுவந்து காட்டி, அவனுக்கு ஆடையாபரணாதிகள் வழங்கி, "உன் ஊர் போய்ச் சேர்" என்று அனுப்பினார். இவ்விதமாக வெற்றி பெற்று ஏகநாதர் வீட்டுக்குத் திரும்பித் தம் உருவத்தை மாற்றி மீண்டும் தொண்டிற்கு ஆயத்தராய் நின்றார்.

**ஜநார்த்தனர் பெற்ற பரிசும் அடைந்த ஆச்சரியமும்**

இவ்வளவு நேரமும் ஜநார்த்தனர் தம் பூஜையறையில் நிஷ்டையி லிருந்தார். அவர்க்கு நிஷ்டை முடிந்து நினைவு வந்தது. வெளியில் நடந்த சங்கதி யொன்றும் அவர்க்குத் தெரியாது. வழக்கம்போல அவர் விக்கிரகத்துக்கும் அக்கினிக்கும் ஆராதனை பண்ணிச் சாப்பாட்டை முடித்தார். பின் நாலு நாழிகை உறங்கினார். அப்புறம் பல்லக்கை வரவழைத்து ராஜசபைக்குப் போனார். அவர் வருவதைக் கண்ட அரசன் அன்போடெழுந்து தம்மருகில் அவரை யிருத்தி, "இன்று வந்த பகைப் படை பெரிது. ஆயினும் அதனைப் பொருட்படுத்தாது நீர் எதிர்த்துச் சென்று நல்வெற்றி பெற்றீர்" என்று புகழ்ந்தான். மந்திரத்திலுள்ள மற்றைப் பிரதானிகளும் அவ்வாறே அவரைப் புகழ்ந்தனர். பின்னர்

பீதாம்பரங்கள் வரவழைத்து, "நீர் உடன்கொண்டு போன படை சிறிதாயினும் பெற்ற வெற்றி பெரிது" என்று சொல்லி, அரசன் அவற்றை அவர்க்கு நல்கினான். அருகிலுள்ளாரனைவரும் "ஜய ஜய" முழக்கஞ் செய்தனர். மாகதர் அவர் வெற்றிப்பாடுகளை எடுத்துப் பாடத் தொடங்கினர். ஜநார்த்தனர்க்கு ஒன்றும் புலப்படவில்லை. 'இஃது என்ன விபரீதம்! நான் வீட்டில் நிஷ்டையிலிருந்தேனே. இதெல்லாம் எப்படி நிகழ்ந்திருக்கும்?' என்று தமமுள்ளே ஆலோசித்துப் பின் 'இது ஏகநாதன் செயலே. அவன் என்னுருவத்தைத் தாங்கி இந்தக் காரியத்தை நடத்தியிருப்பான். ஆயினும் அதை நான் வெளியிடுதல் தகுதியன்று, ரஸாபாசமாய்ப் போம்' என்று தீர்மானித்து, ஜநார்த்தனர் வீட்டுக்குத் திரும்பிவந்து ஏகநாதரை ஆர்வத்தோடு தழுவி முதுகில் தட்டிக் கொடுத்து, "சற்குருபத்தனே! நீயே பாக்கியவான். நீ ஓர் அற்புத காரியம் செய்தாய். அதை நான் உணர்கிறேன்" என்றார். இவ்வமிருத வசனத்தைக் கேட்ட ஏகநாதர் பக்திபரவசராய் அவர் பாதத்தில் விழுந்து, "ஸ்வாமிகளிடத்திலுள்ளது சூத்திரம். அஃது என் காரியமன்று" என்றார்.

சற்குரு சீடன் நிலையறிகை

இன்னும் சின்னாள் சென்றபின் ஒருநாள் ஜநார்த்தனர் ஏகநாதரை நோக்கி, "கணக்குகளெல்லாம் எழுதி வைத்திருக்கிறாயே, கொண்டுவா பார்ப்போம்" என்றார். "அப்படியே" என்ற சற்குருபக்தர் தாமாகவே கணக்குப் பாக்கி கட்டுக்குப் போனார். அதில் ஒன்றரைத் தம்பிடி வித்தியாச மிருந்தது.

இஃது அவருக்கு மனத்துயரம் விளைத்தது. விளக்கிற்கு நிறைய எண்ணெயிட்டுக்கொண்டு கணக்கை மீண்டு மீண்டும் கூட்டிப் பார்த்தார். இரவில் இரண்டரை யாமம் தூக்கமின்றிக் கழிந்தது. குருவுக்கு நஷ்டம் வரக்கூடாதென்று அவர் கணக்கில் அகப்படாத ஒன்றரைத் தம்பிடிக்காக அவஸ்தைப்பட்டுக்கொண்டிருந்தார். திடீரென்று கணக்குச் சரிப்பட்டுவிட்டது. அவருக்கு ஆனந்தம் பொங்கத் துடையைத் தட்டிக்கொண்டு உரக்கச் சிரித்தார். அப்பொழுதுதான் ஜநார்த்தனரும் பின்னே வந்து நின்று அவரைக் கவனித்துக் கொண்டிருந்தார். "என்ன நன்மை கண்டாய்? நீ இப்பொழுது சிரித்ததற்கு ஏதுவான சந்தோஷம் யாது?" என்றார். சற்குரு குரல் கேட்டதும் ஏகநாதர் அவர் பாதத்தை நெற்றியால் தொட்டு, "கணக்குப் பார்க்கையில் ஒன்றரைத் தம்பிடி பிசகு வந்தது. இப்பொழுதுதான் அதைக் கண்டுபிடித்தேன். அதனால் சந்தோஷப் பட்டேன்" என்றார். ஜநார்த்தனரும் "இப்படியே நீ கிருஷ்ணனிடத்தில் உன் மனத்தை நிறுத்தவேண்டும். அப்படிச் செய்தாலே இம்மையிற் பெரும்பயனடையலாகும்" என்றார். இவ்வளவுதான் ஜநார்த்தனர் சொன்னது. ஏகநாதர் சற்குரு பாதத்தில் தம் லேகனியை வைத்து, "நீர் சொன்ன இதைக் கேட்கத்தான் நான் ஆவலாயிருந்தேன். நீர் இப்பொழுது நான் செய்ய வேண்டுவதைச் சொல்லிவிட்டதனால், உம்முடைய வார்த்தை வீண்போகாது" என்று பக்தி மேலீட்டால் ஜநார்த்தனரைப் புகழ்ந்து ஓர் அபங்கம் பாடிப் பின் கணக்குப் புத்தகத்தை மடித்து அப்புறம் வைத்தார்.

ஜநார்த்தனர் கால் கை சுத்திபண்ணு மிடத்தை ஏகநாதர் தம் கையாலேயே சுத்தஞ் செய்தார். அவ் விடத்தைச் சாணங் கொண்டு மெழுகிக் கோலங்களு மிட்டு வைத்தார். ஒருநாள் சற்குரு "யார் தக்கூஸைச் சுத்தம் பண்ணுகிறது? சொல், அவ்விடம் சாணங் கொண்டு மெழுகி எப்பொழுதும் கோலமு மிடப்பட்டிருக்கிறது. தோட்டி இது செய்யமாட்டான். பின் யார் இது செய்யக்கூடும்!" என்று கேட்டார். ஏகநாதர் "நான் அவ்வளவு நன்றி யில்லாதவனு? என்னுடைய ஸ்வாமிக்கு எல்லாப்படியாலும் பணிசெய்ய என் உடலை ஒப்பித்தேன்" என்றுர். இதனைக் கேட்டதும் சற்குருவுக்கு மனமுருகி 'இவனை எனக்குப் பணி செய்ய விடப்படாது. ஏகநாதன் சாமானிய மனிதனல்லன். லோக குருவாகிய ஸ்ரீ தத்தாத்ரேயனை அவன் பிரத்தியக்ஷமாய்க் காணும்படி செய்வது என் கடமை. எப்படிப்பட்ட புத்திமானைத் தத்தாத்ரேயர் காண்பார்!' என்று தம்முள்ளே சொல்லிக் கொண்டார்.

**ஏகநாதர் அபூர்வத் தொண்டு**

ஜநார்த்தனருடைய அரசன் தன்னுடைய காரிய தரிசிகள் வெள்ளிக் கிழமைகளில் தன்னை வந்து காணவேண்டுவதில்லை யென்று கட்டளை பிறப்பித்திருந்தான். இதனுல் ராஜ சபைக்குப் போவதற்குப் பதிலாக ஜநார்த்தனர் தமக்கு அதி முக்கியமான சொந்த வேலைகளைச் செய்வதில் அத்தினத்தைக் கழிப்பது வழக்கமாயிற்று. சமீபத்திலுள்ள மலை மேட்டில் பெரிய ஏரியொன்றிருந்தது. அதன் ஜலம் வெகு சுத்தமாயிருக்கும். அங்கு ஜனங்கள் சஞ்ச

**ஜநார்த்தனர் தத்தாத்ரேயரைக் காணுமிடம்**

ரிப்பதில்லை, அங்கு புஷ்ப பலங்கள் நிறைந்து அழகான ஒரு வனமும் இருந்தது. அந்தக் காட்சியைப் பார்த்தாலே மனத்துக்குச் சாந்தி உண்டாகும். அவ்விடத்தை ஒருகா லடைந்தவர்க்கு அதை விட்டு வர மனம் வராது. நாடெங்கும் தேடினாலும் அவ்வளவு அழகிய இடத்தைக் கண்டுபிடிக்க முடியாது. ஸ்ரீ தத்தாத்ரேயர் அவ்விடத்துக்கு வருவது வழக்கம். அவ்விடத்தில் அனுஷ்டானஞ் செய்யும் சற்புருஷன் எவனாயினும் அவரைப் பிரத்தியக்ஷமாகக் காணலாம். ஆதலால் ஜநார்த்தனர் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் மலைமீ தேறி இவ்வேரியிற் குளித்துத் தமக்கு வழக்கமான அநுஷ்டானாதிகளைச் செய்வார். அப்புறம் களிமண்ணால் ஆயிரம் லிங்கங்கள் உண்டாக்கி அவற்றிற்குக் கிரமமாகப் பூஜையாதிகள் செய்வார். இவர் வழிபாடுகள் முடிந்ததும் ஸ்ரீ தத்தாத்ரேயர் பிரத்தியக்ஷ மாவார். ஒருவரை யொருவர் சந்திக்குங்கால் இருவருக்கும் ஆனந்தமே. அவர்கள் ஆத்மானந்தத்தைப்பற்றிச் சல்லாபித்துக் கொண்டு ஆனந்த வெள்ளத்துள் திளைப்பர்.

**குரு சீடனுக்கு தத்தாத்ரேயரைக் காட்ட நினைத்தல்**

ஒருநாள் ஜநார்த்தனர் 'ஏகநாதன் ஒரு சற்குரு பக்தன். அவன் எனக்கு வஞ்சனையில்லாது வழிபாடாற்றுகின்றான். அவனுக்கு ஸ்ரீ தத்தாத்ரேயரைப் பிரத்தியக்ஷமாகக் காட்ட வேண்டும். அவர் ஏகநாதன் புத்தியை மெச்சி அவனுக்குக் கருணையால் விசேஷ வரமொன்று கொடுப்பார்' என்று எண்ணினார். இந்த எண்ணத்தோடு ஒரு வெள்ளிக்கிழமை மலைக்குப் புறப்படுகிற சமயத்தில் அவர்

ஏகநாதரைத் தம்மோடு வரும்படி சொன்னார். ஏகநாதர் ஆனந்தமேலிட்டுக் குருவின் பாத தாமரைகளை வணங்கி அவருடைய ஆசனத்தையும் பூஜைப் பையையும் எடுத்துக்கொண்டு புறப்பட்டார். ஜநார்த்தனர் ஏகநாதரைக் கையைப் பிடித்து மலைமேற் கொண்டு போனார். அங்கு இருவரும் தனியா யிருந்தபொழுது தமக்கு ஸ்ரீ தத்தர் அவ்விடத்தில் வெளிப்படுவதைப் பற்றி இவருக்குச் சொல்கையில், "மாயா சரீரத்தில் ஆபாச உருவந் தாங்கியும் அவர் அன்போடு வெளிப் படுவார். ஆகையால் அவரைப் பார்க்கும்பொழுது மனத்தில் சந்தேகமொன்றுங் கொள்ளாதே. அவரை யன்றி வேறு மனித னொருவனும் இந்த மலைப் பிர தேசத்துக்கு வரான்" என்று சொல்லி வைத்தார்.

**தத்தாத்ரேயர் வெளிப்படுதல்**

பின் ஜநார்த்தனர் ஏரியில் குளித்து அநுஷ்டானாதிகளை முடித்து லிங்க பூஜை தொடங்கினார். ஏகநாதர் களிமண் திரட்டிக் கொண்டுவந்து தர ஜநார்த்தனர் ஆயிரம் லிங்கங்கள் செய்து கிரமப்படி பூஜித்தார். பூஜை முடித்து லோக குருவைத் தியானித்தார். அநசூயா புத்திரர் திடீரென்று மகம்மதிய னுருவங் கொண்டு வெளிப்பட்டார். உடல்மேல் தோல் போர்த்திருந்தார். கண்கள் பெரிய கோவைப் பழங்கள் போலிருந்தன. ஜபமாலை கையிற் கொண்டு அவர் நிர்க்குணப் பிரமத்தைத் தியானித்திருந்தார். அவரோடு ஒரு காமதேனுவும் வந்தது. பார்ப்பவர் கண்ணுக்கு அது ஒரு பெண் நாய் போல் தோன்றிற்று. ஜநார்த்தனர் தம் அகக்கண்ணால் அவரைக் கண்டு நமஸ்கரித்தார். தத்தாத்ரேயரும் ஜநார்த்தனரும் ஒருவரை

யொருவர் பிரியமாகத் தழுவிக்கொண்டனர். ஸங்கீத வாத்தியத்துக்கும் அதன் ஒலிக்கும், அமிருதத்துக்கும் அதன் இனிமைக்கும் பேதமில்லாமை போல இருவர் அன்பும் ஒத்தது. இருவரும் கூடியிருந்து ஆத்மா னந்தத்தைப் பற்றிச் சம்பாஷித்தனர். ஏகநாதர் ஆனந் தத்தோடு கேட்டுக்கொண் டிருந்தார். ஸ்ரீ தத்தாத் ரேயர் தம் உடைக்குளிருந்த ஒரு மண் பாத்திரத்தை வெளியே எடுத்து அதை ஜநார்த்தனரிடம் கொடுத்து, பக்கத்தி லிருந்த நாயின் பாலைக் கறக்கச் சொன்னார். உடனே ஜநார்த்தனரும் பாலைப் பாத்திரம் நிறையக் கறந்து அவதூத ரிருந்த விடத்தே கொண்டுபோய் முன்னே வைத்தார். அவரும் உலர்ந்த ரொட்டித் துண்டுகள் சிலவற்றை எடுத்து அப் பாலில் பொடி யாக்கி இட்டார். அஃது உண்மையில் தேவாமிர்தம். பார்க்கிறவனுக்கு அது பழைய ரொட்டிபோல் தோன் றியது. பக்தனுடைய பக்தியை அறியவே ஸ்ரீ தத்தாத் ரேயர் அவர்கள் முன்னிலையில் இந்த விபரீதச் செயல் செய்தார். ஏகநாதருக்கு இது விளங்கிற்றாயினும் அவர் மனத்தில் சிறிது ஐயம் இருந்தது. அவதூதர் ஜநார்த்தனரை நோக்கி, "பக்கத்திலிரு, நாமிருவரும் உண்போம்" என்றார். ஜநார்த்தனருக்கு ஆனந்தம் பொங்கியது. ஜநார்த்தனரும் தத்தாத்ரேயரும் ஒரு பாத்திரத்திலிருந்து எடுத் துண்டார்கள். இந்த ஆனந்தாமிர்தத்தால் அவர்கள் பசி தீர்ந்தவுடனே அவர்கள் கைகளைக் கழுவி வாய்பூசி, வாயைச் சுத்த மாக்குவதற்குத் தாம்பூலம்தரித்துத் தத்தமிடத்தில் அமர்ந்தனர். ஏகநாதரைப் பாத்திரத்தை ஏரியில் கழுவி வரும்படி சொல்லினர். அவரும் ஆஹா வென்று சொல்லிப் போய் நீரோரம் இருந்து,

'இந்தப் பெரிய பாக்கியம் என் கைக்கெட்டியது. நான் ஆனந்தமாகக் குடிப்பேன். என் உயிர் ஈடேறுவதற்கு இதுவே வழியாகும்' என்று மனத்தி லெண்ணி, 'என்போல் இப்பிரபஞ்சத்தில் அதிர்ஷ்ட சாலி யார் இருக்கக்கூடும்!' என்று தம்முட் சொல்லிக் கொண்டு மண்பாத்திரத்தை உதட்டண்டை வைத்தார். அதனைப் பார்த்துக்கொண்டிருந்த ஜநார்த்தனர் "இந்த என் அடிமைக்குப் பிரத்தியக்ஷமாகி அவனை ஆட்கொள்ளும் ஸ்வாமி! நீர் துருக்க வுருத்தாங்கி வந்ததனால் அவன் உம்மை வணங்கவில்லை. உம்முடைய உண்மையுருவை அவனுக்குக் காட்டும்" என்று ஸ்ரீ தத்தாத்ரேயர் பாதங்களைத் தொட்டார். அவரும் "ஏகநாதன் சிறுவனா? அவன் உலகத்தை ரக்ஷிக்க வந்த விட்டல் அவதாரம். மனிதர் அவன் கீர்த்தனங்களை ஆவலோடு கேட்டுப் பக்திமார்க்கத்துக்கு வருவர். அவன் கவிதா சாமர்த்தியத்தால் கிரந்தங்கள் செய் வான். வியாசர் வேதங்களைக் கடைந்து ஸ்ரீ பாகவதமாகிய வெண்ணெய் எடுத்தார்; ஏகநாதன் அதன் அர்த்தத்தைத் தன் சொல்லால் தெளிவாக்குவான். வால்மீகி ராமாயணத்தையும் பிராகிருத பாஷையில் செய்வான். இவனுடைய காவியங்களை எவன் வாசித்தாலும் அவன் ஆத்மாவுக்குப் பகவான் பிரத்தியக்ஷ மாவார். அவன் புகழ் சூரிய சந்திரர் உள்ளவரை அழியாது" என்னும் இவ்வாசீர் வசனங்களைச் சொல்லுங்கால் அவர் உருவம் மாறிற்று. அவரருகிற் கிடந்த பெண் நாயும் காமதேனுவாக மாறியது. துருக்க வடிவத்தை யொழித்து ஆறு கையும், நீண்ட கண்ணும், லோக பூஷணமாகிய முகமு முடைய அழகிய ஸகுண ரூபியாகி ஸ்ரீ தத்தாத்ரேயர் ஏக

நாதரைத் தம்மருகில் அழைத்தார். ஏகநாதர் அவர் பாதங்களைத் தம் நெற்றியால் தொட்டு அவற்றைப் பிரியமாகத் தழுவினார். ஸ்ரீ தத்தாத்ரேயர் தம் ஆறு கைகளையும் நீட்டி ஏகநாதரைத் தழுவி அவர் முகத்தைத் தடவினார். அப்புறம் அந்தர்த்தானமானார். இவ்விதமாக ஜநார்த்தனர் கிருபையால் ஏகநாதர் ஸ்ரீ தத்தரைப் பிரத்தியக்ஷமாய்ப் பார்த்தார். பின் ஏகநாதரோடு ஜநார்த்தனர் தம் வீட்டுக்குத் திரும்பினார்.



## இரண்டாம் அத்தியாயம்

**ஏகநாதர் மன நிலை**

ஸ்வாமியின் கிருபையால் ஏகநாதர் மனத்தில் பூர்ணஞான முண்டாய்ச் சாந்தி யுண்டாயிற்று. அவர் ஸ்ரீ தத்தரிடம் வரம் பெற்றிருந்தாராயினும் ஜநார்த்தனருக்குப் பணி செய்வதில் குறை வைக்கவேயில்லை. முன்னையினும் அதிக அக்கறையோடு ஸ்வாமி பணியைக் கவனித்துக் கொண்டு, மனம் உபசாந்தியடைந்தவராய் ஸ்ரீ புருஷோத்தமரை வழிபட்டார். ஆத்ம ஞானத்தாலே அவருக்கு அகத்துப் பூர்ண சாந்தியிருந்தது, சற்குரு வரப் பிரசாதமும் கிடைத்திருந்தது. ஆயினும் அவர் சோம்ப லின்றி எப்பொழுதும் பணி செய்யத் தயாரா யிருந்தார்.

அப்பொழுது ஜநார்த்தனர் ஒன்று நினைத்தார்: 'மெய்யாகவே மூவுலகிலும் இவனைப்போலச் சற்குரு பக்தன் இல்லை. இவனுடைய அன்பு அற்புதமாய்

இருக்கிறது. உலகத்தை உய்விக்கும் பொருட்டு ஸ்ரீ பாண்டுரங்கரே இவ்வாறு அவதரித்துள்ளார். இனி இவனை என் ஏவலில் வைத்திருப்பேனாயின் இவனுக்கு நான் செய்யவேண்டிய சிறந்த கடமை தவறியவனாவேன்.' என்று நினைந்தவராய் வீட்டுள் சென்று ஏகநாதரைத் தேடினார். அவர் தனியே யிருந்து ஸ்ரீ தத்தர் புகழைப் பாடிக்கொண் டிருந்தார். ஜநார்த்தனரைக் கண்டவுடனே அவர் எழுந்து வணங்கினார். சற்குரு தம்மிடத்திற்கு வந்து இருந்து ஏகநாதரை நோக்கி, "சற்குரு கிருபையால் ஆத்மஞானத்தை யடைந்துள்ளாய். ஆயினும் சகுணபக்தியை விடப்படா தென்பதை ஞாபகத்தில் வை. யோகிகள் இந்திரியங்களை யடக்கி விஷயங்களை மறக்கின்றனர். ஆயினும் பக்தியில்லாமல் அவர்களுக்குச் சகுணதெய்வம் பிரத்தியக்ஷமாகாது. யோக சக்தியால் அவர்கள் சித்திகள் அடைகின்றார்களாயினும் பிரேமையோடு கூடிய பக்தியிருந்தாலன்றி ஸ்ரீபதியைக் காணுதல் கூடாது. ஒருவன் எல்லா வுயிரையும் தானாகவே பார்க்கலாம்; உடல் நினைப்பேயின்றித் தன்னை மறந்து விடலாம். ஈதெல்லாம் அடைந்தாலும் அவனுக்குச் சகுண தெய்வம் பிரத்தியக்ஷமாகாது. இது கிடைப்பது அருமை. ஒருவனுக்குப் பிராணன் உள்ளவரை அவன் சகுண தெய்வத்தைப் பக்தி செய்யவேண்டும். இனி நீ செய்யவேண்டியதின்னதென்று சொல்லுகிறேன் கவனித்துக் கேள்: தேவகிரிக்குப் பின்னால் உள்ள பிரதேசத்தில் சூலபஞ்சனமென்றொரு மலை யுண்டு. அங்குச் சூரிய குண்டமென்றொரு தீர்த்தமுளது. அஃது அழகான அமைதியான இடம். சாதகர் இந்த இடத்

துக்குச் சென்று தங்கள் அநுஷ்டானாதிகளைச் செய்வது வழக்கம். இங்குப் பகவான் தம்முடைய சகுண ரூபத்தோடு அவர்களுக்குப் பிரத்தியக்ஷமாகிறார். இடம் புனிதமானது, சுத்தப்படுத்துவது. ஆதலால் கேளப்பா என் இதயத்துக்கு உகந்த குழந்தாய்! உடனே அவ்விடத்துக்குப் போய் ஸ்ரீ பாண்டுரங்கருடைய திருநாமங்களைப் பாராயணஞ் செய்து கொண்டு சூரியகுண்டத்தில் ஸ்நானஞ் செய்து, மனத்தை ஏகாந்தப்படுத்திப் பரவிஷ்ணுவைத் தியானஞ்செய். யாரோடும் பேசாதே. என்னுடைய கட்டளையே உனக்குப் பிரமாணம். தற்செயலாய் அகப்படுவதை உண்டு திருப்தி யடை. என்னைப்பற்றிக் கவலைப்படாதே, நான் உன்னருகிலேயே இருக்கிறேன். ஒரு காலத்தில் மார்க்கண்டேய ரிஷி அங்கு வசித்தார் என்று புராணங்கள் சொல்லுகின்றன. ஆதலால் பிரேமை நிறைந்த இருதயத்தோடு மனத்தை ஸ்ரீ கிருஷ்ணனிடத்தில் நிறுத்து. அங்கு ஏதாவது அபூர்வமாகக் கண்டாயாயின் என்னிடத்தில் வந்து சொல்லு'' என்று உபதேசித்தார்.

**சற்குரு வியல்பு**

நம் சற்குருவின் இவ் வுபதேச மொழிகளைக் கேட்கும்பொழுது ஏகநாதர் மனம் ஆனந்தத்தால் குதித்தது. ஏகநாதர் உண்மையும் அன்பும் நிறைந்த பக்தர், குருவும் ஒரு வழிபாட்டு முறையைக் கற்பித்தார். ஆதலால் அவர் பேரானந்த மடைந்து குருவின் பாதத்தை வணங்கிப் புறப்பட்டார். குருமார் பலர் ஞானோபதேசம் செய்கின்றார்களே, சகுண தெய்வபக்தியைக் கற்பிக்காது விடுகின்றனர். ஜநார்த்தனர் அன்னாருள் ஒருவரல்லர்.

பக்தியில்லாத ஞானம் குழறுவாயன் குழறுதலைப் போலும். ஆதலால் பக்தியை விட்டு ஞானத்தை மாத்திரம் உபதேசிப்பவனும் பகவானோடு பக்தன் கூடியிருத்தல் பொய் என்று வாதிப்பவனும் துன் மார்க்கரே யாவர். இந்த ஜநார்த்தனர் உண்மைச் சற்குரு.

**ஏகநாதர் சாதனம் பயிலுகை**

ஏகநாதர் சூலப மலை போய்ச் சேர்ந்ததும் என்ன செய்தார்? அழகான அந்த இடத்தைப் பார்த்தார். பரமசாந்தம் அவர் மனத்திற் குடி கொண்டது. சூரிய குண்டத்தில் ஸ்நானஞ் செய்து அனுஷ்டானாதிகளை முடித்தார். பின் கிழக்கு நோக்கி யிருந்து மனத்தை ஏகாக்ரப்படுத்திப் பரமபக்தியோடு பாண்டுரங்க விக்கிரகத்தை மனத்தி லெண்ணினார். அவர் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு தியானத்தி லிவ்வா றமர்ந்த பொழுது இந்திரைகேள்வர் ஏகநாதர்க்குப் பிரத்தியக்ஷ மானார். ஏகநாதருடைய விருத்தி அவருடைய ரூபத்தி லொடுங்கிச் சரீர நினைப்பே அற்றது. அந்த மலை மேல் பெரிய பாம் பொன்றிருந்தது. தியானத்தி லிருந்த ஏகநாதரைப் பார்த்தவுடனே அஃது அவரைக் கடிக்க ஓடிற்று. அவரைத் தொட்டதும் அதனுடைய இயற்கைக் கெட்ட குணம் அதனை விட்டொழிந்தது. அஃது அன்பு நிறைந்து அவரைக் காத்தது. எப்படி? ஏகநாதர்க்குச் சீதோஷ்ணங்களால் துன்பம் நேராம லிருத்தற்பொருட்டு அஃது அவர் உடம்பை முழுதும் சுற்றிக்கொண்டு தன் வாலின் நுனியை அவர் கொப்பூழிடத்தும் விரிந்த படத்தை அவர் தலைக்குமேலும் வைத்தது. ஏகநாதர்க்கு

ஸ்மரணை வந்து அவர் சரீரம் சிறிது அசைந்த போது பாம்பு நழுவி யோடி மறைந்தது. ஏகநாதர் ஆத்மா சகுண ஈசுவரனோடு ஐக்கியப்பட் டிருந்த தனால் அவர்க்குச் சரீர நினைப்பே யில்லா திருந்தது, பாம்பு தம் முடலைச் சுற்றியிருந்தமை அவர்க்குத் தெரியாது.

**குடியானவன் பணிவிடை**

அம் மலையடியில் ஒரு சிறு குடிலிருந்தது. அதில் ஒரு வைஷ்ணவக் குடியானவன் வசித்தான். அவன் ஒரு பக்தன். முந்திய பிறப்பில் தவம் பூர்த்தி யுறும விப்பொழுது பிறந் திருந்தபடியால் அவன் தூய நடையுடையனு யிருந்தான். அவன் குடிலின் முன் துளசிமாட மொன்று காணப்பட்டது. அவன் ஸ்நான பூஜைகள் ஒழுங்காகச் செய்து வந்தான். அவன் துணிகள், பாத்திரங்கள் சுப்ரமாயிருக்கும். ஸ்நானஞ் செய்யாமல் உண்பதில்லை. தன்னுடைய தொழிலைச் செய்யும்பொழுதும் பகவந் நாமத்தை ஜபித்துக் கொண்டே யிருப்பான். அவனுடைய மனைவியும் பரம பதிவிரதை; அவனைப் போலவே ஒழுங்கான நடையுடையவள். தன் கணவன் மனப் போக்கை யறிந்து சாதுக்களையும், ஞானிகளையும் உபசரிப்பாள். பசித்தோர்க்கு அன்னமும், தவித்தோர்க்கு நீருமளிப்பாள். பரோபகார சிந்தனை நிறைந்தவள். பொய் சொல்லாள். சுலப மலைமேல் சாது எவனுவது அநுஷ்டானதிகள் செய்யப் பார்த்தாளாயின் அவனுக்கு அன்போடு பால் கொண்டு வந்து குடிக்கக் கொடுப்பாள். சமீபத்தில் அம் மலையில் ஒரு சம தரையான இடத்தில் அக் குடி

யானவன் தானியம் பயிரிட் டிருந்தான். பயிர் செழிப்பாய்க் கதிர் முற்றுகிற பருவத்தில் அவன் அங்கேயே காவலிருப்பது வழக்கம்.

**குடியானவன் ஏகநாதர்க்குப் பாலளித்தல்**

ஏகநாதர் அநுஷ்டானாதிகள் முடிக்கப் போன பொழுது அவன் பார்த்திருந்தபடியால் வீட்டுக்குப் போய்ப பால் காய்ச்சி யெடுத்துக் கொண்டு ஏகநாதரிருந்த விடத்துக்குப் போனான். ஏகநாதர் நித்தியாதிகள் முடிந்து வாளா இருந்தார். குடியானவன் அவர் காலில் விழுந்து வணங்கி, "அடியேன் காய்ச்சின பால் கொண்டு வந்திருக்கிறேன். சுவாமிகள் குடித்தருள வேண்டும்" என்று விண்ணப்பித்தான். ஏகநாதர் பாலை வாங்கி அவனை ஆசிர்வதித்து, "இந்தப் பால் ஸ்ரீகிருஷ்ணனுக்கு அர்ப்பிதம்" என்று அதனைக் குடித்தார். அவன் பரமதிருப்தனாய் வீட்டுக்குத் திரும்பினான். தினந்தோறும் அவன் மனைவி அவன் சொற்படியே பாலை எடுத்துக்கொண்டு கழனியண்டை வருவாள். அவர்கள் இதை ஏகநாதர்க்குக் கொடுத்துப் பின் தாம் உணவு உண்ணுவார்கள். பூர்வ புண்ணிய மிகுதியிருந்தாலன்றி இம்மாதிரி ஸந்தர்க்குச் சேவை செய்யும் சந்தர்ப்பம் வாய்க்காது. இதனால் ஈசுவரனுக்கு ஒரு கடமை ஏற்பட்டு ஸந்த சேவை செய்பவனை அவர் சம்சார சாகரத்தினின்று கரையேற்றுகிறார். இந்தக் குடியானவன் பாக்கியசாலி. அதனாற்றான் அவன் இருதயம் நல்லதாயிருந்தது. லோக விருத்திகளை விடாதிருக்கையிலேயே பரமபுருஷார்த்தத்தைச் சம்பாதித்துக் கொண்டான். அவன் நற்குணத்துக்கு அளவில்லை.

**மனைவி தெய்வச் செயலால் அதிகாலையில் பால் கோணால்**

ஒருநாள் அவன் மனைவி நள்ளிரவில் மா வரைத்தற் கெழுந்தாள். இறைவன் புகழைப் பாடினள்; சீக்கிரமாக மா அரைத்து முடிந்தது. சந்திரன் நன்றாகப் பிரகாசித்தபடியால் போது விடிதற்காயிற்றென்றெண்ணினள். பசுவின் பாலைக் கறந்து பாலை வேறு வேறு பாத்திரங்களில் வைத்தாள். அவ்வளவு பால் கறத்தற்கு நேரமாக வில்லையாயினும் அவள் பால் நிறையக் கறந்துவிட்டாள். பாலைப் பிந்தளைப் பாத்திரத்தில் ஜாக்கிரதையாகச் காய்ச்சி மேல் ஒரு தட்டைக் கொண்டு மூடினள். காலைக்கடன்களைக் கழித்துக் குளிர்ந்த நீரில் ஸ்நானஞ்செய்து சமையல்செய்து முடித்தாள். சூரியன் உதய மாயிற்று. 'மா வரைத்தற்கு நடுராத்திரியே எழுந்துவிட்டேன் போலிருக்கிறது. வயலுக்கு இப்போதே போகாதிருந்தால் தாகம் சில்லென்றுய்விடும்' என்று தனக்குட் சொல்லிக்கொண்டு அச்சுந்தரி ஆகாரக் கூடையைத் தலைமீது தூக்கிவைத்துப பாற் பாத்திரத்தைக் கையிலெடுத்துக் கொண்டு விரைந்து நடந்தாள். தன் பிரிய பத்தினியை வயல் வேலியருகிற் பார்த்ததும் குடியானவன் பாற் பாத்திரத்தை வாங்கி வைத்துவிட்டு ஸ்நானத்துக்குப் போனன். அநுஷ்டானங்களை முடித்து வந்து மனைவியைப் பார்த்து, "ஆகாரம் மிகக் காலம்பெறக் கொண்டுவந்துவிட்டாயே, என்ன காரணம்? சொல்லு. எனக்கு இன்னும் பசிக்கவில்லை. இன்று விரதநாளன்று, துவாதசியு மன்று. அத் தபசி இன்னும் அனுஷ்டானம் முடிக்கவில்லை. அவர் சாப்பிட்டாகிற வரை நாம் சாப்பிடக் கூடாதே" என்றான். அவளும்

"என்னவோ சீக்கிரமாக விழித்துக் கொண்டேன். ஆகாரம் ஆறிவிடப் போகிறதே என்று இப்பொழுதே கொண்டு வந்தேன். மலைமேற் போய்ப் பிராமணருக்குப் பாலைக் கொடுத்துவிட்டு வந்து சாப்பிடுகிறது தானே" என்றாள். அவனும் சரியென்று பாலை எடுத்துக்கொண்டு மேலே போனான். அங்கு அவன் கண்ட காட்சியை என்னென்று சொல்வது!

**குடியானவன் பாம்பைக் காணுதல்**

ஏகநாதர் ஸ்நான அனுஷ்டானாதிகள் முடித்து ஸ்ரீ கிருஷ்ணனை மனத்தி லிருத்திச் சரீரப் பிரஞ்ஞையே யற்றிருந்த சமயம் முன்னமே சொல்லியபடி பாம்பு வந்து தன் வால் நுனியை அவர் கோபபூழிலும் படத்தை அவர் தலைமீதும் வைத்து அவருடம்பைச் சுற்றிக்கொண் டிருந்தது. இதைக் குடியானவன் பார்த்ததும் மனத்திற் பீதியடைந்தவனாய், "பிராமணன் அனுஷ்டானத்தி லிருக்கிறார். பாம்பு அவரைச் சுற்றிக்கொண் டிருக்கிறது. பண்டரிநாதா, சீக்கிரம் வாரும், அவரை ரக்ஷியும். நான் அசக்தன். என் பலமும் விருப்பமும் வியர்த்தம். ஐயோ, தபசியினுடைய சரீரம் அசையவில்லையே! பாம்பு கடித்து விட்டதோ? என் பணிவிடை யெல்லாம் பாழாய்ப் போயிற்றே" என்று குழறினான். அவனுக்கு ஒன்றுந் தோன்றவில்லை. கதறினான். அபயம் அபயம் என்றான். பாம்பு விட்டுப் போவதாக இல்லை. "பிராமணன் செத்தவனே, செத்தவனே" என்று கூவினான். அவ்விடம் நிர்மானுஷ்ய மானது. அவன் குரலைக் கேட்க யார் இருந்தார்கள்! பின்னும் ஏகநாதர் பிராணனைக் காக்க அவன் முயன்றான். கடைசியாக இந்தச்

சமயத்தில் ஏதாவது செய்தாக வேண்டுமென்று அவனுக்குப் பட்டது. உடனே அவன் தன்னாலான மட்டும் உரத்த குரலால், "சக்ரபாணீ! அநாத ரக்ஷகா! தாமதமின்றி உடனே வந்து காப்பாய்" என்று அலறினான். குடியானவன் இப்படி யலறுகிற சமயம் ஏகநாதர்க்குப் பிரஞ்ஞை சிறிது சிறிதாக வந்து ஓசை காதில் பட்டது. அவர் சரீரம் அசையத் தொடங்கவே பாம்பு ஓடிப்போயிற்று. பூர்ணப் பிரஞ்ஞை வந்ததும் அவர் ஜலத்தை யெடுத்துக் கண்ணில் தடவிக்கொண்டு, "என்ன நடந்தது, சீக்கிரம் சொல்" என்று குடியானவனைக் கேட்டார். சர்ப்பத்தைக் கண்டு நடுநடுங்கிப் பாதியுயிர் போனவனாய் நின்றவன் சிறிது தேறி ஏகநாதரைச் சமீபித்தான். மரியாதையோடு அவருக்கு நமஸ்கரித்து, "ஒரு பெரும் பாம்பு இப்பொழுது தான் உம் உடம்பைச் சுற்றிக்கொண் டிருந்தது. அந்தக் காட்சியைப் பார்த்த நான் பெருந்திகிலடைந்து பெரிய சப்தமிட்டேன். உடனே பாம்பு ஓடியது. சுவாமிகளுக்கு ஈசுவரனுடைய திருவடிகளில் பூர்ண நம்பிக்கை யிருந்ததினால், தங்களுடைய பிராணன் இவ்வேளை தப்பிற்று என்று எனக்குத் தோன்றுகிறது" என்றான்.

**ஏகநாதர்க்குச் சகுணமூர்த்தி வெளிப்படுதல்**

குடியானவன் சொல்லைக் கேட்ட ஏகநாதர் கடவுள் கருணையை நினைந்து கண்களை மூடி மனத்தில் ஆராவன்போடு பாண்டுரங்க விக்கிரகத்தைத் தியானித்தார். "சேஷசாயீ, இந்திரை கேள்வனே, மனோஹரா, ஜகந்நாதா, ஜய ஜய வைகுண்டநாதா, உன்னுடைய கீர்த்தி அளவிடப் படுமோ, உன்

பெருமையை வர்ணித்துச் சுருதிகளும் எய்த்தன. நீ பிறப்பிலி, அவிகாரி, மாயா ரஹிதன், சாந்தன். நீ பிரபஞ்ச முழுதும் வியாபித் திருந்தாலும் உன் ஆழத்தை அறியுமா றில்லை. ஆயினும் உன் பக்தர்கள் உய்யும்பொருட்டு நாற்கை யுடையவனாக அவதரித் தாய். உன்னை அவ் வடிவத்தில் காண என் கண்கள் தவிக்கின்றன" என்று துதித்தார். இப் புகழ்மொழி யினைக் கேட்ட ருக்மிணி நாதர் நாலு கையும் நீலவர்ண மும் கைகளில் சங்கு சக்கரமுமாக அவர்க்கு வெளிப் பட்டார். அவருடைய திருமுகம் இருதயத்தைக் கவர்ந்தது. செவிகளில் மகர குண்டலங்க ளிருந் தன. கழுத்தில் கௌஸ்துப மணி ஜ்வலித்தது. மாரில் ஸ்ரீவத்ஸம் புலப்பட்டது. உடலில் திவ்ய பீதாம்பரம் மின்னியது. பாதங்களில் கிங்கிணிகள் ஒலித்தன. அக் காட்சி ஆத்மாவுக்குச் சாந்தி தருவது. சரீர முழுதும் சந்தனம் பூசி யிருந்தது. குங்குமப் பொட்டு நெற்றியில் விளங்கியது. இளந் துளசித் தளிர் களா லாகிய மாலை மாரில் திகழ்ந்தது. அவர் தோற் றப் பொலிவின்முன் சூரிய மண்டலத்தி னொளி மங்கி யது. ஸ்ரீ ஏகநாதர் கண்களைத் திறந்ததும் அவர் முன் பரப்பிரமம் இவ் வழகிய வுருவோடு நின்றது. இருதயத்தில் அடங்காக் காதலோடு ஏகநாதர் பகவா னுடைய பாதங்களைத் தழுவினார். ஜகந்நாதர் ஏகநாத ரைத் தம் நெஞ்சார அணைத்துக் கொண்டார். ஏகநாதர் கடவுளை யருகிருத்தி அவர்க்கு அகவழிபாடாற்றி, "பெருமான் தம் பெருங் கருணையி லொரு சிறிதைத என் மேல் வைத்து என் இஷ்ட பூர்த்தி செய்தார்" என்று வியந்தார். கடவுளும் பக்தனும் சந்தித்தலைக் குடியான வன் நன்றாகப் பார்த்தான்; "நான் என்ன புண்ணியஞ்

செய்தேன்'' என்று சொல்லிக்கொண்டு ஏகநாதரை மீண்டு மீண்டும் நமஸ்கரித்தான். ஸ்ரீ ஹரி திடீரென்று ஏகநாதரிடம் சொல்லிக்கொண்டு மறைந்தார். கடவுள் தம் பக்தர் இருதயத்தில் ஆனந்தமாகக் குடிகொண்டாரென்று தெரிந்த குடியானவன் ஏகநாதரைப் பக்தியோடு வணங்கி, ''சுவாமிகள் அருகில் நிற்கும் பாக்கியம் பெற்றதனால் வைகுண்ட நாதனை என் கண்களாற் காணப் பெற்றேன். இல்லையாயின் அது எனக்குக் கிட்டுமா? நான் கீழ்ச்சாதியி லுதித்த மந்தமதி'' என்று சொல்லி, மீண்டும் மீண்டும் அவரைப் புகழ்ந்தான். அப்புறம் அவன் பாற்பாத்திரத்தை யெடுத்து அவரிடத்திற் கொடுத்து, ''சரீரங் கொண்டு என் முன் நின்ற சற்குருவே, நீர் இதை அங்கீகரிக்க வேண்டும்'' என்றிரந்தான். அவனுடைய களங்க மில்லாத மன நிலையை யறிந்த ஏகநாதர் பாலை வாங்கிக் குடித்து, கண்ணாற் சாடை காட்டி அவனைப் போகச் சொல்லினர். அவன் அவர்க்குப் பிரதக்ஷிணஞ் செய்து காலில் விழுந்து நமஸ்கரித்து மனத்தில் ஆனந்த மிக்கவனாய் வீட்டுக்குப் போனான். வீடு போய்ச் சேர்ந்ததும் நிகழ்ந்தவற்றை யெல்லாம் தன் மனைவிக் குரைத்தான்.

**ஏகநாதர் துநவை மீண்டும் அடைகை**

ஏகநாதரோ சூரியன் உச்சியை யடைந்து வெயில் உக்கிரமானதும் ஓர் ஆலமர நிழலை யடைந்து கொஞ்ச நேரம் இளைப்பாறினார். அப்பொழுது ஜநார்த்தனர் கட்டளை திடீரென்று ஞாபகத்துக்கு வந்தது. ஏதாவது அபூர்வமாய்க் கண்டால் தம்மிடம் வந்து சொல்லும்படி அவர் சொல்லியுள்ளா

ரன்றோ! சற்குரு கிருபையால்தானே சகுணப் பிரமத்தின் வெளிப்பாடு தமக்குச் சித்தித்தது. இதைவிட அற்புதமானது என்ன இருக்கக் கூடும் என்றெண்ணி அவரை மனத்தால் வணங்கினார். தேவகிரிக்கு வந்து சற்குரு மூர்த்தியை நேரே கண்டார். அவர்க்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து அவரை அன்போடு தழுவினார். ஜநார்த்தனர் இவர் தோற்றத்தால் ஏதோ நடந்திருக்கிறது என்று தெரிந்து, 'மாறுதல் நிகழ்ந்திருக்கிற தென்பதற்குக் குறிகள் காணுகின்றன' என்று தம்முள்ளே சொல்லிக்கொண்டார். பின் இவரை நோக்கி, "நடந்ததென்ன?" என்று கேட்டார். ஏகநாதர் அங்குக் கண்ட அற்புதக் காட்சியனைத்தும் சொல்லி, "ஸ்வாமிகளுடைய கிருபையால் அசாத்தியமானது சாத்திய மாயிற்று" என்றார்.

**ஜநார்த்தனர் தீர்த்த யாத்திரை**

ஒரு நாள் ஜநார்த்தனர் ஏகநாதரோடு "கங்கா ஸ்நானஞ் செய்ய அவாவா யிருக்கிறது. நாஸிக், பஞ்சவடி முதலிய க்ஷேத்திரங்களையும் பார்க்க ஆசைப்படுகிறேன்" என்றார். சற்குருவின் எண்ணத்தை யறிந்த ஏகநாதர் சந்தோஷித்தார். ஒரு நல்ல தினம் தெரிந்து ஜநார்த்தனர் தீர்த்த யாத்திரை புறப்படுதற்குத் தயாரானார். ஏகநாதருக்குச் சவாரி செய்ய ஒரு பெண் குதிரை கொடுத்தார். தங்கள் சாமான்களுக்கு ஒரு குதிரை, தனக்கு ஒன்று. ஒரு பிராமணச் சமையற்காரனையும் நியமித்தார். எல்லாருமாகப் புறப்பட்டனர். அழகான ஸ்தலங் கண்ட விடத்தெல்லாம் இராத் தங்கினர். இங்கு இருவரும் ஆனந்தமாக ஆத்ம விசாரணை செய்வர்.

சாதுக்கள் ஸந்தர் கூடிய இடங்களை அவர்கள் விசேஷ மாக விரும்பினார்கள். அங்கு இதுவே சுப தின மென்று சொல்லிக்கொண்டு பரமசந்தோஷமாக இர வைக் கழிப்பர்.

**சந்திரபட்டரைச் சந்தித்தல்**

நெடுந்தூரம் இவ்வாறு பிரயாணஞ் செய்து ஒரு பெரிய பட்டணத்துக்கு வந்தனர். அவ்விடத்தில் சந்திரபட்ட ரென் னும் வைணவப் பிராமணோத்தம ரொருவ ரிருந்தார். அவர் நற்கீர்த்தியைப் பற்றிக் கேள்விப்பட்டுக் குருவும் சிஷ்யரும் களித்தார்கள். சூரியாஸ்தமன காலமா யிருந்ததால் இருவரும் அவர் வீட்டில் தங்கினர். சந்திரபட்டர் ஜநார்த்தனர் வைண வோத்தம ரென்று தெரிந்து அவரை மரியாதை யோடு வரவேற்றனர். இருவரும் ஒருவரை யொருவர் தழுவிக்கொண்டனர். சந்திரபட்டர் ஒரு பிராமணத் துறவி. அவருக்குக் குடும்ப மிருந்த தாயினும் அவர் மனத்தில் ஆசை யென்பது கிடையாது. அயாசி தமாக வந்ததைக் கொண்டு ஜீவித்து அவர் சுக மாக வசித்தார். அவர் எப்பொழுதும் திரிகரணங் களாலுந் தவஞ் செய்துகொண் டிருந்தார். பொய்யால் அவர் வாய் எப்பொழுதும் அசுத்தப் பட்டதில்லை. ஸ்நான ஜபாதிகளிலும் ஈசுவர பூஜையிலும் பரோப காரச் செயல்களிலும் அவர் காலங் கழிந்தது. அவர் எல்லா மனிதரையும் தாமாகவே பார்த்தார், எல்லாப் பிராணிகளிடத்தும் தயை யுடையரா யிருந்தார். சம் சார பாசத்தை யறுக்கும் வண்ணம் அவர் எப்பொழு தும் சாது சங்கத்தை நாடினார். துறவென்னும் ஓர் அம்பு போல் அவர் இருதயத்துட் புக்கது. ஏகநாதரும்

ஜநார்த்தனரும் பிரியமாகக் கண்டவர் அப்படிப்பட்ட சந்திரபட்டர். சாயங்கால சந்திகள் முடித்து அவர்கள் சிறிது உணவை யுட்கொண்டனர். அது முடிந்ததும் சந்திரபட்டர் தனித்துப் போய் ஒரு புஸ்தகத்தை எடுத்து விரித்தார். சதுசுலோகி பாகவதத்தில் ஸ்ரீ ஹரி பிரமதேவர்க்கு உபதேசித்த கட்டத்தைத் திருப்பி, அதற்கு விரிவாக வியாக்கியானஞ் செய்ய ஆரம்பித்தார். ஏகநாதரும் ஜநார்த்தனரும் சமீபத்தில் வந்து, "இந்த ஸந்தரைப் பார்த்த இன்று புண்ணிய தினம்" என்று சொல்லிக் கொண்டு உட்கார்ந்தனர். அன்பும் அறிவும் ஊக்கமு முடைய கேள்வியாளரைக் கண்டதும் அவர் இருதயம் களித்தது. அவர் சுலோகத்துக்கு அர்த்தஞ் சொன்னபொழுது இவர்களுடைய மனங்கள் உருகின. தம்முடைய அநுபவத்திலிருந்து விஷயங்களை யெடுத்து அவர் சொல்லியபோது அவர்க்கு நாத் தழுதழுத்தது. ஆனந்த பாஷ்பம் எல்லாருடைய கண்களி னின்றும் வடிந்தது. மூவரும் மெய்ம்மறந் திருக்கும் நிலையை யடைந்தனர். பிரமா விஷ்ணு மகேசுவரர் மூவரும் கூடி யிருந்தனர் என்னலாமா? இல்லையானால் கங்கை யமுனை ஸரஸ்வதி என்னும் மூன்று நதிகளும் கூடி ஒன்றாய் ஓடினாற் போல மூவர் அன்பும் ஒன்றியது என்னலாமா? இவ்விதமாக அவர்கள் இரவைக் கழித்தனர். ஏகநாதரும் ஜநார்த்தனரும் "சந்திரபட்டர் கர்ம உபாஸநா ஞானமென்னும் மூன்று சாஸ்திரங்களிலும் சிறந்த பண்டிதர்" என்று ஒருவரோ டொருவர் சொல்லிக்கொண்டனர். புஸ்தகம் வாசித்து முடிந்ததும் சிறிது உறங்கினர். காலையில் எழுந்து அவர்கள் புறப்படுகிற சமயத்தில், சந்திரபட்டர் "ஒரு வேண்டுகோள்:

ஸ்நாணுதிகளை முடித்தபின் என் ஆசிரமத்தைப் புனித மாக்க வேண்டும்'' என்றனர். ஜநார்த்தனரும் மறுக்க முடியாதராய் "அப்படியே'' என்றனர். வீட்டில் ஆகா ரம் சமைக்கப் பட்டது; தேவதைகளுக்கும் அக்கினிக் கும் பலியானபின் அவர்கள் உண்ணுதற் கிருந்தனர். ஏகநாதரும் ஜநார்த்தனரும் பட்டரும் ஒரு பந்தியில் இருந்தனர். அவர்களுக்குப் பரிமாறியபின் மற்றவர் களுக்கு ஆகாரம் பரிமாறப்பட்டது. வாய்பூசித் தாம் பூலம் கொண்டபின் சந்திரபட்டர் "இன்னுமொரு வேண்டுகோள்: இரவும் பகலும் உங்களோடு இருக்க வேண்டுமென்று ஓரிச்சை என் உள்ளத்திலுண்டா யிருக்கிறது'' என்றனர். ஜநார்த்தனரும் "எங்கள் மனத்தி லுள்ளதும் அதுவே. சங்கையில்லாமல் உடன்வருக'' என்றனர். சந்திரபட்டர் மனத்தில் ஆனந்தங் கொண்டவராய், "நல்ல சங்கம் எனக்கு வாய்த்தது, என் பாக்கியம்!'' என்றனர்.

**மீண்டும் தீர்த்த யாத்திரை செல்லல்**

அவர் அவர்களோடு யாத்திரை செய்யுங்கால் **சதுசுலோகி பாகவத**த்தை வியாக்கியானஞ் செய்துகொண்டே ஆனந்தமா யிருந்தார். வழியில் சாதுஸந்தர் யோகிகளைக் கண்டபொழு தெல்லாம் பேராதரத்துடன் அவர்களோடு ஆத்ம விசாரணை செய்தார். இவ்விதமாகப் பிரயாணஞ் செய்து அவர்கள் பஞ்சவடி போய்ச் சேர்ந்து ராம குண்டத்தில் ஸ்நானஞ் செய்தனர். தீர்த்தக் கிரமங் களை யெல்லாம் அனுஷ்டித்து அவர்கள் தங்கள் தங்கு மிடத்திற்குப் போய்ப் பின் அநநய பக்தியோடு ஸ்ரீ ராமசந்திரரைச் சேவிக்கச் சென்றனர். கிரமப்படி

வழிபட்டுத் திருப்புகழ்கள் பாடினர். பிராமணர்க்கு ஒரு விருந்திட்டு அவர்களைத் திருப்திப் படுத்தினர்.

**ஏகநாதர்க்கு ஜநார்த்தனர் கட்டளை**

ஜநார்த்தனர் ஏகநாதரை நோக்கி, "நான் ஒன்று சொல்லப் போகிறேன், கவனித்துக் கேள். உன் தலையில் உன்னுடைய நல்லதிர்ஷ்டத்தால் எதிர்பாராமற் கிடைத்த ஸ்ரீ தத்தர் வரம் இருக்கின்றது. சந்திரபட்டர் **சதுசுலோகி பாகவத**த்தை உடன் கொண்டு வந்திருக்கிறார். அதற்கு மஹாராஷ்டிரத்தில் ஒரு பெரிய வியாக்கியானம் தயார் செய்" என்றனர். சற்குரு வார்த்தையைக் கேட்ட ஏகநாதர் பரமானந்தமடைந்து புஸ்தகமெழுத ஆரம்பித்து அன்போடு செய்து முடித்தனர். முடித்ததும் புஸ்தகத்தை ஸ்ரீ குருவிடம் காட்டினார். சந்திரபட்டர், ஜநார்த்தனர், அப்புண்ணிய க்ஷேத்திரத்திலுள்ள பிராமணபண்டிதர் அனைவரும் நூலைக் கேட்டு மிகக் களித்தனர். இந்தச் **சதுசுலோகி பாகவத** பிராகிருத வியாக்கியானந்தான் ஏகநாதர் செய்த முதற் புத்தகம். சற்குரு மீண்டும், "உன் வாயால் ஸ்ரீபாகவத புராணத்தின் ஏகாதச ஸ்கந்தத்துக்கும் ஒரு பிராகிருத மொழி பெயர்ப்புச் சொல்லு. ஸ்ரீ கிருஷ்ணர் உனக்குத் தோன்றாத் துணையாய் நின்று அதனுடைய பொருள் முழுதும் விளங்கச் செய்வார்" என்றார். ஜநார்த்தனர் உரைத்ததைக் கேட்டு ஏகநாதர் தலை வணங்கினார். சந்திரபட்டர் இப்பொழுது **சதுசுலோகி**க்கு ஏகநாதர் வியாக்கியானத்தை எடுத்துப் பலர்க்கும் வாசித்துக் காட்டத் தொடங்கினார். சந்திரபட்டர் சகல சாஸ்திர பண்டிதராயினும் ஏகநாதருடைய பிராகிருத

மொழிபெயர்ப்பை உரக்க வாசிக்கும் வழக்கம் மேற்கொண்டார். சந்திரபட்டர் அளவுகடந்த கௌரவ புத்தியோடு, "இந்தக் குருவும் அவர் சிஷ்யரும் லோக ஸம்ரக்ஷணார்த்தம் அவதரித்த கைலாஸபதியும் விஷ்ணுவுமாவர்" என்றார். அவர் அவர்கள் புகழைச் சதா பாடிக் கொண்டிருந்தார். அந்த க்ஷேத்திரத்துப் பிராமணர் கேட்டு, "பாக்கியம்! பாக்கியம்!" என்றனர். மூவரும் திரியம்பகேசுவரத்துக்குப் போய்க் குசவர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தனர். பிரமகிரி வலப்பக்கத்திலாக அவர்கள் திரிபுராரிக்குச் சென்றனர். இங்குத் தீர்த்தக்கிரியைகளைச் செய்து மூன்றிரவு தங்கினர்.

**ஜநார்த்தனர் தேவகிரிக்குத் திரும்புதல்**

இதனோடு தங்கள் யாத்திரையை முடித்துக் கொண்டு அவர்கள் தேவகிரிக்குத் திரும்பினர். உலக விஷயங்களிற் பற்றற்ற சந்திரபட்டர் மனம் இல்லாசையைத் துறந்தது. பெண்டு பிள்ளை பண்டபதார்த்தங்களில் அவர் மனம் முன்னமே சலிப்புற்றிருந்த தாகலின் அவர் இவர்கள் சங்கத்தை விட மாட்டாதவராய்த் தேவகிரிக்கு இவர்களோடு வந்தனர். ஜநார்த்தனர் வீடு வந்து சேர்ந்த மறுநாள் பிராமண ஸமாராதனை செய்தனர். அவர் நா ஈசுவர நாமோச்சாரணத்தில் ஈடுபட்டிருந்தது. அவர் மனம் பக்தி நிறைந்திருந்தது. சந்திரபட்டர் ஆதரத்தோடு, "ஏகநாதர் அவதார புருஷர். வயதிலும் ஆகிருதியிலும் அவர் சிறியராயினும் அவர் புத்தி கருத்தை வெளியிடுந் திறல் பெரிதும் படைத்தது. நான் பிராணனோடிருக்கும் வரை அவரைப் பிரிந்

திருக்கப்படாது'' என்றனர். இந்த மனவுறுதியோடு அவர் அங்கேயே இருந்தார். பல நாள்கள் கழிந்தபின் அவர் சமாதிநிலை யடைந்தார்: யான் எனது என்னும் பாவமே முழுதும் அற்றது; உலகமுழுதும் தம் ஆத்மாவாகக் கண்டார்; புண்ணியச் செயல்களை யந்திரம்போற் செய்தார். அவர்க்குப் பரிபூர்ணஞானம் கைவந்தது.

**சந்திர பட்டர் சமாதி**

இப்படிச் சில நாள் கழிந்த பின் அவர் ஜநார்த்தனரை யணுகி, "உயிரோடு புதைக்கப்படல் வேண்டுமென்று எனக்கு இச்சை தோன்றி யிருக்கிறது'' என்றார். ஜநார்த்தனர் அவர் உள்ளக் கருத்தை மெச்சி அவர் சமாதியிலிருந்த பொழுது அவ்வாறு செய்ய ஏற்பாடு செய்தனர். ஆயினும் மகம்மதியரால் தொல்லை நேராதிருக்க வேண்டி ஒருபாயந்தேடினர். மகம்மதியர் கோரிபோல ஒரு கட்டடம் கட்டுவித்தார். இந்துக் களும் மகம்மதியரும் திருப்தியாயினர். அக் கட்டடம் இன்றும் தேவகிரிமலைமே லுள்ளது. அங்கு அநேக அற்புதங்கள் நிகழ்வது லோகப்பிரசித்தம்.

**ஏகநாதர்க்குத் தீர்த்தஸ்தல யாத்திரை செய்யக் கட்டளை**

ஒருநாள் ஜநார்த்தனர் 'ஏகோபாவைப் புண்ணிய தீர்த்தங்களுக்கு யாத்திரை போகச் சொல்ல வேண்டும், அதனால் பூமிக்குப் பரிசுத்த முண்டாகும்' என்று மனத்தி லெண்ணி, ஏகநாதரைத் தனியே கூப்பிட்டு, "என் ஏற்பாட்டைக் கேள்'' என்றார். ஏகநாதர் மெய்ப்பக்தி யோடு ஜநார்த்தனர்க்குப் புகழ் மொழிகள் சொல்லி, அவர் பாதத்தைத் தம் தலையால் தொட்டு, "நீர்

எனக்கு எக் கட்டளை தரினும் அதனை மனத்துட் கொள்வேன்'' என்றார். ஏகநாதருடைய அமிருத வசனத்தைக் கேட்ட ஜநார்த்தனர் திருப்தராய், "இப் பூமியிலுள்ள புண்ணிய தீர்த்தங்க ளெல்லாவற்றையும் ஒரு முறையாயினும் போய்ப் பார்த்துவா. சில இடங்களில் மூன்றிரவு தங்கு. வேறு சிலவற்றில் ஐந்திரவு தங்கு. ஈசுவர சம்பந்தமானது எது உனக்கு எதிர்ப்படினும் அதற்கு ஒரு நமஸ்காரஞ் செய். நீ யாத்திரார்த்தம் போகின்றாயாயினும் சாதுக்களை அங்கங்கே சந்திப்பாய். ஸ்ரீ கிருஷ்ணரே உனக்கு அன்றன்று வேண்டியதைக் கொடுத்தருளுவார். பதரிநாதம் வரை போய் மானஸ ஸரோவரத்தையும் உன் கண்களால் தரிசி. தெற்கே ராமேசுவரம் வரைபோய்ப் பின் என்னிடம் திரும்பிவா'' என்று ஆஞ்ஞை தந்தார். தம் சற்குரு வார்த்தைகளைக் கேட்ட ஏகநாதர்க்குச் சந்தோஷமும் துக்கமும் ஒருங்கே வந்தன. ஏனெனில், சாதுக்களைப் பார்க்கலாமென்று அவர் மனம் சந்தோஷித்தது; தம் சற்குருவைக் காணாமலிருக்க வேண்டுமேயென்ற துக்கம் ஒரு பக்கம் இருந்தது. வீட்டிற் சமையலாயிற்று, இருவரும் ஒரு பந்தியிலிருந்து உண்டனர். வாய்பூசித் தாம்பூலம் கொண்டு ஆனந்தமா யிருந்தனர்.

**ஏகநாதர் யாத்திரை**

ஸ்ரீ நாதர் யாத்திரை புறப்பட்டபோது ஜநார்த்தனர் சிறிது தூரம் அவரோடு சென்று வழி விட்டார். முதலிற் காட்டு வழியாகப்போக வேண்டி யிருந்தது. ஏகநாதர் தம் சற்குருவின் மார்மேல் தம் தலையை வைத்து, "உம்முடைய திருவருள் எனக்கு உளதாகுக''

என்றார். மேற்சொல்ல முடியவில்லை; கண்களினின்று நீர் பெருகிற்று. சற்குருவும் அவ்வாறே தம் அன்பை யடக்க முடியாதவ ராகி, "நான் எப்பொழுதும் உன் இருதயத்தே வாசஞ்செய்வேன். நீயும் நானும் பிரிந்திருக்க வில்லை என்னும் எண்ணத்தை நன்றாக ஞாபகத்தில் வை. நீ எனக்கு என் உயிரினு மினியாய், நான் உன் ஆத்மாவேதான். துவைத மயக்கத்தை விட் டொழி. பிரிவைப் பற்றிக் கவலைப்படாதே" என்று தேறுதல் சொல்லி ஏகநாதர் தலைமீது தம் பாகையை வைத்தார். இந்தப் பெரும் பாக்கியம் தமக்கு ஆச்சரியமாகக் கிடைத்ததனால் ஏகநாதர் ஆனந்த பரவச ரானார். ஏகநாதர் "மீண்டும் உம்மை யான் தரிசிக்குமாறு அனுக்கிரகியும்" என்று வேண்டினார். இவ் வேண்டுகோளின் இரகசியார்த்தத்தை யறிந்த சற்குரு "அவ்வாறே யாகுக" என்றார். ஏகநாதர் ஜநார்த்தனரை வலம் வந்து பக்தி பூர்வகமாக நமஸ்காரங்கள் செய்து அவருடைய ரூபத்தை மனத்தில் தியானித்துக்கொண்டு வழிப் பயண மாயினர். அவர் விரைவாக நடந்தா ராயினும் அடிக்கடி தம் குருவைப் பார்க்கத் திரும்பினார். ஜநார்த்தனர் தம் கண்ணுக்கு மறையும் வரை அங்கங்கே அவரை நோக்கிச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தார். பின் "ஜய ஜய ஜநார்த்தன" என்று சொல்லி வேகமாகப் போனார். அவரை வழி யனுப்பி விட்டுச் சற்குருவும் வீட்டுக்குத் திரும்பினார்; அடிக்கடி ஏகநாதர் உத்தம குணத்தைப் பற்றி நினைத்துத் துக்கப்பட்டார், மனத்தில் அமைதியில்லாதிருந்தது.

## மூன்றும் அத்தியாயம்

**ஏகநாதர் பாட்டன் பாட்டி கவலைப்படல்**

ஏகநாதர் செய்தி இப்படியாக. பிரதிஷ்டானத்தில் அவருடைய பாட்டனாரும் பாட்டியாரும் வசித்திருந்தன ரன்றோ. ஏகநாதர் அவர்கள் உத்தரவு பெறாமலே தேவகிரிக்கு வந்துவிட்டன ரன்றோ. சற்குரு பணியில் முழு மனமுஞ் செலுத்தியவராய் இவர் அவர்களைப் பற்றி நினைத்தவரே யல்லர். ஆதலால் விருத்த தம்பதிகள் மனக் கவலை மிகுந்தவர்களாய் இவரை வீட்டுக்கு வீடு தேட ஆரம்பித்தனர். கண்டவர்களை யெல்லாம் "ஏகநாதனைக் கண்டீர்களோ?" என்று கேட்பார்கள். "எங்களுக்குத் தெரியாதே" என்று அவர்கள் பதில் சொல்லலும், இருவரும் அழுவார்கள். இரவும் பகலும் அவர்களுக்கு மன வோய்வு கிடையாது; ஏகநாதர் ஞாபகமே. ஆகார பானங்கள் சுவை யிழந்தன. ஏகநாதரைத் தேடிப் பிடிப்பதில் அவர்களுக்குத் துணை செய்யக் கூடியவர் ஒருவரு மிலர். அவர்கள் துக்க மேலிட்டு, "அவன் சிசுவா யிருக்கும்பொழுதே அவன் தந்தை தாயர் இறந்து போயினர். இந்த ஒரு முளைதான் குடும்பத்திற்கு மிகுந்தது. அவனுடைய ஆதரவில் நம்முடைய காலத்தைக் கழிக்கலாமென் றிருந்தோம். இந்தக் குருடர் ஊன்று கோல் எந்தத் தீவில் அகப்பட்டுக்கொண்டதோ? அவனை நாம் எப்பொழுது காணப் போகிறோம்" என்று சொல்லிக்கொண்டு துக்கத்திற்குக் கரை காணாராய்த் தவிப்பர். அப் பட்டணத்து மாந்தர் பலர் பலவிதமாகப் பேசினர். அவர்கள் வார்த்தைகளால் விருத்த தம்பதி

களுக்கு மன வமைதி வந்தபாடில்லை. தீர்த்த யாத்திரிகர், தேசாந்தர வியாபாரிகள், துணி வியாபாரிகளைக் கண்டவுடனே அவர்கள் "எங்கள் ஏகநாதனைக் கண்டீர்களா?" என்பார்கள். காக்கைகளையும், கிளிகளையும் பார்த்துக்கூட, "எங்கள் ஏகநாதனை நீங்கள் பார்க்கவில்லையா?" என்பார்கள். அவர்கள் நதிக்குப் போய் மணலிலிருந்து கோதாவரியை நமஸ்கரித்து, "எங்கள் பிள்ளை எங்கள் கண் முன் காணப்படவில்லையே. நீ வாயில் போட்டுக் கொண்டாயா? உடனே சத்தியத்தைச் சொல்லு" எனப் பல முறை பிரார்த்திப்பார்கள். ஏகநாதர் சற்குருவைத் தேடிப் போக, விருத்த தம்பதிகள் துக்கக் கடலில் ஆழ்ந்தனர். இரவும் பகலும் அழுது அவர்கள் கண்களும் பூத்துப் போயின.

**விருத்த தம்பதிகள் புராணிகரைச் சந்தேகித்தல்**

கிட்டின பந்துக்களும், வம்பு பேசுபவர்களும், இஷ்ட ஜனங்களும், மற்றச் சாது ஜனங்களும் அவர்கள் வீட்டுக்கு வந்து அவர்களைத் தேற்ற முயன்றனர். அவர்களுள் ஒருவர் "ஏகநாதன் பண்டிதரோடு உட்கார்ந்து அவர் புராணம் வாசிக்கிறதைக் கேட்டுக்கொண்டேயிருந்தானே, அவர் அவனைத் தம்மோடு படைக்கு இழுத்துக்கொண்டு போயிருப்பர்" என்றார். எல்லாரும் "அப்படி யிருக்கக்கூடும். புராணிகர் இவனைச் சிஷ்யராக்கி உடன் கொண்டுபோயிருக்கக் கூடும்" என்று சொல்லவே, விருத்த தம்பதிகளுக்குச் சந்தோஷமும் துக்கமும் ஒருங்கே வந்தன. அவர்கள் பண்டிதர் வீட்டிற்குப் போய், "புராணிகர் படைக்குப் போனவர் குழந்தையை ஏமாற்றி அழைத்துக்கொண்டு போய் விட்

டார். நாங்கள் இரவும் பகலும் வருந்துகிறோம்'' என்றனர். அவ் வீட்டு ஜனங்கள், "வீட்டுத் தலைவர் படைக்குப் போனது உண்மையே. குழந்தையைக் கூடக் கொண்டுபோனாரோ என்னவோ, எங்களுக்குத் தெரியாது'' என்று பதில் சொல்லினர். பட்டணத்து ஜனங்கள் ஏகநாதரும் படைக்குத்தான் போயிருப்பார் என்று சந்தேகித்தனர். விருத்த தம்பதிகள் புராணிகர் சீக்கிரம் படையிலிருந்து திரும்பி விடுவார், பையனையும் உடன் கொண்டுவந்து விடுவார் என்று இரவும் பகலும் எதிர்பார்த்தனர். இந்தப் பிரகாரமாக நான்கு ஆண்டுகள் சென்றன. திடீரென்று படை மீண்டது. தம்பதிகள் புராணிகர் வீட்டுக்குச் சென்று, "புராணிகர் நல்ல வீரர்! எங்கள் குழந்தையை எப்படியோ ஏமாற்றிச் சிஷ்யனாக்கித் தூர தேசத்துக்குக் கொண்டுபோய் விட்டார். அவனைப் பத்திரமாகக் கொண்டுவந்து ஒப்பிக்காவிட்டால் இதோ இந்த வாசலிலேயே எங்கள் பிராணனை விட்டு விடுவோம்'' என்றனர். வீட்டு ஜனங்கள் இவ் வார்த்தையைக் கேட்டுப் பீதியுடையராய்ப் புராணிகர்க்குக் கடிதமெழுதி, "ஏகாவை ஏமாற்றி யழைத்துக் கொண்டு போயிருக்கிறீரா அல்லது பொய்க்குற்றம் உம்மேற் சுமத்தப் பட்டதா?'' என்று வினவினர். வீட்டிலிருந்து வந்த இக் கடிதத்தைக் கண்டதும் பிராமணருக்கு விசனமாகி, 'இஃதென்ன விபரீதம்! நாமொன்றுஞ் செய்யாம லிருக்கையிலேயே இந்தக் குற்றம் என்மேற் சுமத்தப்பட்டதே' என்று அவர் வருந்தி, தம் எசமானனிடம் செய்தி யறிவித்துச் சம்பளத்தைத் தீர்த்து வாங்கிக்கொண்டு ஊருக்குப் பிரயாணமாயினர்.

**புராணிகர் ஜநார்த்தனரைக் காணல்**

அப்பொழுது 'ஏகநாதன் எங்கே போயிருப்பான்? என்னை ஊரார் சந்தேகிக்கிறார்கள். தேவகிரிக்குப் போய் ஸ்ரீ குரு ஜநார்த்தனரைப் பார்க்க வேண்டுமென்று பேராவ லிருப்பதாக ஏகநாதன் என்னிடம் சொன்னானன்றோ?' என்று நினைப்பு வர, 'சரி, அங்குப் போய் ஏகநாதனைத் தேடுவேன். அவன் அங்கிருப்பானானால் அவனை என்னோடு கொண்டுவந்து விடுவேன்' என்று அவர் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டனர். இந்த எண்ணமுடையராய்ப் புராணிகர் தேவகிரிக்கு வந்து ஜநார்த்தன பந்தரைப் பார்த்துச் சங்கதி யெல்லாம் சொல்லினர். சற்குரு "இதுவரை ஏகநாதன் இங்கிருந்தான்; அவனுடைய சிரத்தா பூர்வகமான பணியால் என்னைத் திருப்திப் படுத்தினான். இப்பொழுது என் கட்டளைப்படி நெடுந்தூர ஸ்தல யாத்திரை போயிருக்கிறான்" என்று சொல்லி விருத்தர்க்கு ஏகநாதரைப் பற்றிச் சிறிதும் கவலைப்பட வேண்டுவ தில்லையென்று ஒரு கடிதம் எழுதிப் புராணிகர் மூலம் அனுப்பினர்.

**புராணிகர் விருத்த தம்பதிகளைக் காணல்**

புராணிகர் பிரதிஷ்டானத்துக்குத் திரும்பியதும் ஏகநாதர் வீட்டுக்குப் போய் விருத்த தம்பதிகளைக் கண்டு சங்கதி சொல்லினர். "உங்களுடைய ஏகநாதன் ஜநார்த்தனரைப் பார்க்கத் தேவகிரிக்குப் போனான். இதோ ஜநார்த்தனர் கைப்பட எழுதிய கடிதம்" என்று சொல்லிக் கடிதத்தையும் காட்டினர். இழந்த பிள்ளை அகப்பட்ட சங்கதியைக் கேட்டவுடன் அவர்கள் ஆனந்த பரவசராய்,

"நாங்கள் சாக விருந்தோம், இனிப் பிழைத்தோம். எங்களைக் கவனிக்கிறதற்கு ஒருவருமில்லையே" என்றனர். சமாசாரம் உண்மைதானென்று நிச்சயமானதும் அவர்கள் சர்க்கரை கொண்டு வந்து புராணிகர் வாயில் இட்டனர். மேலும் புராணிகர், "என்னை நம்பாத பக்ஷத்தில் நீங்களே தேவகிரிக்குப் போய் ஜநார்த்தனரை விசாரியுங்கள்" என்றனர். இதைச் சொல்லி விட்டுப் புராணிகர் தம் வீட்டுக்குப் போயினர். விருத்த தம்பதிகளுக்கு மனத்துயர மிகுதியால் இன்னது செய்வதென்று தோன்றவில்லை. "தேவகிரிக்கு ஓராளை அனுப்பலாமென்றால் நமக்குப் பணம் எங்கிருக்கிறது? நாமே போய் ஜநார்த்தனரைப் பார்ப்போம்" என்று சொல்லிக்கொண்டனர்.

**விருத்த தம்பதிகள் ஜநார்த்தனரைக் காணல்**

இப்படித் தீர்மானித்து மெதுவாக நடந்து நடந்து தேவகிரிக்குப் போய் ஜநார்த்தனரைக் கண்டனர். தங்கள் கதையை ஆதியோடந்தமாய்க் கண்ணுங் கண்ணீருமாகச் சொல்லினர். "நாதன் எங்களைக் கைவிட்டான். வீட்டுக்குத் திரும்பவில்லையே" என்று முடித்தனர். ஜநார்த்தனர் எழுந்து அவர்களை அன்போடு வரவேற்று ஏகநாதர் உயர்ந்த குணங்களை அவர்களுக்கு ஆசையோடு எடுத்துச் சொல்லினர்: "பிரபஞ்சத்தை ரக்ஷித்தற்காக ஸ்ரீ விஷ்ணுவே அவனிடத்தில் அவதரித்திருக்கிறார். உங்களுடைய புண்ணிய வம்சம் பாக்கியம் பண்ணியது. உங்கள் கோத்திரத்துக்கெல்லாம் மோக்ஷம் கிடைத்தது. அவன் உங்களுடைய மனத்துக்குப் பிள்ளையாகத் தோன்றுகிறானயினும் உண்மையில் அவன்

பாண்டுரங்கர் அவதாரமே. இனிமேல் அவன் சரித்திரத்தைக் கவனிப்பீர்களானால் உங்கள் சந்தேகம் ஒழியும்.'' ஜநார்த்தனர் இவ்வாறு தேற்ற அவர்கள் தேறினர். பின்னும் ஜநார்த்தனர் "ஆறு மாசம் முழுதும் சென்றால் நாதன் திரும்புவான்'' என்று சொல்லி அவர்களை ஒரு மாசம் தம் வீட்டிலிருக்கச் செய்து நித்திய விருந்து செய்தனர். அவர்களுக்கு நல்ல வஸ்திரங்களும் ஆபரணங்களும் நிறையப் பணமும் கொடுத்துத் தம் கைப்பட ஒரு கடிதமும் "இந்தக் கடிதம் கண்டதும் உன்னுடைய தீர்த்த யாத்திரையை நிறுத்திக்கொண்டு பிரதிஷ்டானத்திலேயே வசிப்பாயாக'' என்னும் பொருளடங்கியதாக எழுதி அவர்களிடம் கொடுத்து அவர்களுக்குப் பிரயாணத்திற்குக் குதிரைகளும் மனிதரும் உதவித் தாமே சிறிது தூரம் போய் வழிவிட்டனர். அப்பொழுது அவர் மீண்டும், "வடதேசத்துத் தீர்த்தங்களையும் மானஸ ஸரோவரத்தையும் பார்த்துத் திரும்புங்கால் பைடணபுரி வழியாகத்தான் வருவான். நீங்கள் ஜாக்கிரதையாக இருந்து அவனைத் தெரிந்து கொள்ள வேண்டும். என் கடிதம் பார்த்த பின் அவன் மேலெங்கும் போகமாட்டான். இனி நீங்கள் கவலைப்படுதலொழியுங்கள்'' என்று தைரியஞ் சொல்லினர். அவர்கள் ஜநார்த்தனர் வார்த்தையாற் சந்தோஷித்தவர்களாய்ப் பைடணபுரிக்கு மீண்டு இந்த சங்கதிகளை எல்லாருக்கும் சொல்லி ஜநார்த்தனருடைய உத்தம குணத்தைப் புகழ்ந்தனர். கடிதத்தை வெகு ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டு எல்லாருக்கும் அதைப்பற்றிச் சொல்லி, "ஏகநாதன் அடுத்த ஆறு மாசங்களுள் திடீரென்று வந்து நீங்கள் பார்ப்பீர்க

ளானால் அவன் இங்கிருக்கும்படியாக ஏற்பாடு செய்யுங்கள்'' என்று ஜாக்கிரதை செய்து வைத்தனர்.

**ஏகநாதர் தீர்த்த யாத்திரை**

இனி, ஏகநாதரைக் கவனிப்போம். சற்குரு கட்டளையால் அவர் இந்தத் தீர்த்த யாத்திரை போயிருந்தார். ஜனங்களுக்கு வழிகாட்டுவதுபோல அநேக தீர்த்தங்களையும் ஸ்தலங்களையும் தரிசித்தார். நிம்மதியான இடங்கண்ட பொழுது மூவிரவு தங்கினார். சாது சங்கம் கண்ட இடங்களில் ஐந்திரவு தங்கினார். அவ்விடங்களில் ஸ்நானஞ் செய்து வழிபாடுக ளாற்றித் தமக்கு இஷ்டமான போது வெளிக் கிளம்பினார். அவந்தியில் மஹாகாலேசுவர தரிசனம் அவர் மனத்துக்குச் சாந்தியளித்தது. மதுரை, கோகுலம், விருந்தாவனம் என்னும் க்ஷேத்திரங்களையும் ஆனந்தமாகத் தரிசித்தார்; அந்த க்ஷேத்திரங்களில் பக்தி நிறைந்த பக்தர்களைக் கண்டார்; ராஸக்கிரீடையும், ஹரி கீர்த்தனங்களும், கிருஷ்ணனையே மனத்தில் வைத்தவர்களாய்ப் பூஜையில் ஈடுபட்ட ஜனங்களின் தோற்றமும் அவர் மனத்தி லழுந்தின. இங்குப் பல நாள் ஆனந்தமாகக் கழித்துப் பின் ஏகநாதர் பரம க்ஷேத்திரமாகிய காசிபோய்ச் சேர்ந்தார்; மணிகர்ணிகையில் ஸ்நானஞ்செய்து விசுவநாதரை வழிபட்டார். அங்கு ஐந்திரவு தங்கி, ஸ்ரீ ஜநார்த்தனருடைய சக்தியால் அவ்விடத்துக்குத் திரும்பவும் வரக்கூடுமென்று துரிதப்பட்டு மேற்சென்றார். பிரயாகைக்குச் சென்று திரிவேணி சங்கமத்தில் ஸ்நானஞ்செய்தார். மாதவ தரிசனம் அவர் ஆத்மாவுக்கு மனச்சாந்தி யளித்தது. அவர் மேற் கயைக்குச் சென்று பக்தியோடு ஸ்ரீ விஷ்ணு

பாதத்தை வணங்கி ஆனந்தித்தார். பின் அயோத்திக்குச் சென்றார் ; இந்த க்ஷேத்திரத்திலுள்ள ஜனங்கள் ராமநாம பக்திபூண்டவர்கள் ; ராமர் சீதை லக்ஷ்மணர் பரதர் சத்துருக்கினர் விக்கிரகங்களின் முன் அவர் வணங்கினார். அதனால் அவர் மனம் சாந்தியடைந்தது. அயோத்தியைத் தரிசித்தபின் பதரிநாதம் போனார் ; ஆதிபுஷ்கர தீர்த்தத்தில் ஸ்நானஞ் செய்தார் ; புஷ்கரத்தைப் பார்த்த மாத்திரத்திலே கலியுக மலங்க ளெல்லாம் கழிகின்றன. அப்புறம் அவர் இமாலயத்துக்குப் போய்ப் பாகீரதி உற்பத்தியாகு மிடத்தைப் பார்த்தார். அங்கு உள்ளே கண்கொண்டு பார்க்கலாகாத ஒரு பெரிய பிளவு காணப்பட்டது ; அப்பக்கம் போதற்குக் கயிற்றின்மேல் உட்காரவேண்டி யிருந்தது. ஆனால் ஏகநாதர்க்குப் பயமென்பது சிறிதுமில்லை. பேரானந்தத்தோடு அவர் அவ்விடத்தைப் பார்த்தார். பதரிநாராயணரைப் பார்த்துச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். நர நாராயணருக்குட் பேதமில்லாமை போல ஈசுவரனுக்கும் பக்தனுக்கும் பேதங்கிடையாது. ஒருவரால் மற்றவர்க்கு ஒளி மிகுகின்றது. அந்த க்ஷேத்திர வாசிகளெல்லாம் ஹரியினுடைய அற்புதச் செயல்களை அதிக பக்தியோடு புகழ்கின்றனர். உத்தவர் இந்தப் பதரிகாசிரமத்துக்கு அனுப்பப்பட்ட படியால் அவர் இந்த வழக்கத்தை இங்கு உண்டாக்கினர். ஸந்தர்கள் அனுஷ்டானத்தையே பக்தர்கள் பின்பற்றுகிறார்கள். பதரிநாதத்தில் விடைகொண்டு ஏகநாதர் துவாரகைக்குச் சென்றார். காட்டில் ஒரு தனியிடங் கண்டு அங்கு ஸ்ரீ ஹரியைப் பூஜிக்கத் தொடங்கினார் ; அவருடைய மனம் ஸ்ரீ ஹரியின் நாமரூபங்களில் ஈடுபட்டது ; அத் தியானத்தில் அவர் தம் சரீரம் உண்டென்

பதையே மறந்தார். பிரபஞ்ச முழுதும் தாம் உட்பட ஜநார்த்தன வடிவமா யிருந்தது. அந்த எண்ணத்தை மனத்துட்கொண்டு அவர் துவாரகா புரிக்குச் சென்றார். கோமதி யாற்றில் ஸ்நானஞ் செய்தபொழுது மனத்தில் ஆனந்தங் கொண்டார். அப்புறம் கோயிலுக்குச்சென்று பக்தியோடு சாஷ்டாங்க நமஸ்காரம் பண்ணினார். ஸ்ரீகிருஷ்ண விக்கிரகத்தைப் பார்த்து இன்புறுவாராயினார். ஏகநாதர் ஒருமாச முழுதும் இங்குத் தங்கித் திரிகால பூஜையுங் கண்டு பஜனைகளைச் செவியாரக் கேட்டார். இவ்விதமாக உத்தர தேசத்திலுள்ள எல்லாத் தீர்த்தங்களையும் முக்கிய சிவஸ்தலங்களையும் ஸப்தமுக்தி நகரங்களையும் தரிசித்து ஆனந்த மடைந்தார்.

**ஏகநாதர் ஊர்த் திரும்புதல்**

இனித் தென்னாட்டிலுள்ள தீர்த்தங்களைத் தம் கண்ணாற்காண வெண்ணி அங்கு நின்றும் தெற்கு நோக்கித் திரும்பினார். பின் மெல்ல வழிக்கொண்டு பிரதிஷ்டானம் வந்து சேர்ந்தார். கோதாவரி நதியில் ஸ்நானஞ் செய்து பிம்பலேசுவரர்க்கு நமஸ்காரஞ் செய்தார். நகரத்து மாந்தருள் எவராயினும் தம்மைத் தெரிந்து கொள்ளப் போகின்றனரே யென்று அவர் அதிகாலையிலிருந்து கோயிலுள் மறைந்திருந்தார். அவருக்கு உணவு வேண்டி யிருந்ததனால் மத்தியானம் அவர் நகரத்துட் போகவேண்டி யிருந்தது. எங்கு என்ன கிடைப்பினும் அதைத் திருப்தியாக உண்டார். புலன்களை வென்றிருந்த அவருக்கு இப்பொழுது இன்னது ருசியானது என்கிற உணர்ச்சி போயிற்று. அவரைப் புகழினும் இகழினும் இரண்டும் அவர்க்கு

ஒன்றே. மித்திர சத்துருக்கள் ஜநார்த்தனரே. இந்த எண்ணத்தோடு தான் ஏகநாதர் தீர்த்தங்களைத் தரிசித்தது. இப்பொழுது அவர் நகருட் புகுகிற சமயம் பாட்டன் பாட்டியர் திடீரென்று அவரைப் பார்த்தனர். ஸ்ரீநாதர் உடனே அவர்களை அறிந்துகொண்டு மனத்தால் அவர்களை நமஸ்கரித்தார். 'நான் இன்னானென்று அவர்களுக்கு அறிவித்துக் கொண்டால் அவர்கள் உலக வாழ்க்கையில் என்னை மாட்டவைப்பார்கள். என்னுடைய சற்குருவின் கட்டளையை நிறைவேற்ற முடியாமற் போகும். தக்ஷிண தீர்த்தங்களெல்லாம் தரிசிக்க வேண்டியிருக்கிறது. நான் விரைந்து போக வேண்டும்' என்று எண்ணமிட்டார். இந்த எண்ணத்தோடு தாம் இன்னாரென்று அவர்களுக்கு அறிவித்துக் கொள்ளவில்லை. ஆயினும் அவர்கள் கூர்ந்து கவனித்து இவரை யறிந்து கொண்டனர்.

**விருத்த தம்பதிகள் ஏகநாதரைக் கண்டுபிடித்தல்**

"அவன் குழந்தையாக நம்மை விட்டுப் போய் நெடுங் காலமாயிற்று. அவன இப்பொழுது ஆளாகி யிருக்கிறான். நமக்குச் சந்தேகமா யிருக்கிறது" என்று தம்முட் பேசிக்கொண்டே, "அப்பா, நீ எங்களைச் சந்தியில் விட்டுப் போனாயே. இப்படிக்கூட இருதயத்தைக் கல்லாக்கிக் கொள்ளலாமா?" என்று அவரிடம் சொல்லுமுன் கண்களில் நீர் பெருகிற்று. அப்பொழுது ஆண்களும் பெண்களுமாக ஒரு பெருங் கூட்டம் அங்குச் சேர்ந்தது. அவர்கள் "அவர் நாதரோ" யென்றனர். "அவரேதான் அவர்" என்று ஒருவர் சொல்லும்பொழுது, வேறொருவர் "எனக்கு என்னவோ சந்

தேகமா யிருக்கிறது. விருத்த தம்பதிகள் கஷ்டப் படவேண்டிய ஊழிருக்கிறதே. ஊழின் வழி யாவர்க்குப் புலப்படும்?” என்றார். இவ்வளவுக்கும் ஏகநாதர் ஆமென்றும் இல்லையென்றும் சொல்லாமல் மௌனமா யிருந்தார். அவர் போகத் தொடங்கிய பொழுது பாட்டன் பாட்டியர் அவரைப் பற்றிக் கொண்டனர். ஸ்ரீ ஜநார்த்தனரிட மிருந்து அவர் கைப்பட எழுதித் தாங்கள் வாங்கி வைத்திருந்த ஆஞ்ஞைக் கடிதத்தை யெடுத்து அவருக்குக் காட்டினர். ஸ்ரீநாதர் உடனே அதைத் தெரிந்துகொண்டு அதனைத் தம் தலையில் அன்போடு வைத்துக் கௌரவித்தனர். அகஸ்தியர் ஆஞ்ஞையைக் கடங்கி விந்திய மலை பூமியில் தாழ்ந்தது போல ஏகநாதரும ஜநார்த்தனர் கடிதத்தை வாசித்ததும் தாமிருந்த விடத்தை விட்டுப் பெயராது அங்கேயே யுட்கார்ந்தார். ஜனங்கள் “இது வாசஸ்தலமன்று, வீட்டுக்கு வாரும்” என்றார்கள். இந்த விதமாய் அவர்கள் சொல்லக் காதிற் போட்டுக்கொள்ளவில்லை, மௌனமா யிருந்தார். சராசரங்க ளெல்லாம் அவருக்கு ஜநார்த்தனராகவே காணப்பட்டன. ஆதலால் அவர் சரீரத்திற்குச் சீதோஷ்ணந் தெரியவில்லை. அங்கு நின்ற சில பக்த ஜனங்கள் அப்பொழுதே அங்கேயே ஆகாரங் கொண்டுவந்து அவருக்குக் கொடுக்கவேண்டு மென்றனர். இந்தப் புத்திமான்கள் சொல்லியது சரி யென்று பாட்டன் பாட்டியரும் அங்ஙனமே செய்தனர். ஸ்ரீநாதரும் ஆகாரத்தை அன்போ டுண்டார். மூன்று நாள் அந்த விடத்திலிருந்து அவர் நகரவே யில்லை. பாட்டன் பாட்டியர் அவர் உறுதியைக் கண்டு அங்கு வரவேண்டி யிருந்தது. பனி வெயில் காற்றுப்

பாதிக்காமலிருக்கும்படி சில பக்த ஜனங்கள் அங்கு ஒரு கொட்டகை யிட்டனர். இங்கு ஏகநாதர் சாந்திக சின்னங்க ளணிந்து ஊக்கமாகப் பஜனைகள் செய்தார். அவற்றைக் கேட்ட ஜனங்கள் ஆச்சரியமெய்தி, "இன்னும் இளமை மாறவில்லை. ஆனாலும் என்ன வைராக்கியம்! இவரை மனிதனென்று சொல்லப்படாது. இவர் அவதார புருஷரே" என்று பேசினர்.

**ஏகநாதர் பஜனையிற் பாண்டுரங்கரே பக்கப்பாட்டுப்பாடல்**

இந்த விதமாகப் புகழ்ந்து ஜனங்கள் அவரைக் காலையிலும், மத்தியானத்திலும், இரவிலும் பார்க்க வரத் தொடங்கினர். அவர்கள் பக்தியைக் கண்டு அவரும் பஜனைகள் செய்வார். முயற்சி யில்லாமலே அவர் ஸ்ரீ ஹரியின் அற்புதச் செயல்களை வர்ணிக்கும் சுலோகங்கள் செய்து அவற்றுக்கு வியாக்கியானஞ் செய்வார். ஏகநாதர் சொல்லுவதைப் பின் சொல்லுவதற்கு ஒருவரு மில்லாததால் பாண்டுரங்கருக்குக் கவலை யுண்டாகி அவர் அங்கே ஒரு பிராமண வுருவங் கொண்டு கீர்த்தனங்களில் உதவி செய்தார். ஏகநாதர் வாய் விட்டு வார்த்தைகள் வந்த அக்கணமே அந்தப் பிராமணர் அவற்றைச் சுலபமாகத் திரும்பச் சொல்லிக் கையில் தாளங் கொண்டு ஏகநாதர் இன்பப் பாட்டுக்குப் பக்கப் பாட்டுப் பாடினர். பாட்டெல்லாம் அதிதேவதையான ருக்மிணிநாதர் ஏகநாதருக்குள் அந்தர்ப்பூதரா யிருந்து பாட்டுக்கள் அவருக்குத் தாராளமாய் வரும்படி செய்தார். அதே சமயத்தில் வெளிப்படையாகத் துருவ பதத்தில் முக்கிய ஸ்தானம் வகித்தார். தங்கள் கண்களால் அவரை நேரே பார்த்திருந்த போதிலும் ஒருவரும் உண்மையை யறிந்துகொள்ளவில்லை.

**ஏகநாதர்க்குப் பக்தஜனங்கள் வீடு முதலியன உதவல்**

ஏகநாதர் கீர்த்தனங்களைக் கேட்டோர் தம்மை மறந்திருந்தனர். மிக்க மனக் கொழுப்புடைய மாந்தர் காதில் அவை விழுந்த போது அவர்கள் நல்லவர்களாயினர். அந்தப் புண்ணிய நகர வாசிகள் ஆண் பெண் இரு பாலாரும் "ஸ்ரீ ஏகநாதர் போல் அவ்வளவு பக்தி நிறைந்த பாடல்களும், கீர்த்தனங்களும் யார் பாட வல்லார்? அவற்றைக் கேட்பதிலேயே எல்லாருடைய மனங்களும் பக்குவப்படுகின்றன" என்று தம்முட் பேசிக்கொண்டனர். செல்வாக்கும் செல்வமு முடைய நகரவாசிகள் வந்து கூடி ஒரு கட்டடம் பெரும் பணச் செலவு செய்து கட்டுவித்தனர். இன்னும் அவர்கள் ஏகநாதர்க்கு ஒரு நிலமும், வீடும், சதுரமான வெளியிடமும் கொடுத்தனர். கிருகப்பிரவேச தினத்தன்று பிராமண சமாராதனை செய்தனர். ஏகநாதர் பாட்டன் பாட்டியர்க்கு மன நிம்மதி வந்தது அவர்கள் தங்கள் குல தேவதைகளோடு இவ் வீட்டிற்கு வந்து இவரோடு வசித்தனர். பக்த ஜனங்கள் அவர்களுக்குத் தங்கள் மனமார உணவும் உடையும் உதவினர். வைகுண்டநாதனுக்குப் பிரியனா யிருப்பவனிடம் தனலக்ஷ்மி ஏவல் செய்வாளன்றோ! மாச ஏகாதசிகளில் ஏகநாதர் ஹரிக்குயாம கீர்த்தனங்கள் செய்யத் தொடங்கினர். இராத்திரியெல்லாம் கீர்த்தனம் நடக்கும். ஜனங்கள் திரள் திரளாகக் கூடிப் பகவந் நாமங்களையும் குணங்களையும் பாடக் கேட்டுத் தாமும் பின்னே சொல்லினர்.

ஒரு நாள் ஸ்ரீ ஏகநாதர் திடமொன்று சிராவண மாசத்தில் கிருஷ்ண ஜயந்தியன்று உற்சவம் நடந்து,

மென்று தெரிவித்தனர். எல்லாரும் அது சரியென்று ஒப்பினர். பணக்கார வர்த்தகர் உற்சவத்திற்கு வேண்டிய சாமக்கிரிகளை ஏராளமாகக் கொண்டு வந்து குவித்தனர். கோயில் வெள்ளை யடித்துச் சிங்காரிக்கப்பட்டது. விக்கிரகத்திற்காக ஒரு மூங்கிற் கட்டடம் இலேசாகக் கட்டப்பட்டது. பிராமணர் சிலர் தேவகிரிக்குப்போய் ஜநார்த்தனரைக் கண்டனர். அவர்கள் ஏகநாதரைப் பற்றி எல்லாம் சொல்லினர். ஜனார்த்தனர் கேட்டு சந்தோஷம் பூரித்தார். தம் பரிவாரங்களத்தனையோடும் அவர் ஏகநாதரைப் பார்க்கப் புறப்பட்டார். கிருஷ்ணோத்ஸவத்தில் பூஜை செய்தற்கு வேண்டியபடி சாமான்களை தயார் செய்து எல்லாவற்றோடும் யாத்திரை தொடங்கினார். வாத்தியங்கள், கொடிகளோடு ஊர் கோலம் வெகு உற்சாகமாகப் புறப்பட்டு நடந்தது. பிராமணரை உண்பித்தற்காக வேண்டிய சாமக்கிரிகளை மூட்டை கட்டிப் பொதிமாடுகளின்மே லேற்றி முன்னமே அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. ஜநார்த்தனர் பிரதிஷ்டானம் சேர்ந்தவுடனே ஏகநாதர் வீட்டுக்குப் போனார்.

**கிருஷ்ண ஜயந்திக்கு ஜநார்த்தனர் வருகை**

அங்கு ஓர் அதிசயம் அவர் கண்ணைக் கவர்ந்தது. பிரதான வாசலில் துவாரபாலக வடிவமாக நின்று கொண்டிருந்த ஸ்ரீ தத்தாத்ரேயர் கையிற் சூலத்தோடு திரிபுராரி போல் தோன்றினார். ஜநார்த்தனர் கண்கள் ஸ்ரீ தத்தர்மேற் சென்றவுடனே அவர் ஜகத்குருவை உடனே தெரிந்து

**ஸ்ரீ தத்தாத்ரேயர் துவாரபாலக ரானமை**

கொண்டு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து அவரை அன்போடு தழுவிக் கொண்டார். அப்புறம் ஸ்ரீதத்தர் "ஏகநாதர் உண்மையில் பாண்டுரங்க விக்கிரகமே, ஆதலால் அவரிடம் அன்போடு இங்கு அவர் பிரதான வாசலில் வாசம் செய்யவந்தேன்" என்று ஜநார்த்தனர்க்குச் சங்கதி விளக்கினார். இப்படி விளக்கினதும் இன்னொரு அதிசயம் நிகழ்ந்தது. தத்தர் உடனே மனித வுருவங்கொண்டு உட்சென்று ஏகநாதர்க்கு, "ஜநார்த்தனர் உம்மைக் காணத் தம் பரிவாரங்களோடு தேவகிரியி லிருந்து வந்திருக்கிறார்" என்று அறிவித்தார்.

**ஏகநாதர் குருவைப் பூஜித்தல்**

தம்முடைய சற்குரு வரவைக் கேட்ட ஏகநாதர் எழுந்து வந்து சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து அவரை அன்புறத் தழுவி அவர் பாதங்களைப் பற்றினார். ஏகநாதர் ஜநார்த்தனரைக் கையைப் பிடித்து உள்ளே அழைத்துக்கொண்டு போய் அவரை உட்கார வைத்துத் தம் கையாலேயே அவர் கால்களைக் கழுவினார். கால் கழுவின நீரை உட்கொள்ளும் பொழுது ஏகநாதர் ஆத்மா பரமானந்த மடைந்தது. பின் அவர் பூஜைக்குச் சாமக்கிரிகளைக் கொண்டு வந்து குருவுக்கு அர்ப்பித்தார். அவர் உடம்பில் சந்தனம் பூசினார்; மனித வுருவங் கொண்ட சற்குருவுக்குக் கழுத்தில் ஒரு பூமாலையிட்டுத் தூபதீபங்கள் காட்டினார். இவ்விதமாக ஏகநாதர் அவரைப் பூஜித்த பிறகு அவரிடம் தம் கதையை ஆதியோடந்தமாகச் சொன்னார். ஜநார்த்தனர் திவ்ய சக்ஷுவால் எல்லாம் அறிந்தே யிருந்தன ராயினும் ஆவலோடு கேட்கிறது போலக் கேட்டார்.

**கிருஷ்ண ஜயந்தி உற்சவம்**

கிருஷ்ண ஜயந்தி யுற்சவம் ஏகநாதர் வீட்டில் நடந்தது. வாத்தியங்களி னொலி நிறைந்தது. அபிஷேக பூஜைகளான பின் விக்கிரகம் மூங்கிற் கட்டடத்திற் பிரதிஷ்டிக்கப் பட்டது. ஜனங்கள் விக்கிரக தரிசனத்தின் பொருட்டு இடைவிடாது வந்து கொண்டே யிருந்தனர். அவர்கள் நன்றாகச் சமைத்த உணவுகளை யுடன்கொண்டு வந்து பிராமணர்களை உண்பித்தனர். ஸ்ரீ ஜநார்த்தனர் கூட்டத்தைப் பார்த்துக்கொண்டு ஓராசனத்தில் அமர்ந்திருந்தார்; ஏகநாதர் அவர் முன்னிலையிற் கீர்த்தனம் செய்தார். அப்பொழுது உண்டான ஆனந்த வுணர்ச்சியை வர்ணிக்க யாவர்க்குச் சாத்தியப்படும்! பாண்டுரங்கர் பிராமண வடிவங் கொண்டு பக்கப் பாட்டுப் பாடினர். அவர் தம் கால்களிற் கிங்கிணி யணிந்து கொண்டு ஆடினர். பகவானுக்குப் பாகவதர்களிடத்தில் அதிக அன்பு உண்டு. ஏகநாதர் வாயிலிருந்து வார்த்தை வரவேண்டியதுதான் தாமதம், அந்தப் பிராமணர் முன்னமே நெட்டுருப் பண்ணி யிருந்தவர் போல அதை உடனே பாடினர். இதைக் கண்ட அந்த க்ஷேத்திரத்துப் புருஷர் ஸ்திரீக ளெல்லாம் ஆச்சரியங் கொண்டு, "இந்தப் பக்கப் பாட்டுக்காரப் பிராமணோத்தமனுக்குக் கதை முழுதும் முன்னமே தெரிந் திருக்கிறதே!" என்றனர். பகற் காலத்திற் பிராமண சமாராதனை நடந்தது. இராத்திரியில் ஹரி கீர்த்தனங்கள். பைடண நகரத்துப் பக்த ஜனங்களின் மனம் களிப்படைந்தது. நவமியன்று உணவு ஏராளமாய்ச் சமைக்கப் பட்டது. உண்டோர் தொகை அதிகம். அன்பு நிறைந்த உதாரராகிய வைஷ்ண

வோத்தமர் உபவாஸத்தை முடித்தனர். அப்புறம் குழந்தை கிருஷ்ணனுடைய பால லீலைகளைப்பற்றிப் பிரசங்கமும் கோபாலகாலா உற்சவமும் நடந்தன. பாகவதத்திற் சொல்லிய விளையாட்டுக்க ளெல்லாம் இங்கு ஆடிக் காட்டப் பட்டன. ஏகநாதர் ஒவ்வொரு சமயம் ஒவ்வொரு வேஷத்தோடு ஆடினார். ஷட்தர்சனங்களும், முப்பத்தாறு பாஷண்ட மதங்களும், சித்தாந்தமும் ஏகநாதராற் சம்பிரதாயப்படி விளக்கப்பட்டன. பாமரர் சந்தோஷ மடைந்தனர், பண்டிதர் சித்தாந்தத்தை தெளிந்தனர்; அவர் வாக்கு அருள்வாக்கென்றனர். இப்படி ஆடல் பாடல்களோடு ஸ்ரீ கிருஷ்ண விக்கிரகம் கடைசியாக ஊஞ்சலில் வைக்கப் பட்டது. அப்புறம் ஆரதி யெடுத்துப் பக்ஷணங்கள் வழங்கப் பட்டன. ஜநார்த்தனர் ஏகநாதரை நோக்கி, "பக்கப் பாட்டுக்காரப் பிராமணர் யார்? அவர் எங்கிருந்து வந்தவர், அவர் பெயர் என்ன என்று கேள். அவர் பக்கப் பாட்டுப் பாடுவது அபூர்வ மாதிரியா யிருக்கிறது. உன்னுடைய பூர்வ புண்ணிய மிகுதியாலேயே அவர் சங்கம் உனக்குக் கிடைத்தது. கீர்த்தனங்களுக்கு அவர் உயிர்கொடுக்கிறார்; கேட்கிறவர்களுக்கும் ஆத்மசாந்தி யுண்டாகிறது. நீங்களிருவரும் ஆயுட்காலமெல்லாம் இப்படியே சேர்ந்திருக்க வேண்டும். இது கூடுமானால் சங்கீர்த்தனங்களைக் கேட்டு உலகம் க்ஷேமப்படும்" என்றார். ஏகநாதர் அப்பிராமணரை நோக்கி, "நீர் பிராமணரா யிருக்கிறீர், எங்கிருந்து வந்தீர்? நீர் யாவர்? உம்முடைய கிருகம் எங்குள்ளது? உம்முடைய பெயரென்ன? எங்களுக்குச் சொல்லும்" என்று கேட்டார். ருக்மிணி நாதர் கேட்டுப் பதில் சொல்வார்: "எனக்கு நிலையான இடமில்லை. எங்குப் பக்தஜனங்களைக் காண்கி

றேனே அங்கு அவர்களுடைய சங்கத்தில் என் காலத்தைக் கழிக்கிறேன். இந்த என் சரீரத்தின் பெயர் விட்டோபா. எனக்கு மனைவி புத்திர பாசங்களில்லை. கீர்த்தனங்களிற் பக்கப் பாட்டுக்காரர்க்குத் தலைமை வகிக்கிறேன். என்னுடைய சாமர்த்தியம் அவ்வளவுதான். எனக்கு ஒரு பிடி யன்ன மிருந்தாற் போதும். எப்போதும் உம் சங்கத்தில இருக்கவே எனக்கு ஆசை, வேறில்லை.'' இவ்வளவே சொன்னார் தம்மைப் பற்றிய அடையாளங்கள். இவ் விடையைக் கேட்ட ஜநார்த்தனர் மிகக் களித்தாராயினும் அவர் உண்மையில் இந்திரை கேள்வரென்று அறிந்து கொள்ளவில்லை. பதினன்கு நாள்கள் இப் பிரமாண சமாராதனை நடந்தது.

**விருத்த தம்பதிகள் வேண்டுகோளும் ஜநார்த்தனர் ஆஞ்ஞையும்**

எல்லாம் முடிந்த பிறகு ஜநார்த்தனர் "நான் இப்பொழுது தேவகிரிக்குத் திரும்பப் போகிறேன்'' என்றார். விருத்த தம்பதிகளிடம் அவர் விடைபெற்ற பொழுது அவர்கள் அவர் பாதத்தைத் தங்கள் சிரங்களால் தொட்டு, "பகவனே, எங்களுக்கு ஒரு வேண்டுகோள் உளது: பாநுதாஸ் வழித்தோன்றல்களுள், நாதன் ஒருவனே மிகுந்தான். தங்கள் கட்டளையால் அவன் இங்கிருக்கின்றான். ஆயினும் அவன் மனம் உலக விஷயங்களிற் பற்றற்றிருக்கிறது. அவனுக்குக் கிருஹஸ்தனாவதற்கு இஷ்டமில்லை. ஆகலால் ஸ்வாமிகளே அவனுக்கு விவாஹம் செய்துகொள்ளும்படி ஆஞ்ஞாபிக்க வேண்டுமென்று நாங்கள் மன்றாடுகிறோம். தாங்கள் அவனுக்கு விவாகம் நடக்கும்படி செய்வீர்களாயின் எங்களுக்கு மனம் நிம்மதிப்படும். எங்கள்

கண்கள் பசியாறும். ஸ்வாமிக்குப் புகழ் அதிகரிக்கும்'' என்று இரந்தனர். விருத்த தம்பதிகள் இவ்வாறு மன்றுடுவதைக் கேட்ட ஜநார்த்தனருக்கு மனம் இரங்கியது. அவர் ஏகநாதரைக் கூப்பிட்டு அமிருத வசனங்கள் சொன்னார்: “தானாக ஒரு வது உன்னைத் தேடி வருமாயின் தடை சொல்லாமல் விவாகம் செய்து கொள். நீ கிருஹஸ்தனாயிருத்தற்கு ஓர் ஆக்ஷேபமுங் கிடையாது. ஊர் வம்புக்கும் இடமில்லாமற் போம். ஆசிரமங்களு ளெல்லாம் கிருஹஸ்தாசிரமந்தான் அதிமேன்மையானது. இதில் நீ இந்திரியங்களை யடக்கி உன்னுடைய விசேடகாரியங்களை யெல்லாம் இன்பமாகச் செய்யலாம்; அவை யாவன: எல்லாப் பிராணிகளிடத்தும் அருளுடைமை, பிராமணர்க்கும், விருந்தினர்களுக்கும், பசித்தோர்க்கும் அன்ன மளித்தல், ஸர்வோபசாரங்களோடும் விஷ்ணுவுக்குப் பூஜை யாற்றல், பக்தியோடு கீர்த்தனங்கள் செய்தல், பகவானது நாம குணங்களை அன்போடு இடையறாது உரைத்தல்.'' தம்முடைய சற்குருவின் ஆஞ்ஞையை ஏகநாதர் சாந்தமாக ஒப்புக்கொண்டார். மவுனமாக அவர் தம் நெற்றியால் ஜநார்த்தனர் பாதத்தைத் தொட்டு, “இஃது என் விதியாயின் நடக்கும்'' என்றார். விவாகஞ் செய்தலால் தம் பாட்டன் பாட்டியர்க்குச் சந்தோஷந் தர வேண்டுமென்று ஏகநாதர்க்கு ஆஞ்ஞை தந்து ஜநார்த்தனர் தம் பரிவாரங்களை யெல்லாம் உடன் கொண்டு தேவகிரிக்கு மீண்டார். ஏகநாதர் தம் சற்குருவுக்கு வழிவிட்டார். அவர் ஞாபகத்தை தம் இருதயத்துள் நிறுத்தினார். ஜநார்த்தனரும் தம் அபிமானத்தையும் அன்பையும் ஏகநாதரோடு விட்டுப் பரிவாரத்தோடு தேவகிரி போய்ச் சேர்ந்தார்.

## நான்காம் அத்தியாயம்

**விருத்த தம்பதிகள் கவலை**

விருத்தரான பாட்டனாரும் பாட்டியாரும் இரவும் பகலும் கவலையாகி, "ஐயோ, ஏகநாதனுக்கு ஒரு பெண் தேடிப் பெறக் கூடுமாயின் நம் கண் முன்னேயே அவனுக்கு விவாகஞ் செய்துவிடலாம்" என்று சொல்லிக்கொண்டிருந்தனர். இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்ட பக்த ஜனங்கள், "இவ் விஷயத்திற் கடவுள் உங்களுக்குத் துணை செய்வார். உங்கள் மனத்திற் கவலையே வேண்டுவதில்லை. ஸ்ரீ நாதர் மனம் உலகத்தில் ஒட்டாதிருப்பது உண்மைதான். அவருக்கு விவாகத்தில் விருப்பமிருக்குமோ இராதோ என்று நாங்கள் மனமுளைகிறோம். ஆனால் பாண்டுரங்கர் நம் ஆசைகளைப் பூர்த்தி செய்திருக்கிறார். ஏகநாத ஜநார்த்தனர் கட்டளையைக் கடக்கவேமாட்டார். விவாக மாதங்கள் வரும்பொழுது நம்மாற் கூடியவரை பார்ப்போம்" என்றனர். அவர்கள் இவ்வாறு உறுதியுரைத்ததைக் கேட்டு விருத்தருக்கு மனம் சமாதானமடைந்தது. சிறிதுகாலஞ் செல்ல விவாக மாதங்கள் வந்தன.

**ஏகநாதர்க்குத் தெய்வ கிருபையாற் பெண் அமைதல்**

அங்கொரு பட்டணத்தில் ஒரு பிராமணரிருந்தார். அவர் பெண் விவாகத்துக்கு யுக்த வயதை யடைந்திருந்தாள். அவர் வரன் தேடிக்கொண்டிருந்தார். ஆனால் அவள் ஜாதகம் ஒருவருடைய ஜாதகத்தோடும் பொருந்தவில்லை. இதைப் பற்றி மிக்க கவலை கொண்டு அவர் ஓர் இரவு உறங்

கிறார். பாண்டுரங்கர் கனவில் தோன்றி, "கோதாவரிக் கரையில் பிரதிஷ்டானத்தில் ஏகநாதனென்று ஓர் உத்தம விஷ்ணு பக்தனிருக்கிறான். உன் பெண்ணை ஸர்வாலங்கார பூஷிதையாக அந்தக் குடும்பத்திற் கொண்டு விட்டுவிடு" என்றுரைத்தனர். ருக்மிணிநாதர் இவ்வாறு கனவிலே தோன்றி யுரைத்தது இராத்திரியில். பிராமணர் திடீரென்று விழித்து இக்கனவைப் பற்றி ஆச்சரியங் கொண்டார். தம் மனைவியிடத்தில் இதைப் பற்றி யுரைத்துத் தாமே பிரதிஷ்டானஞ் சென்று ஏகநாதர் இருக்கு மிடத்தை ஜனங்க ளிடம் விசாரித்தார். அவர்கள் வீட்டைக் காட்டினர். பிராமணர் அவரைப் போய்க் கண்டு ருக்மிணிநாதர் தமக்குக் கனவில் உரைத்ததைச் சொன்னார். பட்டனார் பாட்டியாருக்கு வந்தனை செய்து, "உங்கள் பேரனுக்கு என் பெண்ணைக் கொடுக்கின்றேன்" என்றார். அவர்களும் சந்தோஷமாக ஏற்றனர். அவர்கள் சோதிடரைக் கூப்பிட்டு ஜாதகப் பொருத்தம் பார்த்த பொழுது பொருத்தம் நன்றாயிருந்தது; ஆதலால் இரண்டு திறத்தாருக்கும் திருப்தி தரும்படியான ஒரு விவாக நாளை நிர்மானித்துக் கொண்டனர். பிராமணர் வரனுடைய பிதாமகருக்கு, "நான் வேண்டிய ஏற்பாடு செய்து என்னுடைய பெண் மனைவி பரிவாரங்களோடு பிரதிஷ்டானத்துக்கு வருவேன். என்னுடைய பெண்ணைச் சிங்காரித்து உங்கள் குடும்பத்திற் கொடுத்தல் எனக்குப் பெரும் பாக்கிய மாகும்" என்று வாக்குக் கொடுத்துவிட்டுத் தம் ஊருக்குப் போயினர். போய்த் தம மனைவியை நோக்கி, "நம்முடைய பெண்ணுக்குக் கிடையாதவரன் கிடைத்திருக்கிறது; மஹா பக்தரும், பாகவத சிரோமணியுமாகிய அவர் திவ்ய அவதார

மென்று எனக்குத் தோன்றுகிறது'' என்றார். மன தில் ஆனந்தமுடையராய் இருவரும் வீட்டில் விவாகத் துக்கு வேண்டிய காரியங்களைச் சித்தஞ் செய்தனர்

**விவாக ஏற்பாடுகள்**

பிரதிஷ்டானத்தில், பாட்டன் பாட்டியா சக்ர பாணி வமசத்தில் அவதார புருஷனாய்க் குல தீபமா யிருந்த ஏகநாதர் புகழ் நாளுக்கு நாள் மிகுவதைக் கண்டு அதி சயமடைந்தனர். ஆயினும் வீட்டில் உட்கார்ந்தவாறே அவர்கள் ஒருவரோடொருவர், "விவாகம் நம் வீட் டில் நடக்கப்போகிறது. நம்முடைய பந்துக்களோ நெடுந் தூரத்தி லிருக்கிறார்கள். விஜாபுர நாடு இங் கிருந்து பதினேழு யோஜனை தூரமிருக்கிறது. நம் முடைய பந்துக்களும ஆப்த நண்பர்களும் அங்கிருக் கிறார்கள். அவர்களுக்குக் கடிதமெழுதி யனுப்ப வேண்டும்'' என்றனர். அவ்விடத்தில் சகோதரன் பிள் ளையும் மஹா பக்தரு மாகிய உத்தவ னென்பவர் இருந்தார். அவர் விலாசத்துக்கு விவாக கடிதம் ஒன்று அனுப்பப்பட்டது. அவ்வாறே மற்ற ஆப்த நண்பர்களுக்கும், பந்து ஜனங்களுக்கும் கடிதங்கள் அனுப்பப்பட்டன. "நாங்கள் விருத்தரா யிருக்கி றோம். இதுதான் நாங்கள் செய்து பார்க்கக் கூடிய கடைசி விவாகம். உங்கள் பரிவாரங்களை யெல்லாம் கொண்டு வருக. நாங்கள் ஆவலோடு எதிர்பார்த் துக்கொண் டிருக்கிறோம்'' என்று கடிதம் நன்றாக அமைந்திருந்தது. ஒரு கூலியாள் ஏற்பாடு செய்து கடிதங்களை அவன் மூலமாய் அனுப்பினார்கள். இதன் மத்தியில் பிரதிஷ்டானத்துப் பக்தஜனங்கள் விவாக ஏற்பாடுகள் செய்வதில் நான் முன் நீ முன்னென்று

இகலிக்கொண் டிருந்தனர். ஸ்ரீ ஹரியை ஆப்த நண்பனாகக் கொண்டவ னிடத்துப் பிரபஞ்ச முழுதுமே பக்ஷமாயிருக்கும். லக்ஷ்மி அவன்வீடு தேடி வருவாள். உலக விஷயங்களில் ஒரு குறைவு மிருப்பதில்லை. கடிதங்களை வாசித்துக் கேட்டதும் விஜாபுரத்துப் பந்துஜனங்கள் மிகவும் சந்தோஷித்தனர். பூர்ண வைஷ்ணவரும் புத்திமானுமாகிய உத்தவர் விவாகத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளோடும் மனைவியோடும் பிரதிஷ்டானம் வந்துசேர்ந்தார். விருத்த தம்பதிகளைக் கண்டு பரமானந்தப் பட்டார். உத்தவர் ஏகநாதர் காலில் விழுந்தெழுந்து தம் கைகளை யுயரத் தூக்கி அவரைத் தழுவினர். அப்படி அவர்கள் ஒருவரை யொருவர் தழுவியபொழுது அவர்கள் மனம் பரமசாந்தி யடைந்தது. தாங்களிருவரும் சந்திக்க நேர்ந்ததை நினைத்து இருவரும் கண்ணீர் விட்டனர். பெண்ணின் பிதாவும் தமது தாரமான பட்டணத்தில் ஆகாரத்துக்கு வேண்டிய ஏற்பாடுகள் அபரிமிதமாகச் செய்தார். மூட்டைகளைக் கட்டி எருதுகளின் மேல் வைத்து முன்னமே யனுப்பினர். இருதிறத்தாருக்கும் ஆடையாபரணங்கள் தயார் செய்தார். தம் ஜனங்களோடு அவர் பிரதிஷ்டானம் வந்து சேர்ந்தார். ஒரு பெரிய மாளிகை திட்டம் செய்து தாமும் தம் மனைவியும் அங்குத் தங்கினர். நாளைக் கல்யாண மென்று அழைப்புப் பத்திரங்கள் நகர மாந்தர்க் கெல்லாம் அனுப்பப்பட்டன.

**விவாகச் சடங்குகள்**

முதற்சடங்குகள் ஆரம்பித்தன: பகவானையாராதித்தல், பிராமணர்களுக்குச் சமாராதனை, பிராமணரும் மற்றையோரும் வஸ்திரம் வழங்கல், கல்யாண வாத்தியம் முழங்கல், மாப்பிள்ளை பெண்களுக்கு மஞ்சள் விழா. ஒவ்

லொருத்தறததார மண்டபத்திலும் அமிர்தம் போன்ற பலவகை யுணவுகள் பாகஞ் செய்யப் பட்டன. பிராமண சமாராதனை சங்கர்ப்பத்துக் கேற்றதா யிருந்தது, மற்றவர்களுக்கு விருந்தும் அப்படியே. மணமகன் பக்கத்துக்கு உத்தவர் அத்தியக்ஷரா யிருந்தார். சகல காரியங்களையும் அவர் சந்தோஷத்தோடு கவனித்தார். அந்த க்ஷேத்திரத்துப் பக்த ஜனங்கள் அவர் சொல்லிய படியே ஆதரத்தோடு செய்தனர். பந்துக்களும், நகர மாந்தரும், பிராமணரும் உடன் வரவும், வாத்தியங்கள் முழங்கவும் அவர்கள் மணமகனை யழைக்க ஊர் கோல மாகச் சென்றனர். கூடை கூடையாக நிறைந்த பக்ஷணங்களோடு மணமகளைச் சார்ந்த ஸ்திரீகள் ஊர்கோலத் திற் சேர்ந்தனர். மணமகனுக்கு ஆடை யாபரணங்கள் வழங்கி அவரை ஊர்கோலமாக விவாக மண்டபத்துக்கு அழைத்துச் சென்றனர். அங்குச் சேர்ந்தவுடனே மணமகனுக்கு உரிய மரியாதை நடந்தது. பிராமணர் மணமகனுக்கும், மணமகளுக்கு மிடையே விவாகத் திரையைப் பிடித்தனர். "ஸாவதானம் ஸாவதானம், ஸ்ரீ கிருஷ்ணனைச் சிந்தி" என்னுஞ் சொற்கள் உச்சரிக் கப்பட்டன. அஷ்டகங்களைச் சொல்லி பிராமணர் விவா கச் சடங்கைப் பூர்த்தி செய்தனர். கலியாண வாத்தி யம் இடை விடாமல் முழங்கியது. அப்புறம் பொரி வழங்கப் பட்டது, வந்தவர்களுக் கெல்லாம் தானம் வழங்கப்பட்டது. மணமகள் மணமகன் வீட்டிற் புகும் சடங்கும், லக்ஷ்மி பூஜையும் முறையே செய்யப் பட்டன. ஐந்து தினங்கள் விவாகோற்சவம் யுக்த சடங்குகளோடு நடந்தது. ஆடைகள் எல்லாருக்கும் வழங்கப்பட்டன. ஒன்றுக்குங் குறைவில்லை. இந்தப் பிரகாரமாக மணமகள் தந்தை தம் மகளை விவாகஞ்

செய்து கொடுத்துவிட்டுத் தம் ஊர்க்குப் போயினர். பாட்டனார், பாட்டியா ரிருவரும் பேர்த்திப் பெண்ணைக் கண்ணாரக் கண்டு மனநிம்மதி யெய்தினர். விஜாபுரத்தி லிருந்து விவாகத்திற்குத் திரளாக வந்த மித்ர ஜனங் களும் நடந்தவற்றைக் கண்டு பேரானந்த மடைந்து தம் நாடு திரும்பினர். உத்தவர் மட்டும் ஏகநாதர்க்குத் தொண்டாற்றும் ஆசையோடு பின் தங்கினார். மனம் வாக்குக் காயங்களால் தொண்டாற்ற அவர் எப்பொழு தும் தயாராயிருந்தார். ஏகநாதர் கருத்துக்களைச் சொல் லாமலே அறிந்தவராய் உத்தவர் இன்னது செய்வது இன்னது செய்யப்படாதது என்று தெரிந்திருந்தார். ஏகநாதர்க்கு இந்த வித்மாத்ர் தொந்தரவையே யற்றது. அவர் இருதயம் அன்பு மயமாயிருந்தது.

**ஏகநாதர் இல்லற நடாத்தல்**

ஏகநாதர் மனைவி கிரிஜாபாய் உத்தம குணங்கள் வாய்ந்தவள். ஸ்ரீஏகநாதர்க்குப்பணி செய்ய எப்போதும் அருகிலிருந் தாள். அவள் வயதிற் சிறியவள், குழந்தையே; ஆயினும் வழக்கமான வீட்டுக் காரியங்க ளெல்லாம் அறிந் திருந்தாள். பாட்டனார், பாட்டி யார்க்கு அடங்கி அவர்கள் சொற்படி நடந்தாள். இவ் விதமாக அவர்கள் தங்கள் பேர்த்திப் பெண் குணத் தைக் கண்டு மகிழ்ந்து, "ஜநார்த்தனர் தயையால் நம் கண்களின் ஆசை பூர்த்தி யாயிற்று" என்றனர். புதிய தம்பதிகள் தங்களுக்குக் கிடைத்ததைக்கொண்டு வாழ்க்கை நடத்தத் தயாரா யிருந்தனர். ஆயினும் ஆடையும் உணவும் வந்து குவிந்தன. ஆதலால் பிராம ணர்க்குத் தானங்களும், பசித்தோர்க்கு உணவும் கிடைத்தன. ஆதாரம் வழங்குவதில் ஜாதி பேதம்.

பாராட்டப்படவேயில்லை. ஏகநாதர் ஒவ்வொரு ஜந்துவையும் பக்ஷத்தோடு பார்த்தார். முற்காலத்தில் பானுதாஸர் பாண்டுரங்க விக்கிரகத்தை ஓர் ஆலயத்திற் பிரதிஷ்டை செய்திருந்தார். ஏகநாதர் பக்தி சிரத்தையோடு இதனைப் பூஜித்தார். ஒவ்வொரு நாளும் நண்பகல் கழிந்ததும் ஏகநாதர் பிராமணர்க்குத் தானம் வழங்கினார். அப்புறம் புராண படனம் நடந்தது. இராத்திரி எப்பொழுதும் பஜனை நடந்தது. அந்த க்ஷேத்திரத்தி லுள்ள புருஷரும் ஸ்திரீகளும் அன்பு ஆதரத்தோடு கேட்டற்கு வந்தனர். நாளுக்கு நாள் ஏகநாதர் புகழ் மிக்கோங்கியது. பாட்டனார் பாட்டியார் இந்த வாழ்க்கையைத் தங்கள் கண்ணாரப் பலநாள் கண்டு களித்தனர். அப்புறம் அவர்கள் காலம் முடிய அவர்கள் வைகுண்ட லோகத்துக்குப் போயினர். ஸ்ரீ ஏகநாதர் தம் கையாலேயே அபரக் கிரியைகளைச் செய்தார். அவர் கர்மாகர்ம நியமத்துட் பட்டவரல்லராயினும், ஜனங்களின் பொருட்டு அவர் வழக்கமான அபரக் கிரியைகளைச் செய்தார். ஸ்ரீ விட்டலர் பிராமண வேடத்தோடு கீர்த்தனங்களிற் பக்கப் பாட்டுப் பாடிக்கொண்டிருந்தார். யோகிகள் அஷ்டாங்க யோகம் புரிந்து தியானிக்கினும் அவர்களுக்குக் காட்சி தராத சகுண பகவான் ஏகநாதர் பக்தியாலேயே தாளங் கைக்கொண்டு அவரோடு பாடிக்கொண்டிருந்தார்.

**ஜநார்த்தனர் முக்தியடைதல்**

திடீரென்று ஒருநாள் யாரோ ஒருவன் தேவகிரியிலிருந்து ஜநார்த்தன சுவாமி தம் சரீரத்தை யிங்கு நிறுத்தி வைகுண்டத்திற் கேகினரென்று செய்தி கொண்டுவந்தான். ஏகநாதர் தம்முடைய சற்குருவின்

புறப்பாட்டைப் பற்றிக் கேட்டாராயினும் கொஞ்சங் கூடத் துக்கப்பட்டாரல்லர். ஏனென்றால் அக்ஷயனும் அவ்வியக்தனும் அகண்ட பரிபூர்ணனுமுள்ள ஜநார்த்தனன் எல்லாப் பிராணிகளிடத்தும் வியாபித்திருக்கிறானன்றோ. ஆயினும், உத்தவரைத் தனியே கூப்பிட்டு மாச ஷஷ்டியைக் கொண்டாடும் படியும் அதற்கு வேண்டியன சித்தஞ் செய்யும்படியும் சொன்னார்.

**மாச ஷஷ்டி கொண்டாடுதற்கு ஏற்பாடு**

உத்தவர் ஏகநாதர் பாதத்தைத் தொட்டு நெற்றியில் வைத்து, "மாச ஷஷ்டியைக் கொண்டாடுவதற்கு நியாயம் சொல்ல வேண்டும்" என்று கேட்டனர். ஏகநாதரும் அவர் கருத்தறிந்து எல்லாம் எடுத்துச் சொன்னார். "உத்தவா, மாச ஷஷ்டி ஜநார்த்தனருடைய பிறந்த நாளாகும். பங்குனிமாசம் கிருஷ்ண பக்ஷத்து ஷஷ்டியில் ஸ்ரீ தத்தாத்ரேயர் தரிசனம் அவருக்குக் கிடைத்தது. அந்தத் தினத்திலேயே ஸ்ரீதத்தாத்ரேயர் எனக்கும் திருவருள் பாலித்தார். அந்த நாளிலேயே ஜநார்த்தனர் நாமம் நீங்கி நிர்க்குணமானதும். இந்த நான்கு செய்திகள் இதுவரை நிகழ்ந்திருக்கின்றன. இனி நிகழ்வது நீ சீக்கிரம் காண்பாய். ஆதலால், பிராமண சமாராதனைக்குத் தக்க ஏற்பாடுகள் செய்க" என்றனர். உத்தவர் "அப்படியே" என்று சொல்லி நமஸ்கரித்தார். ஏற்பாடுகள் செய்யுங்கால் கேட்காமலே சில பொருள்கள் வந்தன. வேறு பொருள்கள் கடனுக்கு வாங்கப் பட்டன. வணிகரிடத்தில் எழுநூறு ரூபாய் ரூபாயாக வாங்கப்பட்டது. அதற்கு ஒரு நோட்டும் கொடுக்கப்பட்டது. உத்த

வர் திரும்பக் கொடுக்கும் காலத்தைக் கண்டு கடன் வாங்குங் காரணத்தையும் விளக்கி, நோட்டை ஏகநாதர் பெயரால் எழுதினார்.

**ஷஷ்டி உற்சவம்**

இம்மாதிரி எல்லா ஏற்பாடுகளும் செய்துவிட்டு இந்த ஷஷ்டி யுற்சவத்தை அன்போடு ஆரம்பித்தார். ஊர் முழுதும் அழைக்கப்பட்டது. எல்லாரும் இருதய பூர்வகமாக நுழைந்தனர். திண்டி வாத்தியக்காரரோடு அவர்கள் முதலில் கோதாவரிக் கரைக்கு ஊர்கோலமாகச் சென்று அங்கே தாளம் வீணை மத்தளங்களோடு ஒரு பஜனை கோலாகலமாக நடத்தினர். கருடக்கொடிகள் பறந்தன, பேரிகைகள் முழங்கின, வாத்தியங்கள் நல்லிசையை யொலித்தன. வைஷ்ணவர்கள் செய்த ஜய ஜய சப்தம் ஆகாசமெங்கும் நிறைந்தது. நண்பகலில் திண்டி வாத்தியக்காரர் ஊர்கோலத்தில் முன்செல்ல அவர்கள் ஏகநாதர் கிருகத்துக்கு வந்தனர். பிராமணர் அப்புறம் ஸ்நானஞ் செய்து பந்தி பந்தியாக உட்கார்ந்தனர். ஸ்ரீ ஏகநாதர் தம்முடைய கையாலேயே பிராமணருடைய கால்களைக் கழுவி அந்த ஜலத்தை யுட்கொண்டு பரமசந்தோஷ மடைந்தனர். தம் கையாலேயே அவர் அவர்கள் சரீரத்திற் சந்தனம் தடவி அவர்களுக்குத் துளசி பத்திரமும் புஷ்பங்களுங் கொடுத்தனர். இவ்வாறு பிராமணர்களைப் பூஜித்து அவர்களுக்குத் திவ்ய உணவு பரிமாறினர். பத்துருக்கு நெய்யும் குழம்புகளும் இலைகளில் அன்னத்தோடு படைக்கப்பட்டன. அனபோடு அவர் 'இந்த உணவை யருந்துபவர் எல்லாப் பிராணிகளிடத்தும் நிறைந்த ஜநார்த்தனரே' யென்னும் மந்திரத்தை ஜபித்தனர்.

பிராமணர் அப்புறம் ஆபோசனம் உட்கொண்டு விட்டல் பெயரை எல்லோரும் சேர்ந்து உரக்கக் கத்திக் கொண்டு சாப்பிடத் தொடங்கினர். யார் யாருக்கு எது எது பிரியமோ அது அது கட்டில் கொண்டு வந்து பரிமாறப்பட்டது. அப்பொழுது ஸ்ரீஏகநாதர் சாவகாசமாய்ச் சாப்பிடுங்கள் என்று சொல்லிக் கொண் டிருந்தார். எல்லாரும் திருப்தியடைந்த பிறகு அன்புவார்த்தை சொல்லிக்கொண்டு கைகழுவ எழுந்திருந்தனர்; அவர் அவர்களெல்லாருக்கும் தாம்பூலமும் பணதானமும் வழங்கினார். அவர்கள் அப்புறம் வீட்டிற்குப் போயினர். விட்டவர், உத்தவர், ஏகநாதர், சந்தோஷமாக உதவி செய்த நகர மாந்தர் இவர்கள் கடைசிப் பந்தியாக உண்ணவிருந்தனர். இராத்திரி வருதலும் ஏகநாதர் ஒரு பஜனை செய்தார். அநேக ஜனங்கள் கேட்க வந்தனர். அவர் அருள்வாக்கெல்லாம் பக்தி பூர்வமாயிருந்தமையால் ஆனந்தத்துக்கு என்ன குறைவு இருக்கப் போகிறது? இந்த விதமாக இராத்திரி கழிந்தது. இந்த மாதிரிக் கொண்டாட்டமே ஸப்தமியன்றும் நிகழ்ந்தது. அஷ்டமியன்று 'கோபாலகாலா' நடந்தது. நின்று வாத்தியக்காரர் முன் நடக்க ஊர்கோலம் கோதாவரிக் கரையை அடைந்தது. இங்குப் பெருந் திரளான தீர்த்த யாத்திரிகர் கூடியிருந்தனர். அவர்கள் பகவந்நாமத்தைச் சொல்லிக் கொண்டு ஜய ஜய சப்தம் முழக்கினர். 'கோபாலகாலா' முடிந்ததும் எல்லாருக்கும் பிரசாதம் வழங்கப் பட்டது. இராத்திரியில் நாடகங்கள் நடந்தன; எல்லாரும் ஆனந்த முற்றனர். நாடகமான பிறகு ருக்மிணி நாதனைக் கிடத்தி வைத்தார்கள். பொழுது விடிந்ததும் சாதுக்களையும் ஸந்தர்

களையும் கவுரவித்தார்கள். இந்த விதமாக ஷஷ்டி யுற்சவம் கொண்டாடப் பட்டது. எல்லாரும் ஆனந்த முற்று, "உலக ரக்ஷணத்தின் பொருட்டு இந்த ஏகநாதப் பெரியார் பூலோகத்தில் அவதரித்திருக்கிறார். பிரதிஷ்டானம் பிராமணர்கள் நிறைந்த க்ஷேத்திரம். பிராமணர்களெல்லாம் பரமவைதிகர்கள். அவர்களுக்குப் பக்தி மார்க்கத்தைக் காட்டுவதற்காக அவர் சகுண அவதாரமாக வந்திருக்கின்றார்" என்று வியந்தனர்.

**வணிகன் கடனுக்காக ஏகநாதரைச் சபித்தல்**

இப்பொழுது யாரிடத்தில் விருந்து சாமான்கள் கடன் வாங்கி அதற்காக உத்தவர் நோட்டு எழுதிக் கொடுத்தாரோ, அந்த வியாபாரி நோட்டிற் கண்ட காலம் வந்ததால் பணத்தைக் கேட்கத் தொடங்கினான். உத்தவர் "ஒரு கஷ்டம் வரவேண்டி யிருக்கிறது. வந்ததும் பணத்தை உன் வீட்டிற்குக் கொண்டுவந்து தருகிறேன். இதை நம்பி யிரு" என்றனர். அப்படி உறுதி யுரைத்தும் அப் போக்கிரி வர்த்தகன் கேட்டானில்லை. "உங்களுக்குக் கேட்காமலே பணம் இடையறாது வந்து கொண் டிருக்கிறது, நீங்கள் அதைப் பிராமண சமாராதனையிற் செலவிடுகிறீர்கள். ஏகநாதர் சாதாரண உலக வாழ்க்கையை விட்டுப் பஜனைகளில் தலைகால் தெரியாது குதிக்கிறார். எல்லாரையும் பித்துக் கொள்ளச் செய்கிறார். இனி இது நடக்க நான் சம்மதியேன்" என்றான். உத்தவரிடம் அப்படிச் சொல்லியதோடமையாது இறுதியாக துன்மார்க்கன் ஏகநாதர் வீட்டிற்கும் வந்தான். ஏகநாதர் ஸ்நான ஜபாதி

களி விருந்தார். ஆயினும் அவன் "நீர் என் பணத்தைக் கொடுக்குமுன் சாப்பிட்டீராஞல் பாண்டுரங்கர் மேல் ஆணை யிருக்கிறது" என்று சபித்து விட்டுப் போஞன். ஏகநாதர் வழக்கம்போல் தேவதைகளுக்கும் அக்கினிக்கும் நைவேத்திய ஆகுதிகள் செய்து பிராமணர்க்கு விருந்திட்டா ராயினும் தாம் மாத்திரம் வணிகன் சாபமிருப்பதால் உண்ண மறுத்தார். உத்தவரும் உத்தமி கிரிஜாபாயும் அவ்வாறே உண்ணுதிருந்தனர். சூரியன் அஸ்தமித்தது. பணம் ஒன்றும் வந்தபாடில்லை. உத்தவர் தம்மா லானமட்டும் சிரமப்பட்டும் பணம் எங்கும் அகப்படவில்லை. இராத்திரி ஒரு யாமம் கழிந்தது. இன்னும் அவர்கள் பட்டினிதான்.

**பண்டரிநாதர் வணிகன் கடனைத் தீர்த்தல்**

இவர்களுடைய வருந்துவதைப் பார்த்த பண்டரிநாதர் தாமும் மனவருத்த முற்ருர். ஆகலால் ஸ்ரீஹரி உத்தவர் வடிவம் எடுத்து வணிகன் வீட்டிக்குச் சென்று அவனை விளித்தார். "சீக்கிரம் வெளியே வா" என்ருர். வணிகன் கதவைத் திறந்து, "ஏன் ஐயா இந்த ராத்திரியில் இங்கு வந்தீர்?" என்று கத்திஞன். உத்தவர் "அந்த நோட்டை உடனே கொண்டு வா, இதோ பணத்தையெல்லாம் எண்ணிக் கொள். வட்டியும் சேர்த்துத் தான் இருக்கிறது" என்ருர். வணிகன் "இரவில் நான் எப்படிக் கணக்குப் பார்ப்பது? கணக்குப் புஸ்தகமும் நோட்டும் கடையி லிருக்கிறது. விடியற்காலை வந்து நோட்டை வாங்கிக்கொண்டு போம்" என்ருன். அதற்கு வைகுண்டநாதர் என்ன சொன்ஞர்? "உனக்கு அவ்வளவு அவசரமில்லையாஞல் என்

ஏகநாதர்க்கு அப்படி ஆணையிட்டாய்? அவர் பட்டினி யிருப்பது எனக்குக் கஷ்டமா யிருக்கிறது. நானும் மூர்ச்சையாவேன்போ லிருக்கிறது'' என்றார். இந்தக் குற்றம் தன்மேல் ஏற்பட்டதைக் கேட்டதும் வணிகன் பச்சாத்தாபப்பட்டுக் கடைக்குப் போய்க் கணக்கைப் பார்த்தான். பணத்தை எண்ணினான், ஒரு பைசாக் குறையவில்லை. நாணயங்க ளெல்லாம் ஒரே மாதிரி யிருந்ததைக் கண்டு ஆச்சரியப்பட்டான. வணிகன் நோட்டைத் திருப்பிக் கொடுத்தான். ஹரி தம் கையால் வாங்கி அதைக் கிழித்தார்; கிழிந்த துண்டுகளைக் கொண்டு வந்து உத்தவர் கணக்குப் புஸ்தகத்தில் வைத்து விட்டார். இப்பொழுது வணிகனுக்கு மனவருத்தம் அதிகமாயிற்று. உறக்கம் வரவில்லை. 'ஏகநாதர்க்கு உண்ண வேண்டாம் என்று ஆணையிட்டு வீட்டுக்கு வந்து நான் மாத்திரம் சாப்பிட்டேனே. நசுவரமான பொருளில் வைத்த ஆசையால் ஏவப்பட்டு ஒரு சாதுவை வதைத்தேனே'' என்று சொல்லிக் கொண்டான். இந்த மாதிரி மனம் கலங்கி யிருக்கும்பொழுது சூரியோதய மாயிற்று. அவசரமாக முகங்கழுவிக்கொண்டு அவன் ஏகநாதர் திருமாளிகைக்குப் போனான். அவருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, "ஐயா, நான் தங்களுக்கு அபசாரஞ் செய்தேனே'' என்று அலறினான். ஸ்ரீநாதர் 'கடனைக் கொடுக்கிற வரையில் உண்ணாம லிருக்க வேண்டுமென்பது வியாபார முறைதானே'' என்றார். இதனைக் கேட்ட வணிகன் ஆச்சரியவசத்தனாய் உத்தவரை நோக்கி, "நீர் பணத்தைக் கொடுத்து நோட்டை வாங்கிக்கொண்டு வந்தீரே. சுவாமிகளுக்கு அதைச் சொல்லவில்லையா? இன்னும் ஏன் அவரைப் பட்டினி

போட்டீர்?" என்றான். உத்தவரோ "எப்பொழுதும் அசத்தியம் பேசப்படாதன்றோ!" என்றார். வணிகன் உடனே தான் சொல்லிய துண்மையென்று சத்தியஞ் செய்தான். உத்தவர் உள்ளே சென்று மீண்டு ஏகநாதரிடம், "ரத்தான நோட்டு நம் கணக்குப் புஸ்தகத்தி லிருக்கிறது. இப்பொழுது சங்கதி விளங்குகிறது" என்றார். உத்தவர் வணிகனை நோக்கி, "உன் பக்தி யிருந்தவாறு தானென்ன! ஏகநாதரோடு லாவாதேவி வைத்துக் கொண்டதால் நீ ருக்மிணிநாதனைச் சந்தித்தாய். இந்தக் காரியத்தை ஒருவருக்கும் வெளியிடாதே" என்றார். வணிகன உத்தவர் காலில் விழுந்து வணங்கித் தன் வீட்டுக்கு விரைந்து சென்றான். ஸ்ரீநாதர் பகவற் பூசை செய்து பிராமணரோ டுண்டார். கிரிஜாபாயும், உத்தவரும் அவ்வாறே தம் பட்டினி விட்டு உண்டனர். பிராமண வேடத்தோ டிருந்த பாண்டுரங்கர் பக்கப பாட்டுத் தலைவரா யிருந்துகொண் டிருந்தார். பஜனைகள் ஆனந்தமா யிருந்தன. கேட்பவர்கள் பரவசராயினர். இவ்விதமாகப் புருஷோத்தமர் ஏகநாதர் புகழை வளர்த்தார். இந்தப் பிரகாரமாகப் பன்னிரண் டாண்டு கழிந்தன.

**பண்டரிபக்தன் கனவும் விட்டோபா புறப்பாடும்**

பண்டரி யெனனும் க்ஷேத்திரத்தில் வசித்த ஒரு வைஷ்ணவ பக்தன் தியானத்தி லிருப்பது வழக்கம். அவன் பாண்டுரங்கர் தனக்குப் பிரத்தியக்ஷ மாகவேண்டு மென்று விரும்பினான். அநேக நாள்கள் இவ்வாறு கழிந்தன. வாயாரப் பகவந் நாமங்களை யுச்சரித்தான். அவனுக்கு வேறு

ஆசை கிடையாது. திடீரென்று ஓரிரவு ருக்மிணி நாதர் அவனுக்குக் கனவில் தோன்றி, "நீ என்னைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்க விரும்புகிறாய், நானோ இப்பொழுது பிரதிஷ்டானத்திற் பணியா யிருக்கிறேன். அங்கு அபேத பக்தரான ஏகநாதர் என் புகழ் சாற்றும் கீர்த்தனங்களிலேயே அமிழ்ந்திருக்கிறார். பாண்டுரங்கனாகிய நான் பிராமண வேடங்கொண்டு பக்கப் பாட்டுக்காரருக்குத் தலைமை வகிக்கிறேன். உலகம் என்னை விட்டோபா என்றழைக்கும். சீக்கிரம் அங்கே போய்ச் சேர். பிரதிஷ்டானத்தில் ஏகநாதர் வீட்டுக்குப் போவாயாகில் அங்கு என்னைக் காண்பாய்" என்றனர். இரவில் இந்தத் தரிசனங் கண்டதும் அவன் அடைந்த ஆச்சரியத்துக் களவில்லை. உடனே பிரதிஷ்டானத்துக்குப் பயணமாய் ஏகநாதர் வீடு வந்து சேர்ந்தான். பிராமண விட்டோபா எங்கே யென்று விசாரித்துக் கொண்டே அவரைத் தழுவுதற்கு விரைந்து சென்றான். அவன் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்த அந்த நிமிஷமே ருக்மிணிநாதர் தம் உருவத்தை மாற்றினார். சதுர்ப் புஜமும், ரத்ந கிரீடமும் உடைய சகுண வடிவத்தைத் தரித்தார். அவர் முக வொளியையும், ரூப சௌந்தரியத்தையும் யாரால் வர்ணிக்கலாகும்? காதுகளில் திவ்விய குண்டலங்கள் ஜ்வலித்தன. கழுத்தில் வைஜயந்தி யென்னும் கண்டாபரணமும், கௌஸ்துபமும் விளங்கின. பீதாம்பரம் தகதகவென்று பிரகாசித்தது. பக்கங்களில் வைக்கப்பட்ட இரண்டு கைகளும் மிக அழகா யிருந்தன. பாத மிரண்டும் சேர்த்து வைத்திருந்த இந்தத் திவ்விய ரூபம் அழகா யிருந்தது. இவை யெல்லாம் பிராமணன் நேரே கண்

டான். அவனோடு சில வைஷ்ணவ பக்தர்களும் வந்திருந்தனர். அவர்களும் அச் சமயத்தில் இந்த ரூப வெளிப்பாட்டைக் கண்டனர். இந்த மாதிரி பிரத்தியக்ஷமான பிறகு பகவான் மறைந்துவிட்டார். பண்டரியிலிருந்து வந்தவர்களெல்லாம் ஏகநாதரை வாழ்த்தினர். "வைஷ்ணவ பக்தரே, விஷ்ணு அவதாரமே, நீர் செய்ததே பாக்கியம், பாண்டுரங்கர் பிராமணவேடத்தோடு உமக்குப் பக்கப்பாட்டுப் பாடினாரே!" என்றனர். பிராமண விட்டோபா மறைந்தவுடனே ஏகநாதர் மனம் ஆச்சரியத்திலாழ்ந்தது. அவர் தம்முட் சொல்லிக் கொள்வார்: "லோகநாதர் என் பொருட்டு மன்னனைப் புற்றார்! தம் பெருமைக்கு இழிவு வர ஒரு நாளும் சகியாரோ, தம்முடைய அடிமைகளை ஆதரிப்பது அவரியல் பேயன்றோ. வேதங்கள் நான்கும் எல்லை காணா அறியாத பரமர் நம் பக்தர்களுக்குத் துணைவராய் வந்தாரே!" பன்னிரண்டாண்டு பாண்டுரங்கர் பக்கப் பாட்டுக்காராயிருந்தா ரென்பது எங்கும் பிரசித்தமாயிற்று.



## ஐந்தாம் அத்தியாயம்

**ஸ்ரீ பாகவத படனம்**

ஒரு நாள் சற்குரு பக்தராகிய உத்தவர் ஸ்ரீ நாதரிடத்துப் பணிவோடு, "ஸ்ரீ பாகவத புராணத்தைத் தங்கள் வாயால் வாசித்துக் கேட்க வேண்டுமென்று ஓர் ஆசை என் மனத்துத் தோன்றியுளது" என்று விண்ணப்பித்தார். இவர் ஆவலோடு செய்த விண்ணப்பத்திற் கிணங்கி ஏகநாதர் அப் புராணத்தை உரக்க வாசிக்கத் தொடங்கினர். பக்தகோடிகள் தங்கள் உலக

விருத்திகள் ஓய்ந்த பின் வந்து கேட்டனர். ஸ்திரீ சூத்திராருள்ளிட்ட நகர வாசிகளும் ஆதரத்தோடு வந்து கேட்டனர். ஏகநாதர் சுலோகங்களை மொழி பெயர்த்து அர்த்தத்தைத் தெளிவாக விளக்கினர்.

**பண்டரிநாதர் பாகவதங்கேட்கக் கேசவராதல்**

திடீரென்று ஒரு நாள் பண்டரிநாதர் பிராமண வேடத்தோடு தோன்றினார். ஏகநாதர் அவரைப் பார்த்து நமஸ்காரஞ் செய்தார். "எங்கிருந்து வந்தீர்? ஐயா, உம் பெயர் என்ன?" என்று கேட்டார். லோகநாதர் "என் பெயர் கேசவன். நான் உலக விஷயங்களில் வைராக்கிய முடையவனென்றும், தனியே யிருக்கிறேனென்றும் அறிந்து கொள்ளும். உம்முடைய வாயால் பாகவதம் வாசிப்பதைக் கேட்க நான் இங்கு வந்திருக்கிறேன். நீர் உறுதி சொல்வீராயின் நான் இங்கே உம்மோடேயே எப்பொழுதும் இருப்பேன். உம்மைப்பற்றி உலகம் பலவாறாகப் புகழ்வதைக் கேட்டு நான் இங்கு வந்தேன்" என்றார். ஏகநாதரும் "என்னுடைய கருத்தும் அப்படியே யிருக்கிறது. உம்முடைய சங்கம் எனக்கு எப்பொழுதும் இருக்கவேண்டும். வைகுண்டநாதர்க்கு அநேக ரூபங்க ளிருக்கின்றன என எனக்குத் தோன்றுகிறது. அவர் அநேக வேடங் கொள்கிறார். ஆனால் ஸ்ரீபதியாகிய அவர் இவ் வற்புதச் செயல்களை வெளியாகக் காட்டவில்லை. முன் அவர் பிராமண வேடங் கொண்டு எனக்குப் பக்கப் பாட்டுக்காரராய்ப் பன்னிரண்டாண்டு என்னோடிருந்தார். இப்பொழுதும் அவரே கேசவனென என் வீட்டிற்கு வந்திருக்கிறார். ஆனால் அவரை ஒரு

வரும் தெரிந்துகொள்ள முடியாது" என்று விடை கொடுத்தார். ருக்மிணி நாதர் தம் அபேத பக்தரோடு அநேக ஆண்டுகள் கழித்தார். பாகவதம் வாசித்துக் கேட்டலில் அத்தியந்த ஆனந்தத்தோடு ஏகநாதர்க்கு அடுத்து எதிரே உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருப்பார். ஏகநாதர் பதங்களையோ வாக்கியங்களையோ நன்றாக விளக்கத் தவறினாராயின் அவர் சந்தேகம் கேட்பார், ஏகநாதர் சந்தேகத்தைத் தீர்ப்பார். அந்தச் சந்தர்ப்பங்கள் அற்புதமாயிருந்தன. அவர் பிரிய நண்பராகிய உத்தவரும் அதிக மரியாதையோடு எதிரில் அடுத்து உட்கார்ந்திருப்பார். இவர்கள் இருவரே கேட்டவர்களுள் முக்கியர். மற்றவர்களெல்லாம் சுற்றி யுட்கார்ந்திருந்தனர். கேட்க வந்த அந்த க்ஷேத்திரவாசிகள் எல்லாரும் விஷ்ணு பக்தர்களாயினர். அவர்களிடம் க்ஷமை இரக்கம் சாந்தி உலகப் பற்றின்மை குடி கொண்டன. துவாபர யுகத்தில் ஸ்ரீ கிருஷ்ணவதாரத்துக்கு உத்தவர் எப்படிப் பிரியராயிருந்தாரோ அது போலவே இப்பொழுதும் ஏகநாதர் உத்தவர்க்குட் பரஸ்பர அன்பு இருந்தது. எப்பொழுதும் புதிதாக மேலும் மேலும் வளரும் அன்புதான பக்தியெனப்படல் வேண்டும். அதன் மூலமாய்க் கேட்பவர்கள் மனம் பரிசுத்தமாய் உலக மாயைகள் ஒழிந்தன. வழக்கமாய் ஒவ்வொரு நாளும் மூன்றும் யாமத்தில் பக்த ஜனங்கள் புராணங்கேட்க வந்தனர்.

**வைதிகப் பிராமணர் பொறாமை**

புராணங் கேட்கும் பக்தஜனங்களுக்கு ஆனந்தம் நிறைய, வைதிகப் பிராமண பண்டிதர்க்குப் பொறாமை மிகுந்தது. அவருள் அநேகர் குன்றின் பக்கம் வாளா விருந்து, "இவன் இந்த க்ஷேத்திரத்தில்

கடையை விரித்துக்கொண்டு ஜனங்களையெல்லாம் வசப் படுத்துகிறான். பிரசங்க சாமர்த்தியம் போதாதுதான், கீர்த்தனங்களால் மக்கள் மனங்கள் மருளுகின்றன. பதம்பதமாய் விளக்கி ஸம்ஸ்கிருத சுலோகத்துக்கு மஹாராஷ்டிர மொழி பெயர்ப்புச் சொல்லுகிறான். மற்றப் புராணங்களை யெல்லாம் விட்டுப் பாகவதத் தைத் தெரிந்து கொண்டான். அதன் அர்த்தத்தை முழுதும் விளக்குகிறான்; அதனால் எல்லாருக்கும் பிரமையா யிருக்கிறது. பாகவதப் பிரசங்கங் கேட் டதனால் ஜனங்களுக்கு உலக விஷயங்களில் ஆசையே போய்விட்டது. எல்லாரும் தத்துவஞான மடைவதிற் கருத்து வைத்திருக்கிறார்கள். ஸ்ரீபாஷ்யத்தைத் தள்ளிவிட்டு ஞானேசுவரியையே எப்பொழுதும் வாசித்துப் பக்தியின் உயர்வை நன்கு விளக்குகிறான். நான்கு வேதங்களுங் கற்ற வைதிகப் பிராமண பண்டிதர்களாகிய நம்மைக் கவனிப்பார் இல்லை. எல்லாரும் ஏகநாதன் வழி நிற்கிறார்கள். அவன் வித்தை எல்லாம் மஹாராஷ்டிர பாஷையில் மட்டுமே யாயினும் அவன் வீட்டில் பணமும் தானியமும் வந்து குவிகின்றன. பிராமணரை நூற்றுக் கணக்காய் உண்பிக்கிறான்; ஒரு குறைவுமில்லாம லிருக்கிறான். நாம் எல்லாம் பெரிய சாஸ்திரிகள். நாம் சும்மாவிருந் தாற் சோறு கிடைக்கிறதா? நம்மை ஆதரிப்போருக் குச் சந்தோஷம் உண்டாகும்படி நாம் எப்பொழுதும் நடக்கவேண்டி யிருக்கிறது'' என்று பேசினர். இந்த மாதிரி அந்த க்ஷேத்திரத்தில் வசித்த வைதிக பண்டி தர் ஏகநாதரைப் பழித்துப் பின்னும் சொல்வார்கள்: "கர்ம மார்க்கத்தை யொழித்துப் பக்தி மார்க்க மொன்றே மார்க்கமென்று பிரசங்கிக்கிறான். மற்ற

வர்கள் எக்கேடு கெட்டாலென்ன, பிராமணர்களாகிய நம்முடைய மனைவிகள் உலக வாழ்க்கை பொய் மாயை யென்று கற்றுக்கொண்டு ஏகநாதன் பாதத்தில் தங்கள் காலத்தைக் கழிக்கிறார்கள். ஏகநாதன் நம் போஷகர்களுக்குப் பாகவதத்திலுள்ள உண்மைகளை யெடுத்துப் பிரசங்கிக்கிறான். அவர்களுக்கு உலக விஷயங்களில் ஆசையற்றது. உலக இச்சைகள் பூர்த்தியாவதற்காகச் செய்யும் கிரியைகளைச் செய்பவர் ஒருவருமில்லை. நம் வரும்படி யெல்லாம் போய் விட்டது.'' இவ் வார்த்தைகள் சொல்லி அந்த க்ஷேத்திர வாசிகளாகிய பிராமணர் ஏகநாதரை வைதார்களே யல்லாமல் கோவிந்தனைத் தங்கள் மனத்தில் நினைத்தவர்களல்லர், ஆனந்தத்தை அநுபவித்தவரு மல்லர். ஏகநாதரோ பிராமண விசுவாசி. ஆதலால் மரியாதையோடு அவர்களை உபசரித்துக்கொண் டிருந்தார். சிலர் தம்மை மரியாதை செய்தபொழுதும் வேறு சிலர் தம்மை அவமதித்தபொழுதும் ஒன்றினால் சந்தோஷமாவது மற்றதனால் துக்கமாவது அவர் அடைந்தவ ரல்லர். அவர் மனநிலை யறிந்த பிராமணர்கள் அவரைப் பலவழியால் இம்சிக்க ஆரம்பித்தனர். அவரிடத்து எந்த வஸ்து இருந்தாலும், அது தங்களுக்கு வேண்டுமாயின் கூசாது கேட்டனர்; அவரும் மறாது கொடுத்தார். எதிர்பாராத அதிதிகள் ஊரில் வந்தார்களாயின் அவர்களை நோக்கி, "இங்கு ஏகநாதரென் றொருவ ரிருக்கிறார். தாராளமாய்க் கொடுப்பவர். ஆயிரம் அதிதிகள் வந்தாலும் அவர்களுக்குத் திருப்தியாய்ப் போசனங் கொடுப்பர். சித்திகள் அவருக்கு அநுகூலமா யிருக்கின்றன. ஆதலால் அங்கே விரைந்து செல்க'' என்றனர்.

**அற்புத அதிதி பூஜை**

இப்படியிருக்க ஒரு நாள் மழை சோனாமாரி யாய்க் கொட்ட ஆரம்பித்தது. ஏழு நாள் இரவும் பகலும் கல்மழை பெய்தது. வீடுகள் ஊறி எங்கும் ஒழுக ஆரம்பித்தன. பூமியிலெங்கும் உலர்ந்த இடம் காண முடியாதாயிற்று. அடுப்பிற்கு விறகு சேகரிக்கக் கூடாமையால் சமையலே நடக்கவில்லை. வீடுகளிற் பணமும் தானியமும் நிறைந்திருந்தாலும் அடுப்பிற்கு விறகின்றி எப்படிச் சமைக்கக் கூடும்? இப்படியொன்று இரவில் இரண்டாம் யாமத்தில் நகரத்திற்கு நான்கு பிராமணர் வந்தனர். அவர்களுக்குப் பசி யதிகம். வீடு வீடாய்த் திரிந்து யாசித்தனர். நகரத்துப் பிராமணர் "இங்கொரு வள்ள லிருக்கிறான். அவன் பெயர் ஏகநாதன்" என்று சொல்லித் தூரத்தி லிருந்து அவர் வீட்டைக் காட்டினர். பிரயாணிகள் அங்குச் சென்று ஏகநாதரை நோக்கி, "நாங்கள் நால்வரும் பசியால் சாகிறோம். உம் புகழைக் கேள்விப்பட்டு உம்மிடம் வந்தோம். ஆதலால் உம் வீட்டில் ஒரு வேளை உணவிட்டு எங்களுடைய பசியைத் தணியும்" என்றனர். அவர்கள் சொல்லியதைக் கேட்ட ஏகநாதர் மனமார அவர்களுக் கிணங்கி அவர்களுக்குச் சமையல் செய்யும்படி கிரிஜாபாய்க்குக் கட்டளை யிட்டனர். அவள் "கொஞ்சம் கூட விறகில்லையே" என்றாள். ஏகநாதர் "இந்த வீட்டுக்கு மரச்சுவ ரிருக்கிறதே" என்று, உத்தவனைக் கூப்பிட்டு, "வீட்டினொரு பக்கத்தைப் பிரித்து அவளுக்கு நிறையச் சுள்ளி கொடு" என்றார். உத்தவர் "அப்படிச் செய்ய வெகுநேரம் செல்லுமே" என்றார். ஏகநாதர் தம் கட்டிலி லிருந்து ஒரு கம்பியைப் பிடுங்கி வைக்கோற்கூரையைக் குலைத்தார். இந்த

விறகமாக அவசியமான விறகு அகப்பட்டுச் சமைய லாயிற்று. அவர் கண்ணீர் சுடவைத்துப் பிராமணர்க்கு ஸ்நானத்துக்கு வெந்நீர் கொடுத்தார். குளிர் அதி கமா யிருந்தபடியால் அவர்களுக்குக் கைக்கு சூடு பிடிக்கக் கும்மட்டியும் மூட்டி வைத்தார். கிரிஜா பாய் தன் கையாலேயே அவர்களுடைய இலைகளில் பரிமாறினாள். அவர்கள் பசி தீரநதனர்; இவரை வாழ்த்தி, "பாண்டுரங்கர் கிருபையால் உம்முடைய இருதயம் இந்த நல்லியல்லை என்றும் உடையதாகுக" என்றனர். ஏகநாதர் அவர்களுக்கு வாய் சுத்தம் பண் ணுவதற்காகத் தாம்பூலம் வழங்கி, "இப்பொழுது போய் இளைப்பாறுங்கள்" என்றார்.

**சிராத்த வுணவைப் பக்கிரிகட் கிடுதல்**

சின்னாள் கழிந்தபின் பிதிர் சிராத்த நாள் வந் தது. பிராமணர் அழைக்கப்பட்ட னர். வீட்டில் போஜனம் சித்த மாய்க்கொண்டிருந்தது. போது விடிந்தது. ஒன்றரை ஜாம மாயிருக்கும். பிராம ணரை ஸ்நானத்துக்குப் போகச் சொல்லிவிட்டார். போஜனம் தயாராய் விட்டது. பிராமணர் வர நேரம் பிடித்தது. ஏகநாதரும் பூஜாதிகளை முடித்துப் பிராமணர் வரும் வழியை நோக்கி யிருந்தனர். அச் சமயத்தில் திரிமூர்த்திகளும் இவருடைய நல மனத் தைச் சோதிக்க எண்ணினர். பிரமா விஷ்ணு ருத்தி ரர் மூவரும், மதம்மதிய பக்கிரிகள் போல வேடம் பூண்டு, கறுத்த தாடியும், சிவந்த கண்ணும், மணியும் பளிங்கு பொருந்திய காலணியுமாக வந்து தோன்றி னர். அவர்கள் கையில் ஜபமாலைகள் இருந்தன. உடல் களைத் தோலாற் போர்த்திருந்தனர். தலைகளில நீண்ட

சடைக ளிருந்தன. இந்தக் கோலத்தோடு அவர்கள் ஏகநாதரை நோக்கி, "நாங்கள் மூவரும் பசியா யிருக்கிறோம். எங்கள் வயிறு நிறையச் சாப்பாடு வேண்டும்" என்றனர். இவ்வளவுதான் அவர்கள் சொன்னது. ஸ்ரீநாதர் தடை யென்ன என்று சொல்லி வீட்டிற் சித்தமா யிருந்த ஆகாரத்தைக் கொண்டு வந்து அவர்களுக் கிட்டனர். அவர் இந்த மகம்மதியருக் கருகில் உட்காந்து அவர்கள் இலைகளை நிறைத்தனர். அவர்கள் சாப்பிட்டுக் கைகழுவிய பின் அவர்களுக்குத் தாம்பூலம் கொடுத்தார். இந்த விதமாக ஏகநாதர் பகவான் எல்லா ஜீவர்களிடத்து மிருக்கிறார் என்று நினைத்து அவர்களை ஆதரிப்பது உண்மை தானோ என்று முத்தேவரும் சோதித்தனர்; அப்புறம் தங்கள் திவ்ய ரூபத்தைக் கொண்டு அவர்கள் தங்களை ஏகநாதருக்குக் காட்டினர். ஏகநாதர் அவர்கள் சகுண ரூபத்தைப் பார்த்து, "நீங்கள் என்னைத் தன்னியனாக்கினீர்கள்" என்றார். அவர்கள் மீண்டும் பக்கிரி வேடம் பூண்டு போகப் புறப்பட்டனர். அப்பொழுது பூசுரர் தங்கள் ஸ்நானங்களை முடித்து ஏகநாதர் மாளிகைக்குத் திரும்பினர். பக்கிரிகள் அவர்களைப் பார்த்ததும் தங்கள் வயிறு நிறைந்ததை அவர்கள் கேட்கும்படி ஏப்பமிட்டுக் காட்டி, தம் பாஷையில், "நீர் எங்கள் பசியைத் தணித்தீர். அல்லா உம்மை ஆசீர்வதிப்பாராக" என்று ஏகநாதரை ஆசீர்வதித்து வெளியே போயினர்.

பிராமணர் "இந்த ஜாதிசங்கரம் வெகுதூரம் வளர்ந்து விட்டதே" என்று தம்முள் முணுமுணுக்க ஆரம்பித்தனர். ஏகநாதரை நோக்கி, "இது உம்

முடைய பிதிரர்களுக்குச் சிராத்த நாள். எங்களை யுண்பிக்குமுன் நீர் இந்தத் துலுக்கருக்குச் சிராத்த உணவை யிட்டிருக்கிறீர்'' என்று சொல்லினர். ஒரு பிராமணன் பரிகாசமாக, ''அவருடைய பிதிரர்களுடைய புண்ணியங்கள் அதிகமா யிருந்திருக்க வேண்டும், அதனால்தான் இந்தப் பசித்த பக்கிரிகள் மத்தியானச் சாப்பாட்டுக்கு இங்கு வந்தனர். இப்பொழுது சிராத்தகருமங்க ளெல்லாம் முடிந்துவிட்டபடியால் நாம் இங்கிருக்க வேண்டிய அவசியமொன்று மில்லை'' யென்றனர். இப்படிச் சொல்லி எல்லாரும் போக முயன்றனர். ஏகநாதர் அவர்கள் முன்வந்து நமஸ்கரித்து, ''பக்கிரிகள் பசியால் மிக வருந்தினர். ஆதலால்தான் அவர்களுக்கு உணவிட்டேன். அப்புறம் வேறு சுத்த ஜலம் கொண்டுவந்து இரண்டாமுறை சமையலாயிருக்கிறது. ஆதலால், ஸ்வாமிகளே, என் குற்றத்தைப் பொறுத்துச் சிராத்தாதிகளை நடப்பிக்கவேண்டும்'' என்றிரந்தனர். அந்தப் பிராமணர்கள் கேட்பதாயில்லை. ''நீ கடுஞ் சண்டாளன்'' என்று சொல்லிவிட்டு அவர்கள் அந்த க்ஷேத்திரத்தில் வசித்த தங்கள் ஆசாரியரிடம் சென்று ஏகநாதர் சிராத்தம் செய்யுமுன்னமே துலுக்கருக்கு விருந்திட்டாரென்று முறையிட்டனர். மதாசாரியர் வேறு சில பிராமண சிரேஷ்டரோடு அவசரமாக ஏகநாதர் வீட்டுக்கு வந்தனர். அதனைப் பார்த்த புரோகிதர், ''அவர்கள் உம்மை ஜாதிப் பிரஷ்டஞ் செய்ய வருகிறார்கள்'' என்றனர். பிராமணர் ''இன்று உம்முடைய பிதிரர்களுக்குச் சிராத்த நாள். அவர்கள் ஜாதியால் துலுக்கரா நீர் இன்று துலுக்கருக்கு விருந்திடுவதற்கு?'' என்று

**பிராமணர் ஏகநாதரை இம்சித்தல்**

கேட்டனர். இன்னும் எத்தனையோ நிந்தையுரைகள் சொல்லிப் பிராமணர் அவரைப் பரிகசித்தனர். ஸ்ரீநாதரோ பொறுமைக்கடல். கொஞ்சங்கூடக் கோபித்துக் கொள்ளவில்லை. அவர் இந்தப் பிராமணரை ஜநார்த்தனருடைய ரூபங்களாகப் பாவித்து அவர்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்து, "ஸ்வாமிகளே, என்மேல் கிருபைகூர்ந்து சிராத்தம் நடத்துங்கள்" என்றனர்.

**சிராத்தத்துக்குப் பிதிரர்களே வருதல்**

மதாசாரியர், "உம்முடைய புண்ணியங்கள் அதிகமாயிருப்பன போலத் தோன்றுகின்றன, பிதிரர்களே தங்கள் லோகங்களிலிருந்து வந்து உம் விருந்தை யுண்பார்கள்" என்றார். அதற்கு ஸ்ரீநாதர் சொல்லிய பதிலும் அதிசயமாயிருந்தது. "பிராமணன் வாக்கு வீண்போகாது; யாகங்களில் ஸ்வாமி ஸ்வாஹா ஸ்வதா என்று சொல்லிய வுடனே பகவான் இந்திரனோடு ஹவிஸ்ஸை ஏற்றுத் திருப்தியடைகிறார். பிராமணன் வாக்கு அற்புதமே. அவனுடைய ஒரு வாக்கால் பகவான் சிலா விக்கிரகத்தில் ஆவிர்ப்பவிக்கிறார். என் போன்ற மனிதப்பதருக்கு என்ன நேராது?" என்றனர். பிராமணர் "இந்த அதிகப் பிரசங்கம் போதும், உம்முடைய பிதிரர்கள் சிராத்தத்துக்கு வாரார்களாயின் உம்மை ஜாதிப்பிரஷ்டஞ் செய்வோம்" என்று சொல்லித் தரையில் மூன்று பீடங்களிட்டனர். பிறகு ஏகநாதர் "வாருங்கள்" என்று சொன்னதுதான் தாமதம், பிதிரர்கள் இறங்கி வந்தனர். அவர்களுடைய பரஞ்சோதி வடிவைப் பிராமணர் கண்டனர்: கழுத்திற் பூணூல் விளங்கிற்று; கையிற் பொன் மோதிரங்

களை அணிந்திருந்தனர். பிதிரர்கள் தங்கள் ஆசனங் களில் அமர்ந்து செவிடுபடும்படி வேதமந்திரங்கள் சொல்லினர். பிராமணர்க்கு அதிசயம் மனங்கொள்ள வில்லை. அவர்கள் இப்படிப் பிதிரர்கள் வந்தது ஏக நாதர் பொருட்டு என்று தெளிந்து வெள்கித் தலை களைத் தொங்கப்போட்டு முகங்களை முழங்கால்களுக் கிடையில் நுழைத்து உட்கார்ந்திருந்தனர். பின் அவர் கள் மதாசாரியரோடு எழுந்து மவுனமாகப் புறப்பட்டு சென்றனர். சிராத்தத்துக்கு வரிக்கப்பட்ட பிரா மணர் மட்டும் பின் தங்கினர். சிராத்தம் கிரமமாக முடிவுபெற்றதும் அவர்கள் பிதிரர்களோடு விருந் துண்டனர். பிதிரர்கள் தாம்பூலமும் தானமும் வாங் கிக்கொண்டு தம் லோகங்களுக் கேகினர். இவ்வற்புதத் தைக் கண்ட பிராமணர் ஆச்சரியப்பட்டு மதாசாரிய ரிடம் சென்று தாம் கண்ட துரைத்தனர். மதாசாரியர் மிகவும் வெட்கமுற்று, "நாம் நம்மையே அசடுகளாக்கிக் கொண்டோம். ஏகநாதரைப் பல வழியால் இம்சித் தோம். ஆனால் பகவான் அவர் பங்கி லிருக்கிறார். துர்வாசர் அம்பரீஷரை இம்சித்தபொழுது அவரைச் சக்கரம் வருத்தியது. இன்று அக் கதைதான் மீண் டும் நடந்தது. நாம் தான் அவமானப் பட்டோம்" என்றார். இப்படிப் பிராமணர் ஒரு பக்கம் பேசிக் கொண்டிருந்த பொழுது, ஏகநாதர் பிராமணர் தம்மை இம்சித்ததைப் பற்றிக் கவலையுறவுமில்லை, பிதிர்த் தேவதைகள் இறங்கி வந்து சிராத்த விருந்துண்டதை ஞாபகத்தில் வைக்கவு மில்லை. பகவானே மக்களு ளெல்லாம் வியாபித்திருக்கிறார் என்னும் நிச்சயம் அவர் மனத்தில் வேரூன்றி யிருந்தமையால் வைதாலும் வாழ்த்தினாலும் அவர் மனம் பேதிக்கவில்லை. மூன்

ளும் யாமம் வந்தபொழுது புராணகாலக்ஷேபம் நடந்தது. இரவில் ஹரிகீர்த்தனம் நடந்தது. பைடண புரியின் பக்த ஜனங்கள் ஆனந்தமுற் றிருந்தனர்.

**பிராமணர் கோபம்**

பகலும் இரவும் ஏகநாதர் வீட்டிற்கு ஜனங்கள் கூட்டங் கூட்டமாக வந்தனர். பிராமணருக்கு அவர் புகழில் அசூயையே யுண்டாயிற்று. "பைடணத்து ஜனங்கள் ஏகநாதன் கீர்த்தனங்களை மனமுவந்து கேட்கின்றனர். எல்லாரும் ஸ்ரீராமரைப் பூஜிக்கின்றவர்களாய் வைஷ்ணவராகி விட்டனர். காமியார்த்தம் கிரியைகள் செய்வதிற் பணம் செலவிடுவா ரில்லை. நம் பிழைப்பு ஒழிந்தது. ஜனங்களெல்லாம் பாகவதத்திற் சொல்லிய நெறியில் நிற்கிறார்கள்" என்று தம்முட் பேசிக்கொண்டனர். சந்திரன் நன்றாகப் பிரகாசிப்பதைப் பார்த்துத் திருடனுக்குக் கோபம் பொங்குவதுபோல, ஏகநாதர் புகழ் பரவப் பரவப் பிராமணர் கோபத்துக்கு நெய்வார்த்தாற்போலாயிற்று.

**பிராமணர் ஏகநாதர்க்குப் பொறாமையூட்ட முயலல்**

இரவும் பகலும் இவரிடத்தில் ஏதாவது குறை காண முடியாதா என்று பார்த்துக் கொண்டிருந்த பிராமணருக்கு ஒரு சமயம் வாய்த்தது. அங்குக் கிருஷ்ணதாஸரென்றொரு பிராமணரிருந்தார். அவர் பவானிக்கு விசேஷ பூஜை செய்பவர். அவருடைய கடுந் தவத்துக் கிரங்கித் தேவி அவருக்குப் பிரத்தியக்ஷமாயினள். அவர் அவளிடத்துக் கவிதா சாமர்த்தியம் வேண்டு மென்று வரங் கேட்டு வாங்கி இராமாயணம் யுத்தகாண்டத்தை மஹாராஷ்டிர பாஷையில் எழுத ஆரம்பித்தார். பிராமணர்

கள் வாசித்துக் களித்தனர். அவர்கள் "ஏகநாதரும் நிறையச் செய்யுள் எழுதுகிறார். ஆயினும் அவர் நடை சப்பை. ஸ்திரீ சூத்திரர்களுக்கு அது மகிழ்ச்சி தருகிறது" என்றனர். இன்னும் அவர்கள் ஏகநாதரிடம் வந்து உட்கார்ந்து கொண்டு அவர் முன்னிலையிலும் அப்படியே பேசினர். அவர்கள் ஏகநாதரை நோக்கி, "ஏகநாதரே, கேளும். அநேகர் கவி யெழுதுகிறார்கள். ஆனால் கிருஷ்ண தாஸர் நடை அத்தியற்புதமாயிருக்கிறது. தேவி அவருக்கு அனுக்கிரகித்திருக்கிறாள். இறந்த காலத்திலும் எதிர் காலத்திலும் அப்படிப்பட்ட கவி யிருக்க முடியாது!" என்று கிருஷ்ண தாஸரைப் புகழ்ந்தனர். இதனைக் கேட்ட ஏகநாதர் மிகவும் மனமகிழ்ந்து, "பகவானுடைய பெருமைக்கு அளவுண்டோ! அதன் எல்லையை யாவர் காணவல்லார்!" என்றனர். இந்த விதமாகப் பகையுணர்ச்சி அவரிடம் உண்டாக்க எண்ணிய பூசுரர் அவ்வகை யுணர்ச்சி அவர் மனத்துட் புகாமையை யறிந்து அதிசயித்துத் தம் வீடுகளுக்கு ஏகினர்.

**கிருஷ்ண தாஸரை மரணத்தினின்று காத்தல்**

இன்னும் ஒரு விஷயம் நடந்தது. கிருஷ்ண தாஸர் காவியமாகச் செய்து கொண்டிருந்த இராமாயணம் யுத்த காண்டம் பூர்த்தியாகவில்லை. திடீரென்று தேவி அவர் முன் தோன்றி, "நாளை மூன்றும் யாமத்தில் நீ சாவது நிச்சயம். ஜாக்கிரதையாயிரு" என்றாள். அவருக்கு ஸ்வாதீனம் வந்ததும் அவர் நிரம்ப துக்காக்கிராந்தராய், 'காவியம் இன்னும் முடியவில்லையே. என்ன செய்வேன்?' என்றார். காவியத்தை ஆனவரை எடுத்துக்

கொண்டு ஏகநாதர் வீட்டுக்குப் போனார். அவரைக் கண்டதும் ஏகநாதர் எழுந்து முன் வந்து வரவேற்றார். கிருஷ்ணதாஸர் மிகுந்த பணிவோடு ஏகநாதர் பாத கமலங்களைத் தொட்டார். ஏகநாதர் அவரை யுட்கார வைத்து, "இன்று நீர் என்னைக் காணவந்தது எனக்குப் பெரும் பாக்கியம்" என்றார். கிருஷ்ணதாஸர் தம் சரித்திரத்தை ஆதியோடந்தமாகச் சொல்லி, "நாளை இந்தக் கடம் விழும், இதிலிருந்து தப்புதலில்லை. இராமாயணம் யுத்தகாண்டத்தை மஹாராஷ்டிர பாஷையிற் காவியமாக எழுதிக்கொண் டிருக்கிறேன். இன்னும் கொஞ்சம் பாக்கியிருக்கிறது. நீர்தான் அதைப் பூர்த்தி செய்ய வேண்டும்" என்று வேண்டினவராய்க் காவியச் சுவடியை ஏகநாதர் முன்வைத்தார். ஏகநாதர் மனத்தில் அன்பு ததும்பிற்று; என்ன பதிற் சொல்லலாமென்று ஆலோசிக்கத் தொடங்கினார், காவியத்தில் ஒரு சர்க்கம் வாசித்துப் பார்த்தார். வெகு திருப்தியா யிருந்தது. "இந்தக் காவியத்தைப் பூர்த்தி பண்ணுவது என்னாலாகாத காரியம். நீர் காவியத்தை அழகாய் ஆரம்பித்திருக்கிறீர், நீரே பூர்த்தி பண்ணும்" என்றார். கிருஷ்ணதாஸர் "நாளைப் பயம் முன் நிற்கிறதே" என்றார். ஸ்ரீ நாதர் "காவியத்தை முடிக்க எத்தனை நாளாகும்? அத்தனை நாளும் யமன் உம்மைத் தொடக்கூட மாட்டான், ஸந்தரே" என்றார். இந்த உறுதியை ஏகநாதரிடம் கேட்டதும் கிருஷ்ணதாஸருக்கு நம்பிக்கை யுண்டாகி, "நான் இங்கேயே இரவும் பகலும் இருக்கிறேன், அப்படியானால் காவியம் முடிந்து விடும்" என்றார். ஏகநாதர் "அது வேண்டாம், நீர் வீட்டுக்கே போம். யமன் வருதற் குரிய குறி கொஞ்சம் தோன்றினாலும் நான் விரைந்து உம்மை

வந்து காண்பேன்" என்றார். இந்தப் பதிலைக் கேட்டார் கிருஷ்ணதாஸர். அவர் மனத்தில் ஆனந்தம் பொங்கியது; ஆதரத்தோடு நமஸ்காரஞ்செய்து வீட்டுக்குச் சென்றார். அங்குத் தம் ஜனங்களிடத்தில் ஏகநாதர் தைரியஞ்சொன்னதைப் பற்றி விஸ்தரித்துச் சொன்னார். இரவு கழிந்தது. சூரியன் உதயமாயிற்று. கிருஷ்ணதாஸர் ஸ்நான பூஜைகளை வழக்கம் போலச் செய்தார். மரணத்திற்கு ஏற்பட்ட நேரம் வர வர அவர் மனம் துக்கத்தில் ஆழ்ந்தது. அந்த நிமிஷத்தில் ஏகநாதர் தோன்றித் திரும்பவும் தைரியம் சொன்னார். தம் கையால் அவர் உடம்பைத் தடவி, "இன்று முதற் பதினொரு நாளுக்கு அவர் உடலைத் தொடாதே" என யமனுக்குக் கட்டளையிட்டார். அதனைக் கேட்டவர்கள் ஆச்சரியமெய்தினர். யமனும் ஏகநாதர் கட்டளையைச் சிர மேற்கொண்டு விரைந்து மீண்டனன். கிருஷ்ண தாஸர் பிரஞ்ஞைபெற்று இராமாயணத்தை மறுபடியும் பாட ஆரம்பித்தார். இவ்வற்புதத்தைக் கண்ட ஜனங்கள் ஆச்சரிய மடைந்தனர். இந்தச் சங்கதி பிரதிஷ்டானத்துப் பிரதான பிராமணர் செவிக்கும் எட்டியது. அவர்கள் அதைப் பற்றித் தம்முள் தர்க்கித்து, "சரி, பதினொராம் நாள் கிருஷ்ணதாஸர் சாவாரானால் இவ்வற்புதம் மெய்யாகும், அன்றேல் பொய்யே" என்று தீர்த்தனர்.

**கிருஷ்ணதாஸர் மரணம்**

இந்த விதமாக இத் துர்மனத்தர் ஏதாவது குறை அகப்படாதா என்று ஏங்கினர். இதன் மத்தியில் பத்தாம் நாள் காவியம் முடிந்தது. யுத்த காண்டம் முடிந்தவுடனே கிருஷ்ண தாஸர் பிராமணர்க்குத்

தானம் வழங்கி ஸரஸ்வதியைப் பூஜித்து ஏகநாதர் பெருமையைச் சிலாகித்தார். பதினோராம் நாள் கிருஷ்ணதாஸர் ஸ்நானஞ் செய்து வழக்கம் போலப் பூஜாதிகளை முடித்தார். கிருஷ்ணதாஸர்க்கு நிரியாண காலம் அடுத்ததை யறிந்த ஏகநாதர் அவரைக் காண வந்தார். கந்த புஷ்பாதிகளால் ஏகநாதரைக் கிருஷ்ண தாஸர் பூசித்து நமஸ்காரம் செய்தார். அப்புறம் சிறிதும் மனத்தில் துயரமின்றிப் பரலோகஞ் சேர்ந்தார். பிராமணர் "நாமெவ்வளவு கிருஷ்ணதாஸரைப் புகழ்ந்தும் கடைசியில் நாமே தோல்வியுற்றோம். இனி என்ன உபாயம் செய்யலாம்? நாம் அவனுக்குத் தீங்கு தேடத் தேட அவன் புகழ் அதிகமாய் ஜனங்களுட் பரவுகிறது" என்று தம்முட் பேசினர். வேறு சிலர், "பூர்வ ஜன்மத்தில் அவன் மஹானா யிருந்தான். அதனால் பகவான் துணை கொண்டு இப்பொழுது அவன் புகழைப் பெருக்கிக் கொண்டான். மூடநம்பிக்கை யுடையார் அவன் காலில் விழுகின்றனர். எங்களுக்கு அவன் செய்கைகள் பிடிக்கவில்லை" என்றனர். இவ்விதமாக மாயையால் அவர்கள் ஏகநாதரை அறியாமற் போயினர்.

**விக்கிரகம் வார்ப்பித்த வணிகன் கதை**

கருநாடக ராஜ்யத்தில் ஒரு பணக்கார வணிகனிருந்தான். அவன் பாண்டுரங்க வழிபாட்டில் ஈடுபட்டவன், பக்தன், தயாள சீலன். அவனுக்கு விட்டலருடைய விக்கிரக மொன்று லோஹத்தாற் செய்விக்கவேண்டு மென்று ஆசையுண்டாகி அவ்வாறே செய்வித்தான். அதனுடைய தோற்றமும் புன்னகை யரும்பும் முகமும் பார்த்தவர்

களுக்குப் பரமசாந்தியை யளித்தன. கால்களைக் கூட்டி வைத்துக்கொண்டு கைகளை இடுப்பிற் சேர்த்திய ருக்மிணிநாதர் என்ன செய்தாரென்று பார்ப்போம். வணிகன் எல்லாம் சித்தஞ் செய்தான். விக்கிரகத்துக்குப் பிராணப் பிரதிஷ்டை செய்து பிராமண சமாராதனை நடத்துவதற்கு நாட்பார்த்துக் கொண்டிருந்தான். இரவில் அயர்ந்து உறங்கும்பொழுது, லோகநாதர் அவன் கனவில் தோன்றி, "கோதாவரிக்கரையில் பிரதிஷ்டானமென்னும் க்ஷேத்திரத்தில் ஏகா ஜநார்த்தனனென்ெருருவ னிருக்கிருன். பக்தியும் ஞானமும் வைராக்கியமுமே அவனுக்கு அணிகளாயுள்ளன. நீ செய்வித்திருக்கிற இந்தச் சகுணமூர்த்தி யுருவைக் கொண்டு போய் அவனிடம் கொடு. என் சொற் கேளாமல் இங்குப் பிரதிஷ்டாதி கிரியைகள் செய்வாயாளுல் உனக்கு அநேக தீங்குகள் சம்பவிக்கும்" என்ருர். இச்சொப்பனத்தால் அவனுக்கு மனத்துயரம் அதிகமாயிற்று. அதன்மேல் அவனுக்கு உறக்கம் வரவில்லை. சூரியனும் சீக்கிரம் உதயமாயிற்று. அவன் தான் கண்ட தரிசனத்தைப் பண்டிதர்க்கும், பிராமணர்க்கும், சாதுஸந்தர்களுக்கும் உடனே தெரிவித்தான். அவர்களும் ஆலோசனை பண்ணிச் சந்தேகந் தெளியாதிருந்தனர். புராணிகரும் புரோகிதரும் கடைசியாக அவன் இன்னும் சிலநாள் பொறுத்துப் பார்த்துத் தரிசனம் மீண்டும் ஏற்படுமாயின் விக்கிரகத்தைப் பிரதிஷ்டானத்துக்குக் கொண்டுபோய்ச் சேர்க்க வேண்டுமென்று தம் அபிப்பிராயங் கொடுத்தனர். இந்தச் சர்வஞ்ஞர்களுடைய தீர்மானத்தின்படி செய்ய வணிகனும் சம்மதித்தான். மூன்றிரவு தொடர்ந்து அதே கனவு கண்டான்.

வணிகன் ஏகநாதரிடம் வருதல்

வணிகனும் பாண்டுரங்க விக்கிரகத்தோடு பிரதிஷ்டானம் வந்து சேர்ந்தான். சிறிது நேரம் ஸ்நானஞ்செய்வதற்காகக் கோதாவரிக்கரையில் தங்கினன். விலையுயர்ந்த ஆடைகளும் ஆபரணங்களும் அணிந்திருந்தான். கூட வந்த ஆட்களும் குதிரைகளும் அதிகம். அந்த க்ஷேத்திரத்து முக்கிய பிராமணர் அவனைப் பார்த்ததும் மிகவும் சந்தோஷித்தனர். 'இவன் நம்மை ஆதரிப்பது நிச்சய' மென்று தங்கள் புஸ்தகங்களோடு அவனை நெருங்கி, "உம்முடைய புரோகிதர் யார்?" என்று கேட்டனர். வணிகனே "இந்த நகரத்தில் ஏகா ஜநார்த்தன ரென்றொரு வைஷ்ணவபக்த ரிருக்கிறார். பகவான் இதை எனக்குக் கனவிற் சொல்லினர். அவரைப் பார்த்தற்காகவே நான் வந்திருக்கிறேன்" என்றான். அதைக் கேட்டதும் அவர்கள் மனத்திற் கலக்கம் மிகுந்தது. முணுமுணுத்துக் கொண்டே, "ஏகநாதன் பிரபஞ்ச முழுமையுமே மயக்கியிருக்கிறான்" என்றும், இன்னும் எரிச்சலோடு, "ஏகநாதன் இந்த ஊர் ஜனங்களை மயக்கியிருக்கிறன். வெளியூரி லிருப்பவர்களுக்குக் கனவு வரச் செய்கிறான்" என்றும் பேசிக்கொண்டனர். ஆயினும் திரவிய தானம் வாங்கும் நோக்கத்தோடு தங்கள் பேச்சை மாற்றி வணிகனை நோக்கி, "உனக்கு ஏகநாதரைக் காண உண்மையாக அவாவிருக்குமாயின், நீ எங்களை நிச்சயமாக ஆதரிக்க வேண்டுபவனே" என்று சொல்லி, அந்த ஆசையோடு ஸ்நானக் கிரியைக்குரிய மந்திரஞ்சொல்ல ஆரம்பித்தனர். வணிகச் செல்வன் அவர்கள் கூட்டமாகத் தன்னைச் சூழ்ந்து கொண்டு தொந்தரை செய்வதைப் பார்த்து அவா

களுக்குக் கொஞ்சம் திரவியத்தைக் கொடுத்துவிட்டு நகரத்துட் புகுந்தான். ஏகநாதர் வீடு எங்குளதென்று ஜனங்களைக் கேட்டுத் தெரிந்து அவர் வீடுபோய்ச் சேர்ந்தான். இங்கே ஏகநாதர் தம்முடைய பாயில் உட்கார்ந்திருந்தார். உத்தவர் எதிரே இருந்தார். ஆதரத்தோடும் அன்போடும் பணிவோடும் வணிகன் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தான். ஏகநாதர் எழுந்து அவனை வரவேற்று, "எங்கிருந்து வருகிறீர்? என்ன காரணமாக வந்தது?" என்று கேட்டார். வணிகன் ஸ்வாமியை நோக்கி, "அடியேன் ஸ்ரீவிட்டலருடைய விக்கிரகமொன்று செய்வித்திருக்கிறேன். அதற்குப் பிராணப்பிரதிஷ்டை செய்யச் சித்தமாயிருந்த காலை இரவில் ஒரு கனக் கண்டேன். 'பிரதிஷ்டானத்தில் ஏகா ஜநார்த்தனனென்றொருவ னிருக்கிறான். போய் அவனிடம் இந்த விக்கிரகத்தைக்கொடு' என்று உத்தரவாயிற்று. இதே கனவு மூன்றிரவு கண்டேன். ஆதலால் அந்தக் கருத்தோடு அடியேன் ஸ்வாமிகளைக் காண வந்திருக்கிறேன். பூர்வ ஜன்மத்தில் அளவில்லாத புண்ணியங்கள் புரிந்திருப்பேன். இப்பொழுது அவை பலந் தருகின்றன" என்று சொல்லிப் பார்க்கப் பார்க்க மனத்திற்கு அமைதியைத் தரும் புன்சிரிப்பும் சாந்தமுமுடைய முகத்தோடுகூடிய பாண்டுரங்க விக்கிரகத்தை எடுத்துக் காட்டினான். ஏகநாதர் அதனை வாங்கித் தம் இருதயத்தோ டணைத்து, "விசுவஸியந்தா, இஃது உன் அற்புதச்செயல்" என்றார். விக்கிரகத்தின் சுந்தர வதனத்தை உத்தவரும் பார்த்துச் சாந்தியடைந்தார்.

ஏகநாதர் பிராணப் பிரதிஷ்டைக்கு வேண்டியனவெல்லாம் சித்த மாகும்படி சொல்லினார். உடனே

ஜோதிடர்கள் வந்தனர், சுபதினத்தைக் குறித்தனர்.

**விக்கிரகப் பிரதிஷ்டை**

உத்தவர் ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தார்; பட்டணமெங்கும் செய்தி தெரியும்படி செய்தார். நகரத்து ஜனங்கள் "ஏகநாதர் பக்திக்கு மகிழ்ந்து விட்டலர் விக்கிரகம் கருநாடகதேசத்தி லிருந்து இங்கு வந்த தன்றோ!" என்று அதிசயித்தனர். ஏகநாதர் ஒவ்வொரு நாளும் மூன்றும் யாமத்துப் புராணம் வாசித்தலும், இராத்திரிகளில் கீர்த்தனங்கள் செய்தலும் விடாமல் நடத்திக்கொண்டிருந்தார். வணிகன் கேட்டு மன அமைதி யடைந்தான். 'ஏகநாதர் சொல்வன்மையால் எல்லாருக்கும் உள்ளக் கிளர்ச்சி உண்டாகின்றது. அவர் உலகம் உய்ய அவதரித்த பாண்டுரங்கரே, நிச்சயம்' என்று தன்னுட் சொல்லிக்கொண்டான். பிரதிஷ்டைக்கு எல்லாம் சித்த மாயின. பொழுது விடிந்தாற் சுப தினம். ஆதலால் இராத்திரி கடை யாமத்திற் சமையல் ஆரம்பித்தது. சுமங்கலிகளான பாக சாமர்த்திய முடைய ஸ்திரீகள் தங்கள் கைகளாலேயே விருந்துக்குச் சமைத்தனர். வெள்ளி யுதித்தவுடனே விக்கிரகாராதனை ஆரம்பித்தது. வைதிகர்கள் வந்து கிரியைகளை ஒழுங்காக நடத்தினர். விக்கிரகத்தைப் பஞ்சாமிர்தத்தால் முழுக்காட்டி திவ்யப் பிராணன் அதனுள் வரச்செய்வதற்கான மந்திரங்கள் ஓதினர். அப்புறம் அதற்குக் கிரமப்படி அபிஷேகித்துப் பீதாம்பரம் உடுத்தினர். முத்து, வைரம், மணியாதிகளாலும், புஷ்பம், துளசி யிவைமுதலாய மாலைகளாலும் அதனை அலங்கரித்துப் பூஜித்தனர். தூப தீபங்கள் காட்டினர். கோயில் வாயிலில் வாத்தியங்கள் முழங்கின. வைணவர்கள் பகவானுடைய நாம குணங்களை உரக்கச் சொல்லி

அவன் புகழ் பாடினர்; நெய்யிற் சமைத்த சித்திரான்னங்களை அன்பாக நிவேதித்தனர்; வேத மந்திரங்கள் ஓதிப் புஷ்பங்கள் எடுத்திட்டனர். அப்புறம் ஏகநாதர் தம் உள்ளங்கையிற் கொஞ்சம் வெண்ணெய் மொத்தையை எடுத்து விக்கிரகத்தின் வாயண்டை வைத்து, "விட்டல்! இதைச் சாப்பிடும். கிருஷ்ணனாயவதரித்த காலே வெண்ணெய் திருடி ஆவலாக உண்டீரே. நீர் மீண்டும் அவ்வாறு செய்வதைக் காண எங்கள் கண்கள் மிகவும் ஆசைப்படுகின்றன. அவ்வற்புதம் நீர் செய்து காட்டுவீராயின், இவ்விடத்தில் உம் பெருமை மிக்கோங்கும்" என்றார். ஏகநாதருடைய வார்த்தைகளைக் கேட்ட விக்கிரகம் புன்னகைசெய்து நாக்கை நீட்டி ஏகநாதர் கையிலிருந்த வெண்ணெயை நக்கிவிட்டது. இவ் வற்புதத்தைக் கண்ட வைணவ பக்தர் ஜய ஜய முழக்கஞ் செய்தனர். பின் அவர்கள் விக்கிரகத்தை வலம் வந்து அதன் முன் அன்போடு சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தனர். இதற்குள் நண்பகலாயிற்று பிராமணர் பந்தியாகப் போஜனத்திற்கு உட்கார்ந்தனர் ஏகநாதர் ஆதரத்தோடு அவர்களை யுபசரித்தார். பந்தி வஞ்சனமில்லாமல் அவர்கள் எல்லாருடைய இலைகளிலும் பலவகை யுணவுகளைப் பரிமாறினார். இவ்விதமாக நகரத்துப் பிராமணர் நன்கு யுண்டு தாம்பூல தானங்களைப் பெற்றுத் திருப்தராயினர். இவற்றையெல்லாம் பார்த்துக்கொண் டிருந்த வணிகன் வெகு திருப்தனாய் 'ஸ்ரீ ஏகநாதர் என் தேசத்துக்கு வரும்படி ஒருபாயஞ் செய்ய வேண்டு' மென்று எண்ணினன்.

ஆதலால் அவன் ஏகநாதரை வணங்கி, "நான் இப்பொழுது என் தேசத்துக்கு மீண்டதும் ருக்மிணி

விக்கிரகமொன்று அழகானதாக வார்ப்பிக்கப் போகி றேன். தம்முடைய பரிவாரங்களோடு தாம் அங்கெழுந்தருள வேண்டும். எழுந்தருளிப் பாண்டு ரங்கருக்கும், ருக்மிணி தேவிக்கும் விவாக மகோற்சவத்தை நடத்தி

**வணிகனூரில் ஏகநாதர் ருக்மிணி விவாகம் நடப்பித்தல்**

யருளவேண்டும்'' என்றான். ஏகநாதர்க்குச் சந்தோஷ மாயிற்று; உத்தவரைக் கலந்துகொண்டு, "அப்படியே யாகுக'' என்றார். வணிகனும் விலை யுயர்ந்த தானங்கள் கொடுத்து உத்தரவு பெற்று ஊர்க்குப் புறப் பட்டான். ஊர் போய்ச் சேர்ந்ததும் ருக்மிணி விக் கிரக மொன்று வார்ப்பித்து விவாகத்துக்கு எல் லாம் சித்தஞ் செய்து தினங் குறிப்பிட்டான். விவாக பத்திரிகை எழுதிக் குங்குமந் தடவிப் பைடணத்தி லிருக்கும் ஏகநாதருக் கனுப்பினான். அதில், "மண மகளையும், மணமகனுடைய தாயையும் விவாக ஊர் வலமாகக் கொண்டு சீக்கிரம் வந்து சேரும்படியாகப் பிரார்த்திக்கிறேன்'' என்றெழுதி யிருந்தது. ஏக நாதருக்கு முன்னமே இப்படிக் கடிதம் வரப்போகிற தென்று தெரிந்திருந்ததனால் அவர் பிரயாணத்திற் குத் தயாராயிருந்தார். குருடரையும், முடவரையும், ஏழைகளையும தம்மோடு விவாகத்துக்கு வரும்படி வேண்டினார். அவர்களுக்குப் புதிய விவாக ஆடை கள் கொடுத்தார். மணமகன் ஊர்வலம் கோலாகல மாக வாத்திய முழக்கத்தோடு புறப்பட்டது. விட்டலா விக்கிரகமாகிய மணமகன் பல்லக்கிற் கொண்டுபோகப் பட்டார். மணமகன் தாயாகக் கிரிஜாபாய் ஒரு வண் டியிற் சவாரி செய்தாள். மற்றவர்கள் குதிரைகள் மேலூர்ந்தார்கள். எல்லாரும் ஏகநாதரை வாழ்த்தி

னர். வழியில் ஜனங்கள் ஊர்வலத்தின் ஆடம்பரத்தைக் கண்டு அதிசயித்தனர். விவாக ஊர்வலம் வணிகனுடைய ஊர்ப்புறத்துப் போய்ச் சேர்ந்ததும் அங்கு அவர்கள் தங்கினர். அவன் அவர்கள் வரவு கேட்டதும் விரைந்து வந்து அவர்களை வரவேற்றான். அந் நகரத்து ஜனங்கள் எல்லாம் வரவேற்பிற் சேர விரைந்து ஏகநாதர் பாதத்தைச் சேவித்தனர். உத்தவருக்கும் மற்ற விருந்தின ரெல்லாருக்குமே வந்தனோபசாரம் நடந்தது. விக்கிரக மணமகனுக்கு ஆடையாபரணங் களணிவித்து எல்லாரு மகிழ்ந்தனர். ஆங்கிருந்து கோலாகலமாக ஊர்வலம் புறப்பட்டு விருந்தினர்க்குத் தயார் செய்திருந்த விடுதிகளைச் சேர்ந்தது. குல தேவதைகளின் வழிபாடும், பிராமணர் சமாராதனையு மான பின் விட்டலர் ருக்மிணி விவாகம் நடந்தது. பக்தர்கள் "ஜய ஜய" வொலி செய்தனர். நாள் பெரிய விழா நாளா யிருந்தது. அப்புறம் அவர்கள் மணமகனுடைய தாயைக் கவுரவித்தனர். அவற்றை யெல்லாம் கிரிஜா பாய் அங்கீகரித்தனள். வணிகன் ஏகநாதரை வணங்கி, "இப்பொழுது உம் திருவாயால் எங்கள் மனமார ஒரு கீர்த்தனங் கேட்கப் பிரியப் படுகிறோம்" என்றான். ஸ்ரீ ஏகநாதரும் சரி யென்றார். அதற்கு வேண்டிய கருவிக ளெல்லாம் உடன் கொண்டுவந் திருந்தார். தாளம் வீணை மிருதங்கங்களின் ஒலி மிகுந்தது. ஜனங்கள் களித்தனர். கீர்த்தனம் பக்தியை வளர்த்தது. கேட்பவர் இருதயம் உருகிற்று. அவர் பகவான் சகுண ரூபத்தோடு புரிந்த அற்புதங்களைப் பற்றிப் பாடிப் புராண கதைகளும் சொல்லி, இடையிடையே அவர்கள் மனப் பூர்வமாகப் பகவான் நாமங்களையும் குணங்களையும் எடுத்தோதும்படி செய்தார். ஏக

நாதா ஒரு மாசம அங்கிருந்து எல்லாரையும் விஷ்ணு வழிபாட்டில் ஈடுபடச் செய்தார். கடைசியாகத் தம் தேசத்துக்குச் செல்ல வணிகனிடம் விடை வேண்டினர். வணிகனும் பரம திருப்தனாய் மணமகனுக்கு அநேக வெகுமதிகள் கொடுத்தான். விவாக விருந்தினர்க்கு ஆடை வழங்குதலிற் பெருந் தொகை செலவிட்டான். இவ்விதமாக ஏகநாதர் தாம் வந்த காரியத்தை முடித்துப் பிரதிஷ்டானத்துக்கு மீண்டார். அந்த க்ஷேத்திரத்து ஜனங்கள் அவரைப் பார்த்ததும் ஓடி அவர் பாதத்தில் வீழ்ந்தனர். இரவு ருக்மிணி நாதர்க்கு ஊர்வலம் நடந்தது.



## ஆறும் அத்தியாயம்

**பண்டரி யாத்திரை**

இது நிகழ்ந்தபின் ஏகநாதர் உத்தவரைத் தனியே அழைத்து, "நாம் பாண்டுரங்கர்க்கு ஒரு பணியும் செய்திலமாயினும் அவர் விக்கிரக வடிவாய் நம் வீட்டுக்கு எழுந்தருளினர். என் ஆயுள் நாளெல்லாம் நான் பண்டரியைப் போய்த் தரிசித்தவனல்லன். அவருக்கு ஒரு பணியும் செய்யா திருக்கச் சேஷசாயி நம் வீட்டுக்கு வந்தார். தாமரை தன்னைப் பற்றி நினையா திருக்கையிலேயே சூரியன் வானிற் றோன்றியது போலும், குழந்தை முற்றத்தில் விளையாடிக்கொண்டிருந்தாலும் அதனை மறவாது பேணுந் தாய் போலும் நான் பண்டரிக்குப் போகாதிருந்தும் ருக்மிணிநாதன் என்னிடத்து அன்புடையவனாய்க் கருநாடக தேசத்தி லிருந்து திடரென்று என் வீட்

டுக்கு வந்தான். ஆதலாற் பண்டரியை என் கண்க ளால் தரிசிக்கவேண்டுமென்று ஓரவா என் மனத்துள் தோன்றியுளது'' என்றார். ஏகநாதர் இவ்வாறு சொல்ல லும் உத்தவர் தலைவணங்கினார். இதுவே ஏகநாதர் முதல் யாத்திரை யாதலின் நல்லநாள் தெரியப்பட் டது. திண்டியும், பொன்னூல் வெள்ளி நூலாற் செய்த கொடிகளும், தாளம், வீணை மிருதங்கங்களும் கொண்டு ஏகநாதரும் மற்றை யாத்திரிகரும் புறப் பட்டனர். அவருடைய சகவாச மகிமையால் அந்த க்ஷேத்திர வாசிகள் இருதயத்திற் களிப்போடு பக வானது குணநாமங்களை இரைந்து ஓதிக்கொண்டு அவ ரோடு செல்லத் தயாராயினர். இந்த வைணவர்கள் பாடிக்கொண்டும், ஆடிக்கொண்டும், "ஜய ஜய" சப்தத்தோடு கரகோஷஞ் செய்துகொண்டும் யாத் திரை புறப்பட்டனர். அவர்கள் செய்த ஆரவாரம் ஆகாசமெங்கும் நிரம்பியது. பகவான் புகழைப் பாடிக் கொண்டு ஏகநாதர் கால்நடையாகச் சென்றார். நகரத்தி லிருந்து திரளான ஜனங்கள் அவருடன் கொஞ்சதூரம் சென்று வழிவிட்டனர். ஏகநாதர் வீட்டுக் காரியங் களைக் கவனிக்கும் முறையைப்பற்றி உத்தவருக்குக் கற்பித்தார். உத்தவரும் அவ்வாறே செய்வதாய் ஒப் புக்கொண்டு ஏகநாதர் காலில் விழுந்து நமஸ்கரித்தார். ஏகநாதர் மறைந்தபின் உத்தவர் வீட்டுக்குத் திரும்பி னார். மற்றைய நகரவாசிகளும் திரும்பினர். உத்தவர் ஏக நாதர் வீட்டுக் காரியங்களை வழக்கம் போலவே செய்து வந்தார். மத்தியானம் மூன்றும் யாமம் புராண கால க்ஷேபமும், இரவிற் கீர்த்தனமும் நடந்தன. ஏகநாதர் வழக்கமாகச் செய்யும் விஷ்ணு பூஜையையும் ஏழைகளை யுண்பிப்பதையும் உத்தவர் விடாது செய்தார்.

இனி, ஏகநாதரும் அவரோடு சென்ற பலரும் பண்டரிக்கு வழிக்கொண்டனர். அவர்கள் ஆனந்தமாய்ப் போய்க்கொண்டிருந்தனர். வழியில் தங்குமிடம் ஒவ்வொன்றிலும் கீர்த்தனங்கள் நடந்தன. ஏகநாதர் கூட இருத்தலால் ஒருவர்க்காவது களைப்புத் தோன்றவில்லை; ஆனந்தக் களிப்பால் அவர்கள் ஹரிநாமங்களை யோதினர். முன்னும் பின்னும் சென்ற பலஹீனர்களுக்கும் ஏழைகளுக்கும் உதவிக்குக் குறைவில்லை. அடிக்கடி ருக்மிணி நாதர் புகழை யுரைக்கும் பாடல்கள் பேரன்போடு கிளம்பின. ஸ்ரீ ஏகநாதர் உலகமுய்ய அவதரித்த பாண்டுரங்கரே யாயினும், மனிதர் பொருட்டு அவர் எப்பொழுதும் மனிதரைப் போலவே நடந்தார். ஏனென்றால் ஸந்தர் நடப்பதைப் பார்த்தே பக்த ஜனங்கள் நடக்கின்றனர். அப்படி நடந்து இவர்கள் குற்றமொழிந்து உலக பந்தத்தினின்று நீங்குகின்றனர். ஏகநாதர் வைணவப் பெரியாரைக் கண்டவிடத்தெல்லாம் நமஸ்கரித்தார். அவர் பணிவுமிகுதியுடையவர்; அவரிடத்திற் கர்வ மென்பதே கிடையாது. இந்த சாது ஜனங்களாகிய வைணவர்கள் பக்தி யதிசயத்தோடு பகவான் புகழைப் பாடிக்கொண்டே வழி நடந்தனர். பண்டரிபுரத்தை யணுகிக் கோயிற் கோபுரத்தைக் கண்டதும் அவர்கள் இருதயங்கள் களித்தன, மெய்ம் மறந்தனர். அந்த இரவிலேயே பண்டரிநாதர் பண்டா கனவிற் றோன்றி, “நானே அபேத பக்தனாகிய ஏகா ஜநார்த்தனன் யாத்திரையாக இங்கு வருகிறான். ஆதலால் பேரி கொடிகளோடு போய் அவனை எதிர்கொண்டு அழைத்து வாருங்கள். சதுர்த்தசியன்று ஏகநாதன் கோயில் தலை

வாயிலிற் கீர்த்தனஞ் செய்யட்டும்'' என்றனர். அந்த க்ஷேத்திர மெங்கும் இத் தரிசனச் சங்கதி பரவியது. ஜனங்க ளெல்லாம் எதிர் கொள்ளுதற்குச் சந்திர பாகைக்கு விரைந்தனர். ஸந்தரும், மஹந்தரும், வைஷ்ணவோத்தமரும் பகவான் புகழை ஆனந்தமாகப் பாடினர். ஆகாசமெங்கும் பகவந் நாமவொலியும், ஜய ஜய முழக்கமுமே மிகுந்தன.

**பண்டரீநாதரைத் தரிசித்தல்**

ஸ்ரீ நாதர் பண்டரிபுரத்தைப் பார்த்தவுடனே பூமியில் விழுந்து நமஸ்கரித்தார். அவர் கண்களினின்றும் ஆனந்தக் கண்ணீர் பெருகிற்று. "பூலோக வைகுண்டமும், ஸந்தர்க்குத் தாயகமு மாகிய பண்டரிபுரத்தைத் தரிசித்த இந் நாளே நன்னாள்'' என்று சொல்லிக்கொண்டு அவர்கள் எல்லாரும் ஒருவரை யொருவர் தழுவினர். நகரத்தின் பெருமையை எடுத்துரைத்துப் பகவானுக்குத் தூபங்காட்டினர். யாத்திரிகரனைவரும் பீமா நதியைக் கடந்தனர். கடந்தவுடனே ஸந்தரும், மஹந்தரும் அணுகி அவர்களை வரவேற்றனர்; "நாங்கள் ஏகநாதரைச் சந்தித்த இந் நாளே நன்னாள்'' என்று ஆரவாரித்தனர். சந்திரபாகையில் ஸ்நானஞ் செய்து ஏகநாதர் பூஜாதிகளை முடித்தார். அப்புறம் அவர் பக்த ரத்நமாகிய புண்டரீக முனியின் சமாதியைத் தரிசித்து அன்போடு அவரைப் பூஜித்தார். கோயிற் பண்டா அவர் இனிக் கோயிற் றலைவாயிலுக்குப்போய் ருக்மிணிநாதரைப் பார்த்துவிட்டுத் தம் தங்கு மிடத்துக்குப் போகலா மென்று தெரிவித்தனர். ஏகநாதர் பிராமண வாக்கு பகவான் வாக்கே யென்று முழுதும் நம்புபவர். ஆதலால் பேரி தொடு-

களோடு கோயிலை நோக்கி நடந்தார். கருடபீடத்தில் அன்போடு தரையில் விழுந்து நமஸ்கரித்தார். ஸந்தரும், மஹந்தரும் பகவான் புகழைப் பாடிக்கொண்டிருந்ததனால் அவர்கள் காலிலும் வீழ்ந்து வணங்கினர். பண்டரி ஸ்ரீவிஷ்ணுவின் நகரம்; சதுர்ப்புஜராகிய புருஷரும் ஸ்திரீகளும் தம்முள் ஒருவகையான பேதமுமின்றி வசிக்கும் இடம் அது. இப் பூமியிற் பல புண்ய தீர்த்தங்கள் இருப்பது உண்மையே; ஆயினும், அவற்றைத் தரிசிப்போர் அதிக கர்வமே யடைகின்றனர். பண்டரிமாதா சங்கதி யப்படியன்று; அவளைப் பார்த்த மாத்திரத்திலேயே ஒருவனுடைய கெட்டகுணமும் கர்வமும் ஓடிப்போகின்றன. ருக்மிணி நாதர் அஞ்ஞானமுடைய பிராணிகளுக் கெல்லாம் மோக்ஷம் கொடுக்கிறார். இந்தத் தேவதேவனை இந்த பிரமஸாக்ஷாத்கார தாதாவை ஏகநாதர் தம் கண்களாற் கண்டார், சந்தோஷம் நிறைந்த மனத்தோடு காதலாற் அவரைத் தழுவினார். தோற்றப் பொலிவும், இடுப்பிற் சேர்த்திய அழகிய கைகளும், வசீகரிக்கும் முகமும், காதில் மகர குண்டலமும், இடுப்பிற் பீதாம்பரமும், கழுத்தில் துளசிமஞ்சரி மாலையும், செங்கல்மேற் சேர்த்துவைத்த பாதங்களும் கண்ணெடுத்துப் பார்த்த மாத்திரத்திலேயே மெய்ம் மறக்கச் செய்யுமே. ஏகநாதர் நிறைந்த அன்போடு ஏறிட்டுப் பார்த்தார்; பாதங்களை நெற்றியால் தொட்டார். பின் வாயாற் புகழ்ப் பாடல் பாடி வைகுண்ட நாதரைப் பூஜித்தார். தம் கண்களாற் பார்த்த இந்தச் சகுணவுருவத்தை மனத்தில் இருத்தினார். அப்புறம் ஸத்தியபாமை ராஹி ருக்மிணி இவர்களைப் பூஜிக்கச் சென்றார். பாண்டுரங்கர் புகழைப்

பாடிக் கொண்டே க்ஷேத்திரத்தைப் பிரதக்ஷிணம் வந்து தம் ஜாகைக்குப் போனார்.

**ஏகநாதர் கீர்த்தனம்**

பக்தர் ஏகநாதர் மனத்தில் என்ன இருந்ததென்று பார்ப்போம். க்ஷேத்திரத்துப் பிராமணரனைவரும் அழைக்கப்பட்டனர். அற்புதமான பதார்த்தங்கள் தயாராயின. மறுநாள் அவர்கள் போஜனத்துக்கு உட்கார்ந்தனர். பின் சதுர்த்தசியன்று ருக்மிணிநாதர் "எனக்கு ஏகநாதன் கீர்த்தனங்களைக் கேட்க அவாவாயிருக்கிறது" என்று தம் விருப்பத்தை ஸந்தர்களுக்கெல்லாம் உணர்த்தினர். பண்டாக்களுக்கு இது மீண்டும் தரிசனத்தாற் புலப்படுதலும், அவர்கள் ஏகநாதரிடத்து மிக மரியாதையாய், "மஹா ஸ்வாமி, கோயில் வாயிலிற் கீர்த்தனம் புரியும்படியாக நாங்கள் உம்மை வேண்டுகிறோம். அது ஸ்ரீபாண்டுரங்கர் விருப்பம்" என்றனர். இதை ஏகநாதர் கேட்டதும் அதற்கு வேண்டிய மஹா யத்தங்கள் செய்தனர். ஸப்த வர்ணக்கொடிகளும், தாளம் வீணை மிருதங்கங்களும் தயாராயிருந்தன. ஸந்தரும், மஹந்தரும், சாதுக்களும், ரிஷிகளும், வேத பண்டிதர்களும், க்ஷேத்திரத்து ஜனங்களும் மரியாதையோடு கேட்டற்கு உட்கார்ந்தனர். அவர்கள் மனங்கள் களித்தன; ஏகநாதர் பரந்த புகழைப்பற்றி முன்னமே கேட்டிருந்தனராகலின் அவர் சொல்வன்மையைக் காண ஆவலா யிருந்தனர். அவர்களுள் அன்பு நிறைந்த வீர வைணவருள்ளிட்ட யாத்திரிகர் பலர் இருந்தனர்; கூட்டம் நிபிடமா யிருந்தது. ஏகநாதர் எழுந்து பகவானுக்கு மங்களாசாசனம் சொல்லி, கேட்பவரும் சொல்பவரும் ஜநார்த்தனரே யென்று

தலை குனிந்து வணங்கினார். அவர் அப்படிச் சொன்ன பொழுது அங்கிருந்தவர்கள் "விட்டல் விட்டல்" என்று கரகோஷம் செய்து எழுப்பிய முழக்கம் ஆகாச மெங்கும் நிறைந்தது. அவர்கள் அன்பு நிறைந்த மனத்தோடு பகவந் நாமங்களைப் பாடி யாடி மெய்ம் மறந்தனர். ஆனந்தம் உச்ச ஸ்திதியி லிருந்தது.

**ஏகநாதர் பானுதாஸர் சரிதம் பாடுதல்**

அப்பொழுது ஒருவர் ஏகநாதரை நோக்கி, "உம்முடைய பெரிய பாட்டனார் பானுதாஸர் சரித்திரம் மிக அற்புதமானது. அதைப் பாட்டிற் கேட்க ஆசைப் படுகிறோம்" என்றனர். ஏகநாதர் மகிழ்ந்து, "ஸ்வாமி கட்டளையிடுகிற சமயம் என் மனத்தி லிருந்ததும் அதுவே" யென்று பானுதாஸர் கதையைப் பாட்டிற் பாடியருளினார். வித்யா நகரத்து அரசன் ராமன் என்பவன் தன் பரிவாரங்களோடு பண்டரியை வந்து தரிசித்ததும், பண்டரி நாதரை வேண்டிக்கொண்டு அவரைக் கொண்டு போய்த் தன் நகரத்திற் பிரதிஷ்டித்ததும், பின் பண்டரியிற் கூடிய யாத்திரிகருட் சாது ஸந்தர்கள் பண்டரி நாதரைக் காணாது வருந்தியபொழுது அங்கு வந்திருந்த பானுதாஸர் தாம் போய் அவரைக் கொண்டு வருவதாகச் சொல்லிப் புறப்பட்டு வித்யா நகரஞ் சென்று இரவில் பண்டரிநாத ரருளால் அவர் இருந்த இடஞ்சென்று பாடியதும், அவர் இவர் கழுத்தில் தம்முடைய மாலைகளை யெடுத்திட்டதும், மறுநாள் அரசன் அரதன மாலை காணாமையப் பண்டாக்களைக் கோபிக்கச் சேவகர் நாற்புறமும் சென்று பார்த்துப் பானுதாஸரைப் பிடித்து வந்து கழுவேற்ற

முயலலும் கழுமரம் தளிர்விட்டுப் பூவும் பழமுந் தாங்கி நின்றதும், அரசன் அஞ்சிப் பக்தரை வணங்கிப் பண்டரிநாதரைப் பண்டரிக்குக் கொண்டுபோக விட்டதும், பானுதாஸர் ஒருவரே எடுத்துச் செல்லும் படி விக்கிரகம் உருவிற் சிறுத்ததும், பத்ம தீர்த்தக் கரை வரவும் அது பழைய வுருவடைந்ததும், சாது ஸந்தர்கள் முதலியோ ரெல்லாம் சென்று அங்கிருந்து பண்டரிக்குக் கொண்டுவந்து பகவானைப் பிரதிஷ்டித்ததும், பானுதாஸர் செய்த இந் நன்றிக்காக அவர் இவருடைய வம்சத்தில் அவதரிப்பதாக வாக்குக் கொடுத்ததும் விஸ்தாரமாக எடுத்து காட்டினூர். இந்தக் கீர்த்தனத்தை ஸந்தரும், மஹந்தரும் கவனத்தோடு கேட்டனர். கடைசியாக மங்களம் பாடிய பின் ருக்மிணிநாதருக்குத் தீபங்கள் காட்டப்பட்டன.



## ஏழாம் அத்தியாயம்

**ஏகநாதர் ஊர்க்கு மீளல்**

கதையைப் பரமசந்தோஷத்தோடு கேட்ட பக்த ஜனங்கள், "பிரதிஷ்டான க்ஷேத்திரம் செய்த பாக்கியமே பாக்கியம், அது ஸ்ரீநாதரைப் பார்த்துப் பார்த்து ஆனந்திக்கிற தன்றோ? ஏகநாதர் மனுஷ்யாவதார மல்லர். அவர் பாண்டுரங்க அவதாரமே" என்றனர். இந்தப் புகழ்மொழியைக் கேட்டவுடனே ஏகநாதர் எழுந்து வெளியே போயினர். கோயிலுக்குப் போய்க் காதலோடு பாண்டுரங்கரைத் தரிசித்தார். இங்கு அவர் பிராமணர்க்குத் தானங்கள் வழங்கிப் பகவா னிடம் விடை கொண்டு ஊருக்குப் புறப்பட்டார். இரவும்

பகலும் ஏகநாதர் பண்டரியின் பெருமையையே சிந்தித் தவராய் ஜனங்களுக்கு அதனை எடுத் தியம்பினூர். அப்புறம் பிரதிஷ்டானத்துக்குப் போதற்கு வழிக் கொண்டார். அவர் நகரைச் சமீபித்ததும் உத்தவர் அவர் வருகையைக் கேள்விப்பட்டார். அந்த க்ஷேத்திர வாசிக ளெல்லாம் அவரை வரவேற்க விரைந்து சென்றனர். ஏகநாதரைப் பாண்டுரங்க விக்கிரகமாகப் பாவித்து அவருக்கு நமஸ்காரஞ் செய்தனர். அவரைப் பிரியத்தோடு தழுவி ஆனந்த வாரியுள் திளைத்தனர். எல்லாரும் சின்னங்களையும், கொடிகளையும் தூக்கிப் பிடித்துக்கொண்டு நடந்து செல்ல, ஏகநாதர் பகவான் புகழைப் பாடினூர். வழியெல்லாம் பந்தல். பெருங் கூட்டம் சேர்ந்திருந்தது. இவ்விதமாகச் சந்தோஷ முழக்கத்தோடு ஏகநாதர் வீட்டுட் பிரவேசித்தார். இங்கும் இனிய புகழ்ப் பாடல்களைப் பாடி அவர் ருக்மிணிநாதர்க்கு ஆரதியெடுத்தார். இந்த விதமாகப் பண்டரி யாத்திரை நிறைவேறியது. அன்பான பக்தர் உத்தவர் எப்போதும் அருகி லிருக்க, வழக்கம் போல விஷ்ணு வர்ச்சனையும், புராண காலக்ஷேபமும், ஏழை களுக்கு உணவிடுகையும், ஹரி கீர்த்தனங்களும் நடந்து வந்தன. ஒன்றிலுங் குறைவில்லை.

**ஸ்ரீ பாதர் வரலாறு**

பிரதிஷ்டான க்ஷேத்திரத்தில் ஸ்ரீ பாத ரென்று ஒரு சந்நியாசியிருந்தார். அவர் அரிஷட் வர்க்கங்களையும் வென்று பரமஹம்ஸ ரான வர். ஒவ்வொரு பிராணியி னிடத்தும் பக வானைக் காண்பவர். அவர்க்குப் பிச்சைக்காரனும், தேசாதிபதியும் ஒன்றே. மசகமும் யானையும், நாற்காற் சீவனும் இரண்டு காற் சீவனும் ஒன்றே. எந்தப்

பிராணியைப் பார்க்க நேரிட்டாலும் உடனே அதற்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வார். நகரத்துப் பிராமணர் "ஸ்ரீ பாதர் பெரியவ ராயினும் அவரிடத்திற் கொஞ்சங்கூடக் கர்வமில்லை. அவர் எல்லாரையும் நமஸ்கரிக்கிறார். சண்டாளனோ, பிராமணனோ, பசுவோ, பூனையோ, நாயோ, பன்றியோ, பட்சியோ எதிரே எது வந்தாலும் அவர் மரியாதையோடு அதை வணங்குகிறார். இவன் தாழ்ந்த சாதி இவன் உயர்ந்த சாதி யென்பது அவர் கருத்துள் நுழைவதே யில்லை. ஏதோ மந்திரோபாசனை செய்து அவர்க்குப் புத்தி மருட்சி யுண்டாயிருக்க வேண்டும். அவர் பேய்கோட் பட்டவரே" என்று தம்முட் பேசிக்கொண்டனர். சிலர் "அவனவன் பாடு அவனுக்கு, நாமேன் கவலைப்பட வேண்டும்! பரம ஹம்ஸனுக்குச் சாதி பேதம் பார்க்க வேண்டிய அவசியமே யில்லை" என்றனர். இவ்விதமாக அந்த க்ஷேத்திர வாசிகளிற் சிலர் அவரைப் பழித்தனர், சிலர் புகழ்ந்தனர். அதனால் அவர் மனத்திற் சந்தோஷமாயினும் துன்பமாயினும் தோன்றின தில்லை. அவர் நிலை சரீர வுணர்ச்சி கெட்டாருடைய நிலை. அவர் ஏகநாதரைப் போய்ப் பார்த்துக் கவனத்தைச் செலுத்தி அவர் கீர்த்தனங்களைக் கேட்கும் வழக்க மொன்றை மேற்கொண்டார். இந்த மாதிரி ஒவ்வொரு பிராணியையும் நமஸ்கரித்தும் ஸ்ரீ நாதரை இடைவிடாது போய்ப் பார்த்தும் அவர் மனம் எப்போதும் சாந்தியுற்று ஆனந்தத்தால் நிறைந்திருந்தது.

பலநாள்கள் இவ்வாறு சென்றபின் ஓர் அதிசயம் நடந்தது. இந்த நமஸ்கார ஸ்வாமி போம்பொழுது

நமஸ்காரஞ் செய்து கொண்டே ஸ்நானத்துக்காகக் கோதாவரிக்கரை போய்ச் சேர்ந்தார். ஒரு கழுதை ஆற்றில் முழுகி உள்ளே யாழ்ந்தது; வெள்ளம் வடிந்த பின் ஊதிய சவம் மணல்மேற் கிடந்தது. இவர் அவ்விடத்துக்குப் போய்ச் செத்த கழுதையை நமஸ்கரித்தார். பிராமணரெல்லாம் அதுகண்டு நகைத்தனர். "ஓ ஸ்வாமீ, ஸர்வஞ்ஞரே, யாருக்கு இந்த நமஸ்காரம் நீர் பண்ணினீர்?" என்றனர். பிராமணருடைய இந்தக் கேள்வியைக் கேட்டு அவர் உண்மையில் அது என்னவென்று பார்த்தார். அது மிகவும் ஊதிப்போன கழுதைப் பிணமே. பிராமணர்கள் மேலும், "இந்தப் பிணத்துக்கு உயிர் வரச் செய்வீராயின், உம்முடைய வணக்கம் நியாயந்தான் இந்த வுலகம் ஆத்மாவே யென்று பாவித்து நீர் ஒவ்வொரு பிராணிக்கும் நமஸ்காரம் செய்கிறீர். இந்தக் கழுதையைப் பிழைப்பிப்பீ ராயின் உம்முடைய நம்பிக்கை உண்மையென்று ஒப்புக்கொள்ள நாங்கள் தயார்" என்றனர். பரமஹம்ஸர் பிராமணர் கூற்றைக் கேட்டு, "ஆத்மா பிராணிகளிடத் தெல்லாம் நிறைந்திருக்கிறது" என்று விடை கூறி, "தேவ தேவனே, பண்டரி பதியே, நீ இந்த வஸ்துவை விட்டு மறைந்தாய். இந்தக் கழுதையின் சரீரம் பிணமாய்த் தோன்றும் வரை அதற்குச் செய்யும் நமஸ்காரம் வீணென்றே தோன்றுகின்றது" என்று ஆத்மாவைப் பிரார்த்தித்தார். அவர் சொல்லி முடிந்ததும், என்ன ஆச்சரியம், அங்குக் கிடந்த கழுதைப் பிணம் உயிர் பெற்றது. அஃது அசைந்து உறுமிக் காதுகளை யடித்து எழுந்து நின்றது. பிராமணர் திப்பிரமை கொண்டு

**ஸ்ரீ பாதர் செத்த கழுதையைப் பிழைப்பித்தது**

"இது பெரிய அற்புதம்!" என்றனர். தங்கள் கர்வத்தை யொதுக்கிவைத்து அவரை நமஸ்கரித்தனர். நடந்த தென்னவென்று பார்க்கப் பெருஞ் சனத்திரள் கூடி ஆற்றின் மணலெங்கும் நிறைந்தது. புருடரும் பெண்டிரும் நமஸ்கார ஸ்வாமியின் ஸித்தியைக் கண்டு அதிசயித்து, "இவ்வளவு பெரிய மஹான் இப் பூவுலகில் வேறெங்குமில்லை" யென்றனர். பிராமணர் "இஃது உண்மை. நம் நகரத்து ஏகநாதர் எப்போதும் மாராட்டியிற் கீர்த்தனங்கள் பாடிக்கொண்டு ஊரை மயக்கிக் கொண்டிருக்கிறார்" என்று ஸ்ரீநாதரை யிழித்துரைத் துக்கொண் டிருந்த சமயம் அவர் அருகில் வர நேர்ந்தது. அவர் பிரம யஞ்ஞத்துக்காக ஆற்றுமணலுக்கு வந்துகொண் டிருந்தார். பிராமணர் அவரைப் பார்த்ததும் இன்னும் அதிகமாகப் பழிக்க வாரம்பித்து நமஸ்கார ஸ்வாமியைப புகழ்ந்து, "இவர்தான் மஹான். அற்புதஞ் செய்யமாட்டாத ஒருவனை மஹான் என்றல் மூடத்தனம். போலி மஹானை மக்களுள் இருக்கும் படி விடுதல் தக்கதன்று" என்று சொல்லிவிட்டுத் தத்தம் வீடு நோக்கிப் போயினர்.

**ஏகநாதர் கலியில் ஸித்தி தீங்கு விளைத்தலை உணர்த்தல்**

திடீரென்று நமஸ்கார ஸ்வாமி ஸ்ரீநாதரைக் கிட்டி அவர்க்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்தார். ஏகநாதர் இந்த உயர்ந்த சந்நியாசியைப் பார்த்து ஒரு நமஸ்காரஞ் செய்தார். அப்புறம் அவரை நோக்கி, "நீர் இன்று ஒரு பெரிய வம்பு விளைத்தீர். முதலாவது இது கெட்ட கலியுகம்; மனிதர் சந்தேகமும் பகையும் நிறைந்திருக்கின்றனர். இது போதாதென்று அரசன் மகம்மதியன். ஆதலால்,

யோகாப்பியாசஞ் செய்வதில் ஒருவனுக்குப் பல கஷ்டங்கள் உள்ளன. அரசன் உம்முடைய ஸித்திகளைப் பற்றிக் கேள்விப் படுவானாயின் உம்மைச் சிறையிலிட்டுத் தன் குலத்தா ரெவராயினும் சாக நேரின் அவரை யுயிர்ப்பிக்கும்படி உம்மை இம்சிப்பான். எங்குப் பார்த்தாலும் தந்நலம் பாராட்டும் மனிதரே காணப்படுகின்றனர். அவர்கள் இடைவிடாது உம்மைச் சென்றதும் வருவதும் சொல்லும்படி கேட்பர். இதனால் உம்முடைய ஒழுக்க முறைக்குத் தடை நேரும். இதற்கென்ன பரிகாரம்?'' என்றார்.

**ஸ்ரீபாதர் உயிரோடு புதைக்கப் படல்**

நமஸ்கார ஸ்வாமி ஏகநாதர் அமிருத வாக்கை யொப்பித் தம்மை யுயிரோடு புதைக்கும்படி வேண்டினார். ஸ்ரீநாதர் "நீர் உயிரோடு புதைக்கப் படுதல்தான் உத்தமமென்று தோன்றுகிறது'' என்றார். உடனே ஆள்களைக் கூப்பிட்டு ஒரு குழி வெட்டச் செய்தார். இந்தக் குழியில் சரீர நினைப்பற்ற சந்நியாசி உட்கார்ந்தார். ஒரு நிமிஷம் பூஜை நடந்தது. உடனே அவர்மேல் மணலிட்டு நிரப்பி விட்டனர். ஸ்ரீநாதர் ஸ்நானஞ் செய்து வீட்டுக்குத் திரும்பினார். நமஸ்கார ஸ்வாமியை உயிரோடு புதைத்து விட்டனர் என்று க்ஷேத்திரமெங்கும் சங்கதி பரவிற்று. பிராமணரெல்லாம் ஒருங்குகூடி ஆலோசித்தனர்; பண்டிதர்களும் வைதிக மதாசாரியர்களும் ஏகநாதரைப் பிம்பளேசுரத்துக்கு வரும்படி உத்தர வனுப்பினர்: "எங்களிடத்திற் சொல்லாது இந்த வழக்கிலில்லாத காரியத்தை நீர் செய்தீர். கோதாவரியில் ஒரு குழியெடுப்பித்து அந்த மஹாயோகியை உயிரோடு புதைத்-

தீர். அங்கு மந்திரங்கள் ஓதியது யார்? ஏற்பட்ட கிரியைகளின்றி நீர் இக்காரியம் செய்தீர். கட்டாயப் படுத்தி அவரை உயிரோடு புதைக்கப்படுதற்குச் சம்ம திக்கச் செய்தீர். பரமஹம்ஸர் புதைக்கப்பட்டார்; கொலைக்குற்றம் உம்மேலதாயிற்று. ஆதலால், உம் மைப் பிரஷ்டராக்கவேண்டும். எந்தச் சாஸ்திரத்திற் சந்நியாசியை வலிந்து உயிரோடு புதைப்பிக்க வேண்டு மென்று எழுதி யிருக்கிறது? அப்படிச் சாஸ்திர மிருக்குமாயின் அதை எங்களுக்குக் காட்டும்."

**ஏகநாதர் கல்லிடபத்திற்குச் சோளக் கதிர் அருத்தியது**

ஏகநாதர் அங்குச் செல்லப் பிராமணர் அவரை நோக்கி, "கொலைக் குற்றம் உம் மேல் ஏற்படுகின்றது. இப்பொ ழுது ஓரற்புதம் செய்து பிரஷ்ட ராகாமல் உம்மைக் காத்துக் கொள் ளும். இதோ இந்தக் கல்லிடபம் எங்கள் கண்காண உம் கையிலிருந்து சோளக் தட்டை கள் தின்னுமாயின் நீர் குற்றமற்றவராவீர். உம்மைப் பிரஷ்டராக்க வெண்ணிய எண்ணத்தையும் ஒழிக்கின் றோம்" என்றனர். ஏகநாதர் இந்தப் பிராமணோத்தமர் களுடைய சொல்லைக் கேட்டு, "ஸ்வாமிகளே, உங்கள் வாக்கிற் பிறந்ததொன்றும் பொய்யாதலில்லை. முன்பு வசிஷ்டருடைய கடைக்கணேக்கால் அவர் தண்டம் சூரியன்போல் ஒளிவிடும்படி அவ்வளவு சூடாயிற்றே" என்று சொல்லிக் கொண்டு அவர்கள் பாதத்தில் வீழ்ந்து வணங்கினர். பிராமணர் "இந்த அதிகப் பிரசங்கமெல்லாம் வேண்டாம். நீர் எங்களுக்கு ஓர் அற்புதங் காட்டினல் மட்டுமே உம்முடைய வாக்கு உண்மை யெனக் கொள்வோம்" என்று சொல்லி

ஓடிச் சோளக்கதிர்கள் கொண்டு வந்து ஏகநாதர் முன் வைத்தனர். ஏகநாதர் அவர்கள் பிடிவாதத்தைப் பார்த்து, "இன்று நானுகவே சந்நியாசியைச் சமாதி வைத்தேன், இந்த என் செய்கையில் ஒரு குற்றமு மில்லையாயின் இச் சோளக்கதிர்களைத் தின்பாய்" என்று கல்லிடபத்திடங் கூறினர். இவ் வார்த்தைகள் ஏகநாதர் வாயை விட்டுப் புறப்பட்டனவோ இல்லையோ ஓர் அதிசயம் நடந்தது. கல்லிடபம் தன் நாக்கை நீட்டிச் சோளக்கதிரை வாயில் இழுத்து வேகமாகத் தின்றது. பிராமணரெல்லாம் இது கண்டு பிரமித்து, "ஐயா ஏகநாதரே, நீர் ஓர் அற்புதம் செய்தீர். ஆத லால், நாங்கள் உமக்கு விதிக்க எண்ணிய பிரஷ்ட தண் டனை இனி உம்மைப் பாதிக்காது" என்றனர். ஏகநாதர் பிராமணோத்தமர் சொல்லிய வார்த்தைகளைக் கேட்டு அவர்களை நமஸ்கரித்து, "நான் மந்தமதி, வேதசாஸ் திரங்களில் எனக்குப் பழக்க மில்லை. உங்களுடைய பாதங்களைக் கழுவிய நீரை யருந்தலால் நான் சுத்த ஞகிறேன். உங்களுடைய பாதங்களிலேயே சர்வ தீர்த் தங்களும் விரதங்களும் ஸித்திகளும் உள்ளன" என்றுர். பிராமணர் "இந்த ஏகநாதர் செய்த அற்புதச் செயல் யோகாப்பியாசத்தாலும் செய்ய முடியாதது. இது பக்தியினுல்தா னுண்டாகும். அவர் பூர்வத்திற் செய்த குருசேவையும் ஸந்தர் சேவையும், ஸ்ரீ ஹரிக் குச் செய்யும் பக்தி பூர்வகமான அர்ச்சனையும் பாண்டு ரங்கருக்கு அவரிடத்தில் திருப்தியை விளைத்து நிமி ஷத்திற்கு நிமிஷம் அவரைக் காக்கச் செய்கின்றன", என்று தம்முட் பேசிக்கொண்டு தத்தம் வீடு சேர்ந் தனர். இச் சங்கதி க்ஷேத்திரமெங்கும் பரவுதலும் ஜனங்கள் அதிசயித்தனர். பக்த ஜனங்கள் ஏகநாதர்

புகழைப் பாடினர். "வைகுண்டநாதர் பிரபஞ்சத்தைக் காக்கப் பூமியில் அவதரித்திருக்கிறார்" என்றனர்.

**பிராமணர் சிலர் கல்லிடபக் கதையை நம்பாமை**

ஆனால், சந்தேகமும் துவேஷமும் நிறைந்த சிலர் இது பொய் என்றனர். அவர்களுள்ளே க்ஷேத்திரத்திலேயே யிருந்துவிட்ட பிராமணோத்தமரு மிருந்தனர். அவர்கள் இப்பொழுது பிம்பளேசுவரத்துக்கு விரைந்து சென்றனர். அவர்கள் கல்லிடபத்தைச் சோதித்துப் பார்த்தனர். அது முன்போலக் கல்லாகவே யிருந்தது. "இது எப்படிச் சோளத்தட்டையைத் தின்றிருக்கும்? கதை உண்மையாயிருக்க முடியாது" என்றனர். அப்புறம் ஏகநாதரை விளித்து, "நீர் நேற்றுச் செய்த அற்புதத்தை எங்களுக்குங் காட்டினாலன்றி நீர் பிரஷ்டரே. நீர் நேற்றிங் கிருந்தது சத்தியமே, நாங்கள் இல்லை. கதையை எப்படி நம்புவோம்?" என்று சொல்லிக்கொண்டு சில சோளத்தட்டைகளை ஏகநாதர் முன் இட்டு, "இதை நந்தியைத் தின்பியும். நீர் இந்த அற்புதத்தைக் காட்டாமற் போனீரோ, சாஸ்திரங்களை இந்த வாதத்தில் உபயோகித்துச் சந்நியாசியை உயிரோடு புதைத்ததற்காக நாங்கள் உம்மைப் பிரஷ்டராக்குவது நிச்சயம்" என்றனர்.

**கல்லிடபம் தீனிக்குட் குதித்தல்**

பிராமணர் இப்படிச் சொல்லலும் ஏகநாதர் கவலை கொண்டவராய் நந்தியைப் பிரார்த்தித்தார்: "எவ்வளவு காலம் சோளத்தட்டை தின்ன உனக்குப் பிரியமிருக்கும்? நகரத்தில் இன்னும் எத்தனையோ பிராமணர் இருக்கின்றனர்; நாளை அவர்கள் வந்து இப்படியே

கேட்பார்கள். ஆதலால், எல்லாருடைய சந்தேகமும் நீங்குதற்கு ஓர் உபாயம் சீக்கிரமாகத் தேடவேண்டும்'' என்றனர். ஏகநாதர் இது சொல்லி முடிக்கு முன் அப் பிராமணரும் மற்றவர்களும் காண ஓர் அதிசயம் நடந்தது. நந்தி எழுந்து ஓடிக் கோதாவரியில் ஒரு பிலத்திற் குதித்தது. இன்று வரை அஃது அங்குத்தா னிருக்கிறது. இந்த அதிசயத்தைக் கண்ட பிராமணர் "ஏகநாதர் பெருமை நம் புத்திக்கு அகோசரம். இது மனிதனுற் செய்யலாகாத காரியம். முன்பு இந்த நம் பண்டை நகரத்தில் ஞானேசுவரர் ஓர் எருமையை வேதமுழுதும் ஓதும்படி செய்தார்; சாங்கதேவரென் னும் ஸித்தர் அவரைக் காண வந்தபொழுது உயி ரில்லாத சுவரை முன் போகும்படி செய்தார். அதே மாதிரி ஏகநாதர் இந்த அற்புதச் செயலைச் செய்தார்'' என்று தம்முட் பேசிக்கொண்டு, ஏகநாதரை நோக்கி, "உமக்கு இனிப் பிரஷ்டத்துவமில்லை. நீர் வீட்டுக்குப் போகலாம். உம்முடைய பக்தியே பக்தி. கல் நந்திக்கு உயிர் கொடுத்தீரே, தேவதேவர் உம்மிடத்துத் திருப்த ராயினர். நடந்த சங்கதியின் உண்மையை நாங்கள் இப்பொழுது அறிந்தோம்'' என்றனர். இப் புக ழுரையைக் கேட்ட ஏகநாதர் அவர்கள் கால்களில் விழுந்து வணங்கி, "நடந்தது உங்களுடைய அருட் சக்தியாலேயே. எல்லாரிலுங் கடைய ஞகிய நான் உங்களைச் சரணமடைகிறேன்'' என்றனர். ஏகா ஜநார்த் தனருடைய இம் மொழிகளைக் கேட்ட பிராமணர் மகிழ்ந்தனர். பைடணபுரி வாசிகள் சிறியரும், பெரி யரும் நந்தியைப் பார்க்க வந்தனர். அந்த இடத் திலேயே நந்தி இன்றும் இருக்கிறது; மணலை எடுத்து விட்டால் நந்தியைத் தெளிவாகப் பார்க்கலாம்; ஒருவ

ரும் ஐயுற வேண்டுவதில்லை. ஸ்ரீ நாதர் வீட்டுக்குப் போயினர். பக்த ஜனங்கள் களிப்புக் கடலி லாழ்ந்தனர். நாளுக்கு நாள் ஏகநாதர் நற்புகழ் நாடெங்கும் பரவியது.

**ஞானதேவர் சமாதியைத் தரிசித்தல்**

ஒரு காலத்தில் ஸ்ரீ நாதர் அலங்காபுரிக்குப் போகப் பிரயாணப்பட்டார். தம்முடைய உத்தம சிஷ்யர் உத்தவரை வீட்டில் விட்டுத் தாம் பரிவாரங்களோடு புறப்பட்டார். இவ்வளவு நல்லவரோடு போகக் கிடைக்க வேண்டுமே யென் றெண்ணி ஒரு பெருங் குழு இவரோடு புறப்பட்டது. வழி யெல்லாம் புகழ்ப் பாடல்களைக் கேட்டுக்கொண்டே அவர்கள் நடந்து அலங்காபுரி சேர்ந்து, இந்திராயணிக் கரையில் தங்கினர். இங்கே ஞானதேவர் இரவு ஏகநாதர் கனவில் தோன்றி, "அஜ்ஞாந விருக்ஷத்து வேர்கள் என் கழுத்துவரை வந்துவிட்டன. என் சமாதியைத் தோண்டி வேரை அப்புறப் படுத்து" என்று சொல்லினர். ஸ்ரீநாதர் அவ்வாறு செய்து அங்கு ஞானதேவரைத் தரிசித்து, அவருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தார். அப்புறம் சமாதியை மீண்டும் மூடிவிட்டு ஒரு கீர்த்தனஞ் செய்தனர். ஏகாதசி யன்றும் இரவெல்லாம் கீர்த்தனம் நடந்தது; அதில் யாத்திரிகரெல்லாம் சேர்ந்தனர். அக்காலத்தில் அலங்காபுரி குடிபோகிய ஊர்; அங்கு அரிசியாவது வேறு உணவுப் பொருள்களாவது அகப்படவில்லை. பகவான் பண்டரிநாதர் ஓர் அற்புதஞ் செய்தார். ஏழைகளுக்கு இரங்கும் ருக்மிணிநாதர் ஒரு லிங்காயதரானார்; ஒரு கொட்டகை போட்டு எல்லா உணவுப் பொருள்களோடும் அங்கு

உட்கார்ந்தார். யாத்திரிகர்களைப் பார்த்து, "உங்களுக்கு வேண்டிய சாமான்களை எடுத்துக்கொண்டு போங்கள். நான் இப்பொழுது பணங் கேட்கவில்லை. எனக்கு ஏகநாதரை நன்றாய்த் தெரியும்" என்று சொல்லி ருக்மிணி நாதர் கோதுமை மா, துவரம் பருப்பு, அரிசி, நெய், கறிகாய்கள், உப்பு முதலிய அவசிய பதார்த்தங்களை யெல்லாம் அளந்து கொடுத்தார். நான்கு நாளானதும் அவர் திடீரென்று மறைந்தார். யாத்திரிகர் உடனே ஏகநாதரிடம் வந்து தாங்கள் உணவுப் பொருள்களை யெல்லாம் கடனாகக் கொண்டதாயும் வணிகனை எங்குங் காண வில்லை யென்றும் சொல்லினர். அவர்கள் நிஷ்கபடமாய் இந்தக் கதை சொல்லலும் ஏகநாதர் அதன் இரகசியார்த்தத்தை அறிந்து, "பக்தரைத் துன்பத்தினின்றும் காக்கும் கருடக் கொடியார் என்ன காரியஞ் செய்தார்!" என்று விம்மித ராயினர். இவ்விதமாகத் தங்கள் யாத்திரையை முடித்து அவர்கள் ஊர்க்குத் திரும்பினர். அவர்கள் பிரதிஷ்டானத்தை யடுத்ததும் உத்தவர் எதிர்கொண்டு வரவேற்றார். அந்த க்ஷேத்திரத்துப் பக்த ஜனங்களும் திரண்டு வந்து ஸ்ரீ நாதருக்கு அன்போடு நமஸ்காரஞ் செய்தனர். எல்லாரும் கருடக் கொடிகளும் சின்னங்களும் தூக்கிப் பிடித்துக்கொண்டு ஞானேசுவரர் கதைக்குரிய புகழ்ப் பாடல்களைப் பாடினர். தாள வொலியும் வீணை நாதமும் மிருதங்க வோசையும் ஜனங்கள் செய்த ஆரவாரத்தோடு சேர்ந்து பெரு முழக்கமா யிருந்தது. ஹரிதாஸர்கள் போம்பொழுதே குதித்தனர். அந் நாள் ஆனந்த நாளா யிருந்தது. அப்புறம் அவர்கள் ஆரதி பாடி ஸ்ரீ ஹரி முன் தீபங்கள் காட்டினர். அடுத்த நாள் பிராமணர்க்கு ஒரு பெருஞ்

சமாராதனை நடந்தது. தாம்பூலமும் தானமுங் கொண்டு எல்லாரும் திருப்த ராயினர். அப்புறம் ஏகநாதர் தம் வாயாலேயே அலங்காபுரி மகிமையை வர்ணித்தார்.

**ஞானேசுவரியைப் பிரசித்தப்படுத்தல்**

ஒருநாள் ஸ்ரீநாதர் அன்போடும் ஆனந்தத்தோடும் ஞானேசுவரியைத் திருத்துதற்கு உட்கார்ந்தார். இருக்கிற பிரதிகளெல்லாம் கவனத்தோடு எழுதப்பட்டிருந்தாலும் பிரதி செய்வோர் பிழைகள் செய்து கடைசியாக அர்த்தமும் இலக்கண முடிவுகளும் புலப்படாமல் புஸ்தகம் வழக்கு வீழ்ந்தது. இதற்காகவே ஞானேசுவரர் பிரதிஷ்டானத்தில் ஏகநாதராக அவதரித்துப் புஸ்தகமுழுதையும் திருத்தினார். அப்புறம் இவர் உத்தவரைக் கருணையோடு பார்த்து, ஞானேசுவரர் கூர்த்த மதிகொண்டு கீதைக்கு ஒரு மராட்டி மொழிபெயர்ப்புச் செய்துள்ளாரென்னும் உலகமறியாத விஷயத்தைச் சொன்னார். அன்றியும், “ஜநார்த்தனர் கருணையால் அப் புஸ்தகத்தை நான் திருத்தி யிருக்கிறேன். ஆதலால் பக்த ஜனங்கள் கூடியிருந்து புஸ்தகத்தை வாசித்துக் கேட்க வேண்டும்” என்றார். ஏகநாதர் வாயிற் பிறந்த இம் மொழிகளைக் கேட்ட உத்தவர் பரம சந்தோஷ மடைந்தார். கேசவர் வடிவத்தோடிருந்த ருக்மிணி நாதரும் கவனித்துக் கேட்டுக் கொண்டிருந்தார். இவ்விருவர் முன்பும் ஸ்ரீநாதர் ஞானேசுவரியை இடைவிடாது வாசித்தார். இவர்களோடு பக்த ஜனங்களாகிய புருஷர்களும் ஸ்திரீகளும் பலர் இருந்தனர். ஸ்ரீநாதர் ஞானேசுவரியின் ஆழ்ந்த பொருளைத் தெளிவாக விளக்கினார். அதனால் சந்தேக

மென்பதே யில்லாமற் புஸ்தக முழுதும் குழந்தை முதற் பெரியவர்கள் வரை எல்லாருக்கும் விளங்கிற்று. ஒவ்வொரு நாளும் மூன்றும் யாமத்தில் இந்த ஞானேசுவருடைய நூலை வாசித்தார். புஸ்தகம் வாசித்து முடிந்ததும் அவர்கள் சரஸ்வதியைப் பூஜித்து மங்கல தீபங்கள் காட்டிப் பக்ஷியங்கள் வழங்கினர்.

**கேசவர் விடைகொண்டு மறைதல்**

**ஞானேசுவரி** வாசித்து முடிந்ததும் கேசவ வடிவத்தோடு அங்கிருந்த பண்டரிநாதர் ஏகநாதரைத் தாம் போவதற்கு விடை கேட்டார். "பன்னிரியாண்டு நான் உம்மோடு சந்தோஷமாகக் கழித்தேன். எனக்கு இப்பொழுது வீட்டு ஞாபகம் வந்து விட்டது. ஊர்க்குப் போக விடை தரவேண்டும்" என்றனர். ஜகந்நாதர் இப்படி வேண்டலும் ஏகநாதர் சம்மதித்து, "உம்மைத் திரும்பவும் நான் இங்குப் பார்க்க நேருமென்று நம்புகின்றேன்" என்றனர். கேசவ வடிவினர் இந்த வேண்டுகோளைக் கேட்டுடனே மறைந்தார்; ஆயினும் 'நான் இன்னுமொரு சமயம் இங்கு வரவேண்டும்' என்று தம்முட் சொல்லிக் கொண்டார்; 'ஏகநாதன் பலவழியில் எனக்குத் தொண்டாற்றி யிருக்கிறான். அவனுக்கு ஏதோ ஒரு வழியாற் பிரதி செய்ய வேண்டும்' என்று எண்ணி ஆனந்தப்பட்டுக்கொண்டு துவாரகா நாதர் உடனே மறைந்தார். பக்தர் உத்தவர் இப்பொழுது ஏகநாதனை நோக்கி, "நான் எப்பொழுதும் உம்மோடேயே இருப்பேன்" என்றார்; ஆதலால், கீர்த்தன காலங்களில் அன்போடும் ஊக்கத்தோடும் பக்கப் பாட்டுப் பாடித் தாளம் போட்டுச் சங்கீதத்தைச் சோபிக்கச் செய்தார்

ஆபாலகோபம் புருஷரும் ஸ்திரீகளும் இந்த அற்புத கீர்த்தனங்களைக் கேட்டுக் களித்தனர்.

**ராண்யாமஹார் என்னும் பக்தன்**

அந்தப் புண்ணிய ஸ்தலத்தில் ஒரு சிறந்த பக்தன் இருந்தான். பூர்வ ஜன்மத்தில் யோகப் பிரஷ்டனாகிய அவன் வைணவோத்தமன். ஏதோ குற்றத்தால் அவன் மஹார் என்னும் சண்டாள குலத்திற் பிறந்திருந்தான். அவனுடைய மனைவி பரமசீலை. அவளுக்கு ஸ்ரீ கிருஷ்ண மூர்த்தியினிடத்திற் பக்தி. இருவரும் அன்போடு பூஜை செய்து பகவந் நாமங்களை யோதுவர். ஸ்ரீ நாதர் இரவுதோறுங் கீர்த்தனங்கள் செய்யுங்காலை அவர்க ளிருவரும் வந்து வெளியில் உட்கார்ந்து கவனத்தை முழுதுஞ் செலுத்திக் கேட்டுக் கொண்டிருப்பர். கீர்த்தனங்கள் முடிந்து ஜனங்களெல்லாம் போன பிறகு அவர்கள் ஏகநாதரை வணங்கிவிட்டு வீட்டுக்குப் போவர். அவர்கள் ஏகநாதர்க்கு எவ்விதமாகத் தொண்டு செய்தனர்? அவர் கோதாவரிக் கரைக்கு ஸ்நானத்துக்கு வழக்கமாகப் போகும் வழியை எப்பொழுதும் பெருக்குவர். ஸ்ரீ நாதர் ஸ்நானஞ் செய்யும்பொழுது அவரைத் தூரத்திலிருந்தே பார்த்து விஷ்ணு அவதாரமாகப் பாவித்துச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்வர்.

**ராண்யாமஹார்க்கு ஏகநாதர் அனுக்கிரகம்**

ஓர் ஏகாதசி யன்று ஏகநாதர் அதிக சந்தோஷத்தோடு கீர்த்தனஞ் செய்து கொண்டு ஸ்ரீ கிருஷ்ணன் அர்ஜுனனுக்கு விசுவரூப தரிசனங் காட்டிய வரலாற்றைச் சொல்லிக் கொண் டிருந்தார்; அதைப் பாட்டிற் சொன்ன பொழுது ஞானேசுவரர் வியாயானக்கித்தி லுள்ள

அழகிய சுலோகங்களை எடுத்துப் பாடினர். அந்தச் சந்தர்ப்பத்தில் ராண்யாமஹார் ஏகநாதரை நோக்கி, "சராசரங்க ளெங்கும் நிறைந் துள்ள ஸ்ரீ ஹரி விசுவ ரூப மெடுத்த சமயம், இப்பொழுது சண்டாளனு யிருக்கும் அடியேன் எங்கிருந்தேன்?" என்று கேட்டான். ஸ்ரீ நாதர் "நீர் கிருஷ்ணனே பற்றுக இருந்தீர்" என்றார். ஏகநாதர் வாயால் இவ்வமிர்த வசனத்தைக் கேட்டதும் மஹார் சிந்தனையி லாழ்ந்தான். பேதா பேத பாவங்கள் மறைந்தன; துவைத பாவம் தொலைந்தது; எந்தச சராசரங்களைப் பார்த்தாலும் தான் அவற்றோடு ஒன்றாயினன்; வர்ண பேதம் ஜாதி பேதமொன்றும் இப்பொழுது அவனுக்குத் தெரிய வில்லை; ஏகநாதர் பரப்பிரம ஸ்வரூபமே யென்று தெளிந்தான. அப்புறம் வீட்டுத் தொந்தரைகளை யெல்லாம் ஒழித்துவிட்டு அவனும் அவன் மனைவியும் போய்க் காஸநாவில் வசித்தனர். அப்படிச் செய்வதால் ஸ்ரீ நாதர் லக்ஷ்மி தீர்த்தத்துக்கு ஸ்நானத்துக்கு வருங்காற் பிரயத்தன மின்றியே அவரைச் சேவிக்குஞ் சந்தர்ப்பம் கிடைக்கு மெனபது அவர்கள் எண்ணம். இதற்காகவே தங்கள் சொந்த இடத்தை விட்டுக் கோதாவரிக் கரையண்டை வந்து வசித்தனர்.

**ராண்யாமஹார் மனைவியும் அவனும் ஏகநாதர்க்கு விருந்திட உத்தேசித்தல்**

ஒரு நாள் அச் சண்டாளனுடைய மனைவி தன் பிராண நாதனைப் பார்த்து, "ஏகநாதர் உண்மையில் உலக முய்ய அவதரித்த பாண்டுரங்கரே யாயினும் என் மனத்தில் அவரை நம் வீட்டுக்குச் சாப்பிடக் கூப்பிட வேண்டுமென்ற எண்ணம் தோன்றி யிருக்கிறது.

நீர் போய் ஸ்வாமியை அழைப்பீராயின், நான் இங்கு எல்லாம் தயார் செய்வேன்'' என்றாள். ராண்யா மஹார் கேட்டு "ஆகட்டும்'' என்றான். ஏகநாதர் தனியாயிருப்பதைக் கண்டு ராண்யா தன் மனத்தி லுள்ளதை வெளியிட்டான். "என் மனைவி ஸ்வாமிக்கு ஒரு விருந்து செய்ய வேண்டுமென் றெண்ணி யிருக் கிறாள். தங்களுடைய உத்தரவு கிடைக்குமாயின் வீட்டில் வேண்டிய ஆயத்தங்கள் செய்வேன்''என்றான். அவனுடைய அன்பை யறிந்து ஏகநாதர் தடை சொல்லவில்லை; "ஜநார்த்தனர் அருளால் உம் எண் ணம் நடேறும்'' என்றார். இவ்வுறுதி மொழிகளைக் கேட்ட ராண்யா மன நிம்மதியடைந்தான். தன் மனைவி யிடத்தில் ஸ்ரீ ஏகநாதர் சம்மதித்ததைத் தெரிவித் தான். அவர்கள் ஏழைகளாயினும் விருந்துக்கு வேண் டிய சாமான்களைச் சேகரித்தனர். வாயிற்படி யரு கில் துளசி மாடத்தை வைத்தனர். ஆடைகளைத் துவைத்தனர். பாத்திரங்களைத் துலக்கினர். இரு வரும் கிரமமாக நித்திய ஸ்நானஞ் செய்தனர். பகவந் நாமத்தை எப்போதும் உச்சரித்தனர். கோதுமை மா, பருப்பு, அரிசி, நெய், காய்கறிகள் சேர்த்து வைத்தனர். ஏகாதசி நாள்களிற் பட்டினி யிருந்து ஏகநாதர் கீர்த்தனங்களைக் கிரமமாகக் கேட்டு வந்தனர். இரவெல்லாம் ஹரிகீர்த்தனம் நடந்தபோது அவர்கள் தங்காலத்தைக் கீர்த்தனங் கேட்டலிலேயே போக்கினர்; பொழுது விடிகிற சமயத்தில் தான் வீட்டுக்குத் திரும்பினர்.

சண்டாளனுடைய மனைவி மிகுந்த பக்தியும் சீலமுமுடையவள். அவள் தன் பிராண நாதனைப்

பார்த்து, "இப்பொழுது ஸ்வாமியை விருந்துக்கு அழைப்போம். நான் இங்குச் சமைக்கிறேன். நீர் விரைந்து சென்று கோதாவரிக் கரையில் அவர் வருகையை நோக்கி உட்காந்திரும். ஸ்வாமி ஸ்நானத்துக்கு வரும்பொழுது அவர் தனியே யிருக்கிற சமயம் பார்த்து மிக்க பணிவோடு அவரைப் போஜனத்துக்கு அழையும்" என்றாள். ராண்யாவும் அப்படியே யென்று உடனே போய்க் கோதாவரிக் கரையில் உட்காந்தான். ஸ்ரீ நாதரும் சீக்கிரமாக வந்தார். ராண்யா அவரைப் பணிவோடு நமஸ்கரித்தான். ஏகநாதரும் அவன் நமஸ்காரத்தை ஏற்றார். அவர் உட்காந்த ஒருநிமிஷத்திற்கெல்லாம் சண்டாளன் அவரை நோக்கி, "அடியேனுக்கு ஓராசை - ஆனால் நான் சண்டாளன். எனக்குத் தங்களையழைத்தற்கு அதிகாரம் கிடையாது. நான் பயங்குகிறேன. ஆயினும் - தாங்கள் வந்து என் வீட்டிற் போஜனஞ் செய்வீர்களா ?" என்று சொல்லி அவர் காலில் விழுந்தான். இவ் வார்த்தை கேட்ட ஸ்ரீ நாதர் "நீர் ஒரு வைணவ பக்தர். ஸ்ரீ கிருஷ்ணன் உம்முடைய பக்தியைக் கண்டு மகிழ்ந்தார். ஒரு பிராமணன் வேத சாஸ்திரங்களைச் சம்பூர்ணமாக அறிந்திருப்பினும் ஸ்ரீ ஹரியிடம் பக்தி யில்லா திருக்கலாம். ஒருவன் சண்டாளனாயினும் அவன் பகவானுக்குப் பிரியனா யிருக்கலாம்" என்று சொல்லி மஹாபாகவதத்திலிருந்து ஒரு சம்ஸ்கிருத சுலோகத்தைச் சொன்னார்: "நாயைத் தின்னும் சண்டாள னொருவன் தன் மனத்தையும், வாக்கையும், செயல்களையும், தன் உடைமையையும், தன் பிராணனையுங்கூடப் பகவானுக்கு அர்ப்பணஞ் செய்தவனாயின், பிராமணனுக்குரிய துவா

**ராண்யாமஹார் ஏகநாதனை அழைத்தல்**

தச குணங்களும் படைத்திருந்தும் பகவானுடைய பாதங்களைப் பணியாத பிராமண னொருவனைப் பார்க்கிலும் அவன் மிக வுயர்ந்தவன். முன்னவன் தன் குடும்பத்தை யெல்லாம் புனிதமாக்குகின்றான், கர்வமே விட்ட பின்னவன் அவ்வாறு செய்யான்.''

**பிராமணர் ஏகநாதர்க்குப் பிராயச்சித்தம் விதித்தல்**

ஏகநாதர் அச் சண்டாள னெதிரே இவ்வொரு சுலோகந்தான் சொன்னார். பக்கத்திற் சில பிராமணர் இருந்தனர்; அவர்களுக்குக் கோபம் வந்துவிட்டது. எல்லாப் பிராமணரும் ஏகநாதரை வளைந்துகொண்டு பெருங் கூச்ச லிட்டனர். பிராமணோத்தமர் ஏகநாதரை நோக்கி, "அந்தச் சுலோகம் பாகவதத்தி லுள்ள தன்று, வேதத்தி லுள்ளது. இந்தச் சண்டாளனுக்கு அதிலிருந்து சுலோகத்தை ஏன் சொன்னீர்? சண்டாளனுக்குத் தத்துவ ஞானத்தில் அதிகார மில்லை. ஆதலால் நீர் தகுதியல்லாததைச் செய்தீர். உம்முடைய செய்கை கழுதைக்குச் சந்தனாதித் தைலம் பூசினாற் போலும்'' என்று சொல்லி, மேலும் சொல்வார்: "அந்தச் சுலோகத்தை இந்தச் சண்டாளனுக்குச் சொன்னதால் ஒரு பெரும் பாபம் உம் தலை மேற் சுமந்தது. இதற்கு நீர் பிராயச்சித்தஞ் செய்ய வேண்டும்.'' இவ் வார்த்தைகளைக் கேட்ட ஏகநாதர் அஞ்சலிஹஸ்தராய் அவர்களை நமஸ்கரித்துச் சமாதானமாய், "ராண்யா மஹார் ஒரு வைணவ பக்தர். அவர் ஸ்ரீ ஹரி வழிபாட்டில் ஈடுபட்டவர். அரிஷட் வர்க்கங்களையும் வென்றவர். ஆதலால் அவரைச் சண்டாள னென்றல் தகுதியன்று. அவர்க்குத் தத்துவ ஞானத்தில் அதிகார முண் டென்பதே

என்னுடைய தீர்மானம். பக்தியினால் அவர் ஸ்ரீ ஹரி ரூபமாகிய பரப்பிரமத்தைத் தமக்குட்படுத்தி யிருக்கிறார். அவருடைய ஆவலைக் கண்டு ஒரு சிறு வரி மாத்திரமே சொன்னேன். நான் செய்த பிழையைப் பொறுத்தருளுமாறு உங்கள் கனங்களை வேண்டுகிறேன்'' என்று சொல்லி அவர்களுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தார். இதன்மேற் பிராமணர் "நீ பெரிய போக்கிரி, திமிர் பிடித்தவன். கேட்க அதிகார மில்லாத ஒருவனுக்குப் பிரசங்கித்து நெறி பிழைத்தாய். உன் குற்றந் தீர்தற்குப் பிராயச்சித்தஞ் செய்ய மறுப்பாயாயின் உன்னைப் பிரஷ்டஞ் செய்வோம்'' என்றனர். பரப்பிரம ஸ்வரூபராகிய ஏகநாதர் ஒன்றும் மறுத்துரைக்கவில்லை. பிராமணர் சொன்னதை ஒப்பி, "பிராயச்சித்தத்தை விதியுங்கள்'' என்று சொல்லி, அவர் நதியில் ஓர் ஆழமான மடுவி லிறங்கி நின்றனர். பிராமணர் பசுவின் சாணமும் சாம்பலுங் கொண்டு வந்து அவர் பொருட்டு ஒரு மந்திரம் உச்சரித்தனர். சண்டாளன் இதையெல்லாம் பார்த்து மவுனமாய்த் தன் வீட்டுக்குப் போயினான். அவன் மனைவி சமைத்துக்கொண் டிருந்தாள். அவசரமாய் "நீர் ஸ்ரீ நாதரை யழைத்தீரா?'' என்றாள். இதைக் கேட்ட சண்டாளன் "நமது மந்த பாக்கியம் என்னவென்று சொல்ல! ஏகநாதர் என்னிடம் பேசினாரென்று பிராமணரெல்லாரும் கோபங் கொண்டனர். அவரை நதியில் ஒரு மடுவில் நிற்க வைத்துப் பிராயச்சித்தம் செய்யச் சொல்கின்றனர். நாம் பூர்வ ஜன்மத்திற் செய்த புண்ணியம் சாது சேவை செய்வதற்குப் போதாது'' என்றான். மனைவி விம்மி, "நாம் பிராணனை விட்டாலென்ன?'' என்று சொல்லித் தரைமீது விழுந்து

புலம்பியழுது தரையெங்கும் கண்ணீரால் நனைத்தாள். அவளை இந் நிலையிற் பார்த்த அவள் கணவன் அவளைக் கைகாட்டித் தன்னிடம் அழைத்து, "ஏகநாதர் கருணைக் கடல். அவர் ஏழைகளை அவமானப்படுத்த மாட்டார். நான் மீண்டும் போய் அவரை அழைக்கிறேன். அவர் வர மறுப்பாராயின் நாம் ஜீவித்திருத்தலிற் பயனில்லை. அப்பொழுது நாமிருவரும் உயிர் துறக்கலாம்'' என்றனன். இந்த மனவுறுதியோடு அவன் கோதாவரிக் கரைக்கு விரைந்து சென்று ஏகநாதர் முன் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, "இன்று என் வீட்டுக்கு எழுந்தருளிப் போஜனஞ் செய்யவேண்டும்'' என்று இரந்தான்.

**சண்டாளனுக்கு ஏகநாதர் வாக்குக் கொடுத்தல்**

அவனுடைய அவாவை அவதார புருஷராகிய ஏகநாதர் கவனித்தார். அருகிற் பிராமணர் நின்றுகொண்டிருந்தும், "நான் வருவேன், சமையல் முடிந்ததும் உச்சிவேளைக்கு நான் வருவேன்'' என்றார். சண்டாளன் மனங் களித்தவனாய் வீட்டுக்குத் திரும்பினான். பிராமணர் முணுமுணுத்தனர்: "இவன் அநாசாரத்துக்கு வழிகோலுகிறான். இவனால் இப்பொழுது வர்ண சங்கரம் ஏற்படும். இவன் சண்டாளனுக்குச் சுலோகத்தைச் சொன்னானென்று பிராயச்சித்தம் விதித்தோம். இப்பொழுது இவன் சண்டாளன் அழைக்க அவன் வீட்டிற் போய்த் தின்னப் போகிறான். நாம் என்ன செய்ய இருக்கிறது!'' அப்புறம் பிராமணர் ரகசியமாய்க் கூட்டங் கூடி வேவுகாரர் வைத்து ஏகநாதரைச் சண்டாளன் வீட்டில் உண்ணுகையிற் பிடித்துவிட வேண்டுமென்று ஆலோ

சித்தனர். அவர்கள் பின் தெரிந்து கொள்வதற்காக ஏகநாதர் ரூபத்தை நன்றாகக் கவனித்தனர். சிலர் சந்துகளிலும் சிலர் வாயிலிலும் ஒருவரோடொருவர் பேசிக் கொண்டு வேறு காரியமாக நிற்பவர்போல நின்று கொண் டிருந்தனர். சிலர் கோதாவரிக் கரையில் கையில் ஜபமாலை கொண்டு மந்திரங்களை ஜபித்துக் கொண்டிருந்தனர். வேறு சிலர் சண்டாளன் வீட்டுக்குப் போய்க் கதவண்டை ஒளிந்துகொண் டிருந்தனர். இந்தப் பிரகாரமாகத் தங்கள் வழக்கமான வேலைகளை விட்டு வேவு பார்த்தலில் இறங்கினர். அவர்கள் ஏகநாதர் விஷ்ணுபெருமானின் அவதார மென்பதை உணர்ந்தா ரில்லை. "ஏகநாதர்க்கு ஜாடைகூடக் காட்டப்படாது. சண்டாளன் அவரை அழைக்க வருவான். அப்பொழுது ஏகநாதரை அவன் வீட்டிற் சாப்பிடு கையிலேயே பிடித்துக் கொள்ளலாம்" என்று ஒருவரோ டொருவர் சொல்லிக்கொண்டனர்.

**பாண்டுரங்கர் ஏகநாதராகி விருந்துண்ணல்**

ஏகநாதரோ பூஜை முடிந்த பிறகு வீட்டிற் புராணம் வாசித்தார். சூரியன் உச்சிக்கு வந்தனன். இதற்கிடையில் உத்தவர் பிராமணரையும் ஆதுலரையும் உபசரித்துக்கொண் டிருந்தார். அவர்களுக்குத் தீர்த்தமும் கந்தங்களும் சமர்ப்பித்து விருந்திட ஆரம்பித்தார். சண்டாளன் வீட்டிலோ சமையல் முடிந்துவிட்டதால் அவன் மனைவி "சீக்கிரம் போய் ஏகநாதரை அழைத்து வருக" எனத் தன் கணவனை ஏவினாள். இந்த உண்மை வைணவனாகிய யோகப் பிரஷ்டன் தரையை மெழுகி வீடெங்கும் சுத்தம் செய்து தன்கையாலேயே தரையில் அழகாகக் கோல

யிட் டிருந்தான். பூசைக்காகக் கந்தங்களும், அரிசியும், பூமாலை யாதிகளும் தயாரித்து வைத்து சந்தோஷ நிறைந்த உள்ளத்தோடு எதிர் பார்த்துக்கொண்டிருந் தான். அவன் ஏகநாதர் வீட்டுக்கு வந்து, "ஸ்வாமி அடியேனோடு இப்பொழுது போஜனத்துக்கு எழுந் தருளலாமா?" என்றிரந்தான். ஏகநாதர் "நீ போய்க் கொண்டிரு, இதோ வந்துவிட்டேன்" என்றார். இதைக் கேட்ட பிராமணர் ஒருவர்க் கொருவர் கண் ஜாடை செய்து கொண்டனர். பாண்டுரங்க பகவானே ஏக நாதர் வடிவமெடுத்துச் சண்டாளன் வீட்டில் அவன் அதிசயிக்கத் தோன்றினர். அவனும் தன் மனைவி யைப் பார்த்து, "ஸ்ரீநாதர் நம் வீட்டுக்கு வந்துவிட் டார்" என்றான். அவள் உள்ளம் பூரித்து அவர்க்கு நமஸ்காரம் செய்தாள். சாகும் தருணத்தி லிருந்த ஒருவன் அமிர்த மருந்தினாற்போல அவள் களித்தாள். அவர்க்குப் பீடமிட்டு அன்பாக அவர் காலைக் கழுவி னாள். அப்புறம் சந்தனம் பூசி, அவர் கழுத்தில் துளசிமாலை யிட்டாள். அவர் நெற்றியில் திலகமிட்டுக் கந்தப்பொடி தேய்த்தாள். இவற்றை யெல்லாம் வேவு காரராக உட்காந்திருந்த பிராமணர் தெளிவாகப் பார்த் தனர். அவருட் சிலர் அங்கேயே உட்காந்திருந்தனர். மற்றவர்கள் ஏகநாதர் வீட்டுக்கு ஓடினர். தெருவில் நின்றுகொண் டிருந்தவர்கள், "எந்தத் தெருவால் வந்து நம் கண்ணிற் படாது தப்பினான்?" என் றதி சயித்தனர். ஒரு பிராமணன் "அவன் மாறுவேஷம் பூண்டு திருடன் மாதிரி நடந்துவந்து நம் கண்ணுக் குத் தப்பினான்" என்றான். மற்றொருவன் "அவன் நம் கண்ணிற் பொடி தூவிவிட்டான். விடியற் காலை முதல் தெருவை மறித்துக்கொண்டு இங்கேதானே

உட்காந்துகொண் டிருக்கிறோம்" என்றான். மஹார் வீட்டி லிருந்தவர்கள் ஏகநாதர் வீட்டுக்கோடி அங்கே அவர் கையில் ஜபமாலையோடு தம் பீடத்திலிருக்கக் கண்டனர். இந்த விபரீதத்தைக் கண்டதும் அவர்கள் ஆச்சரியமடைந்து அவ் வீட்டிலிருந்தவர்களுக்குத் தங்கள் கதையைச் சொல்லினர்: "இந்த ஆசாரங் கெட்டவன் செய்யும் செய்கைகள் ஆச்சரியமா யிருக்கின்றன. இங்கிருக்கிறான், அங்கிருக்கிறான், இரண்டிடத்திலும் இருக்கிறான்." அப்புறம் அவர்கள் எல்லாரும் பார்த்தற்காக மஹார் வீட்டுக்கு விழுந்தடித் தோடினர். அங்கு ஏகநாதர் பீடத்தி லமர்ந்திருந்தார். அவர்முன் பூஜா திரவியங்கள் ஸம்ருத்தியாக வைக்கப்பட்டிருந்தன. பிராமணர் மீண்டும் ஓடினர் திரும்பினர். இரண்டிடத்திலும் அவர் இருக்கக் கண்டார். ஆகாசத்தின் நீலமும் ஆகாசமும், பூவும் அதிலுள்ள தேனும் ஒன்றுதல் போலவே ஏகநாதரும் மணிதவுருக் கொண்ட பாண்டுரங்கரும் ஒரே வடிவினராயிருந்தனர். உலகமுய்ய ஏகநாதர் சகுண அவதாரமாயினு ரென்பது தெரிந்து கொள்ளாமல் பிராமணர் மனங்கலங்கி மாழாந்தனர். அதனால் அவர்கள் "ஒரே சமயத்தில் அவர் இங்கு மஙகும் இரண்டிடத்தும் காணப்படுதலெப்படி?" என்று ஆச்சரியப் பட்டனர். மூன்றும் யாமம் வரை அவர்கள் வீணுக அங்கும் இங்கும் ஓடி மீண்டு அலுத்தனர். இரு வடிவங்களுக்கும் சிறிது பேதம் கூடக் காண முடியாமல் திகைத்தனர். சண்டாளன் ஏகநாதரைப் பூஜித்து அவர் முன் உணவு வகைகளைப் பாத்திரங்களில் வைத்தான். அவன் மனைவி பகவான் ஜநார்த்தனரே உணவைக் கொள்ளுகிறார் என்று பாவித்து அன்போடு எல்லாவகை யுணவையும் பரி

மாறினாள். ஏகநாதர் ஆபோசனம் பண்ணினார். பக்திக்கு அலைந்திருக்கும் ஸ்ரீ ஹரி பூர்ண திருப்தியடைந்தார். அவர்க்கு எது ருசியா யிருந்ததோ அதைக் கேட்டுவாங்கி யுண்டார். இந்த விதமாக உணவு ஆன பின் அவள் அவர்க்குக் கைகழுவுதற்கு நீர் கொடுத்துத் தன்கையாலேயே தாம்பூலம் மடித்துக் கொடுத்தாள். இப்படிச் செய்வதில் அவளுக்கு மிகுந்த மனத் திருப்தி யுண்டாயிருந்தது. தம்பதிகள் அப்புறம் ஏக நாதரைப் பிரதக்ஷிணம்செய்து சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, "நீர் எங்கள் அபீஷ்டத்தைப் பூர்த்தி பண்ணினீர். லோககுருவே, மஹாபலரே, நீர் நீடூழி வாழ்க. நாங்கள் பக்தி சிரத்தையின்றிப் புத்தியின்றிக் குலமின்றிக் கிடந்தோம். எங்கள் அபீஷ்டத்தைப் பூர்த்தி செய்து இந்த ஜன்மத்தில் எங்களைப் புனிதராக்கினீர்" என்றனர். ஸ்ரீநாதர் அவர்களுக்கு அன்பு வார்த்தை சொல்லித் திடீரென்று மறைந்தார். கணவனும் மனைவியும் அவர் பரிகல சேடத்தை அவரருட் பிரசாதமாக வுண்டனர். பிராமணர் பிரமித்தவர்களாய்க் கோதாவரிக் கரைக்குப்போய் ஸ்நானஞ் செய்து பின் ஏகநாதர் வீட்டுக்குச் சென்று அவரைக் கவனித்தனர். சண்டாளன் வீட்டில் இந்தக் காரியங்கள் நடந்தபொழுது ஏகநாதரும் உத்தவரோடு தம் வீட்டிற் போஜனஞ் செய்துகொண் டிருந்தார். பிராமணர் "இந்தப் பாவியாழத்தை அறியக் கூடவில்லை. நாம் வீணாக அங்குமிங்கு மோடி யிளைத்தோம். இரண்டிடத்தும் அவன் ஒரே வண்ணமாக இருக்கிறான்" என்றனர். துரெண்ணமுடைய ஒருவன் "மந்திரங்கள் கற்றுப் பேய்களுக் கரசனுடைய அருள்பெற்றிருக்கிறான். அவன் துணை கொண்டு இந்த அற்புதம் தோன்றும்படி செய்தான்" என்றான். பின் பிராமணர் தத்தம் வீடு திரும்பினர்.

## எட்டாம் அத்தியாயம்

**பரிசமணி பெற்ற பிராமணன்**

பிரதிஷ்டானத்தில் ஒரு பிராமண னிருந்தான். அவன் பரமபக்தன். அவன் காலை மாலைகளில் தவறாது சந்திகள் செய்வான், புண்ணியச் செயல்கள் அநேகம் புரிவான். பூர்வ ஜன்ம அதிர்ஷ்ட வசத்தால் அவனுக்குப் பரிசமணியொன்று அகப்பட்டது. அதனால் அவனுக்கு மனச் சாந்தியும், எல்லா வித தனங்களும் கிடைத்தன. உலகத்தில் ஒருவரையும் அவனுக்கு நிகராகச் சொல்லப்படாது. அவனைப் பார்த்த ஜனங்கள் மனத்தில் நல்லெண்ணங்கள் கிளைத்தன. இவ்வாறு பல நாட்செல்லத் திடீரென்று அவன் புத்திரனும் மனைவியும் மரித்தனர். அவன் இதனால் மன முடைந்து தேற்றரவு காணு னாயினான். ஆகாரத்துக்கு வழி யில்லாத குடும்பத்திற் பிள்ளைகளுக்குக் குறைவு கிடையாது. பிள்ளை வேண்டுமென்று அருந் தவம் புரியு மிடத்தில் நோயாளிக் குழந்தை பிறக்கிறது. அவலக்ஷணமான புருஷனுக்குச் சுந்தரவதியான மனைவி யமைகிறாள். உத்தம குண முடைய வாலிபனுக்கு மனைவி யிறக்கிறாள். ஒருவனுக்குப் பிள்ளைகளும், மனைவியும், தனமும் குறைவின்றி யிருக்கவும் அவன் உடலில் அருவருப்பை விளைக்கும் அசாத்திய ரோகம் மேலிடுகிறது. தயாள மனமுடையவர்களுக்குத் தனம் வாய்ப்பதில்லை. பணமுடையவர்கள் லோபிகளா யிருக்கின்றனர். அழகான சரீர மமைந்திருப்பவன் அற்பாயு ளுடையவ னாகிறான். தருமசீலனான அரசன் சிறிது நாளே வாழ்ந்திருக்கிறான். தானம் கொடுக்க ஆசைப்படுபவன் சற்பாத்

திரத்தைக் காண்பதில்லை. இது லோகானுபவமென் பதை எல்லாரும் அறிவர். இவ்விதமாகவே ஊழாற் பரிசமணியை யடைந்தவன் பெண்டும் புத்திரனு மிழந்து தவித்தான். சம்சார வாழ்க்கை எப்படி மனிதரை வஞ்சிக்கிறதென் றுணர்ந்து அவன் தீர்த்த யாத்திரை செய்ய நினைத்தான். 'சரி, இந்தப் பரிச மணியை யாரிடத்தில் ஒப்படைப்பேன்? நம்பத் தக்க வர் யாருமில்லையே!" என்று எண்ணினன். அப்புறம் ஏகநாதர் வீட்டுக்குப் போனன். அவர் தனியே யிருக்கும் சமயம் பார்த்து அவருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து, "நான் தீர்த்த யாத்திரை போக எண்ணி யிருக்கிறேன். என்னிடத்தி லிருக்கும் இந்த விலையிலா வஸ்துவை யாரிடத்தில் வைக்கலாம் என்று யோசனை பண்ணினேன். நீர் உண்மைப் பக்தர், பெரிய துறவி, நீர் ஒருவரே எனக்கு யோக்கியராகத் தென் படுகிறீர்" என்றான். ஏகநாதர் அதனைக் கேட்டு, "உனக்கு நம்பிக்கை எங்கிருக்கிறதோ அங்குத்தான் உன் பொருளை வைக்க வேண்டும்" என்றார். இந்த வார்த்தையைக் கேட்டு அவன் பரிசமணியை ஏகநாதர் கையில் வைத்தான். அதனைப் பார்த்த ஏகநாதர் ஆச்ச ரியப்பட்டு, "இஃதென்ன கல்தானே, இதை விலை யிலாப் பொருள் என்று எப்படிச் சொல்லுகிறாய்? இதில் என்ன குண மிருக்கிறது? சீக்கிரம் சொல்" என்றார். அவன் ஓர் இரும்புத் துண்டைக் கையி லெடுத்து அதை அக் கல்லில் வைத்தான். அஃது அப்பொழுதே பொன்னாக மாறியது. "இது பரிசமணி. நான் தீர்த்த யாத்திரை முடித்து மீண்ட பிறகு இதை எனக்குக் கொடுத்துவிடும். கருடக்கொடியோன் அருள் உமக் குண்டு. இதனால் உமக்கொரு வித உபயோகமு

மில்லை'' என்றான். ஸ்ரீ நாதர் அதனைத் தம் பீடத்தின் கீழ்க் தள்ளினர். அவனும் நமஸ்காரஞ் செய்து விட்டுத் தீர்த்த யாத்திரை புறப்பட்டான். அந்த விலையிலாப் பொருளை ஜாக்கிரதையாகக் காக்க வேண்டுமென்பதை ஏகநாதர் மறந்துவிட்டார். அமிர் தத்தை யடைந்தவன் ஒஷதியைக் கவனிப்பானோ! ஆத்மானுபவமடைந்த ஏகநாதர்க்குப் பொன்னும் பசுவின் சாணமு மொன்றே. ஆதலால் அவர் பரிச மணியைப் பத்திரம் பண்ண மறந்தார்.

**ஏகநாதர் பரிசமணியை ஆற்றிலிருந் தெடுத்தல்**

ஒரு வருஷம் சென்றது. தீர்த்த யாத்திரை போனவன் திரும்ப வந்தான். வந்த வுடனே அவன் ஸ்ரீ நாதரை நமஸ் கரித்து அவரைத் தழுவிக்கொண் டான். அவன் யாத்திரையின் விசே ஷங்களையெல்லாம் ஏகநாதர் விவரமாக வினவினார். அவன் 'நான் கேளாமலே அவர் பரிச மணியைத் திரும்பக் கொடுத்துவிடுவார்' என் றெண் ணினான். இந்த எண்ணத்தோடு பிராமணோத்தமன் நான்கு நாழிகை நேரம் சும்மா உட்கார்ந்திருந்தான். ஸ்ரீ நாதருக்கு அந்த நினைவு கொஞ்சங்கூட இல்லை ; அவன் 'இன்றுதானே சந்தித்தோம். அதனாலேயே அவர் அந்த வார்த்தையை எடாம லிருக்கிறார். நாளை வந்து பார்த்துக்கொள்கிறேன்' என்று தன்னுட் சொல் லிக்கொண்டு வீட்டுக்குப் போனான். அவனுக்கு மன நிம்மதியில்லை. 'இது நல்லபடி முடிவதாய்த் தோன்ற வில்லை. அவர் உலக வாசை யபிமானங்க ளில்லாதவ ரென்றே வஸ்துவை அவரிடம் கொடுத்தேன். எனக் குரிய பொருளை தன்னிடம் திரும்பக் கொடுப்பதற்கு

ஏன் தயங்குகிறார்?' என்பது போன்ற எண்ணங்களை எண்ணிக்கொண்டு இரவு முழுதும் மனம் வருந்தினான். சூரியன் உதிக்கிற சமயத்தில் காலை ஸ்நானத்தை முடித்தான். ஸ்ரீ நாதர் பூஜை செய்துகொண் டிருந்த பொழுது அவன் வந்து அவரை வணங்கி, அவர் தீர்த்த யாத்திரையைப் பற்றிக் கேட்க மீண்டும் ஆதியோடந்தமாகச் சொன்னான். ஏகநாதர் அக்கல்லைத் திரும்பக் கொடுத்தலைப் பற்றிப் பிரஸ்தாபிக்கவே யில்லை. கடைசியாக அவன் தைரியமாய் அந்த விஷயத்தை ஏகநாதருக்கு நினைப்பூட்டினான். அப்பொழுது அது ஸ்ரீ நாதர் ஞாபகத்துக்கு வர, அவர் "ஆம், அதை எங்கே வைத்தேன்?" என்றார். "நீர் பீடத்தின் கீழ்த் தள்ளினீர்" என்று தன் கையாற் சுட்டிக் காட்டினான். இருவருமாகத் தேடினர். அந்தக் கல் அகப்பட வில்லை. பதினைந்து நாளுக் கொரு விசை புஷ்பங்களை யெல்லாந் திரட்டித் துவாதசி யன்று வெளியிற் கொண்டு கொட்டல் வழக்கம். "பழம் பூக்களோடு கல்லும் போயிருக்கும்" என்றார் ஏகநாதர். இவ் வார்த்தையைக் கேட்ட பிராமணன் மார்பு படபடவென் றடித்தது. அவன் "அக் கல்லைத் திரும்பப் பெறலா மென்னும் ஆசையினாலேயே நான் வீட்டுக்குத் திரும்பினேன். எனக்குப் பிள்ளையு மில்லை, மனைவியுமில்லை. என் மனம் பெரிதும் வருந்துகின்றது" என்றான். ஸ்ரீ நாதர் "வா, சீக்கிரம் போய் அஃது ஆற்றில் எறியப்பட்டுக் கிடக்கிறதோ பார்க்கலாம்" என்று கோதாவரிக்கு அவனோடு புறப்பட்டார். போகும் வழியில் "வாடின பூக்களைக் கோதாவரியில்தான் எறிந்தார்கள்" என்று சொல்லி அவனுக்குச் சமாதானம் சொன்னார். ஏகநாதர் ஜலத்துட் போய் ஏழெட்டுக் கூழாங் கற்களை

எடுத்து, "இவற்றில் உன் கல்லைப் பார்த்தெடு" என்றார். அவன் தன் சட்டையிலிருந்த துண்டிரும்பை எடுத்துக் கல்லில் வைத்துப் பார்த்தான். என்ன ஆச்சரியம், ஒவ்வொரு கூழாங்கல்லும் பரிசமணியா யிருந்தது. எல்லாவற்றையும் வைத்துக் கொள்ளலா மென்று ஆசைதான்; ஸ்ரீநாதர் "இவற்றுள் ஒன்றை உனதாகத் தெரிந்து எடுத்துக்கொள்; மற்றவைகளைக் கங்கைக்கு அர்ப்பணம் பண்ணுகிறேன். அவை அங்கு ஜாக்கிரதையாயிருக்கும்" என்றார். அவன் ஒரு கல்லைப் பொறுக்கிக் கொண்டான். மற்றவற்றை ஏகநாதர் கங்கையுட் சுழற்றி எறிந்தார். அப்புறம் ஏகநாதர் ஸ்நானஞ்செய்து வீட்டுக்குத் திரும்பினார்.

**ஏகநாதர் நித்ய சரியை**

ஏகநாதர் தினந்தோறும் அதிகாலையி லெழுந்து காலைக் கடன்களை முடித்துக் கோதாவரிக்குச் சென்று ஸ்நானஞ் செய்து சூரிய நமஸ்காரம் பண்ணுவார். இக்கிரமக் கடன்களை முடித்துப் பாண்டுரங்க விக்கிரகத்துக்குப் பூஜை பண்ணித் தூபதீபங் காட்டி இனிய புகழ்ப் பாட்டுக்கள் பாடுவார். இதன் பிறகு புராண படனம். அது முடிந்த பிறகு மீண்டும் கோதாவரிக்குப் போய்ப் பிதிரர்களுக்குத் தர்ப்பணஞ் செய்வார். வீட்டிற் பிராமணரை ஆராதிப்பதில் அவர்க்கு அளவு கடந்த பக்தி. பிராமணர்க்கு விருந்து செய்தபின் தாம் அற்ப உணவு கொள்வார். நான்காம் யாமத்தில் மீண்டும் பாகவதம் ஸ்ரீதர பாஷ்யம் வாசிப்பார். சூரியாஸ்தமன சமயத்தில் அவர் சாயசந்தி பண்ணுதற்கு மீண்டும் கோதாவரிக்குப் போவார். இரவில கீர்த்தனம் நடக்கும்; பக்த ஜனங்கள் ஆபாலகோபம்

கூட்டமாகக் கூடிச் சிரத்தையோடு கேட்டுக் கொண்டிருப்பர். ஏகநாதர் ஆனந்தத்தோடு ராம கிருஷ்ண லீலைகளைப்பற்றிப் பிரசங்கிப்பார்.

**பகவான் ஏகநாதர்க்குப் பணியாளாதல்**

இவையெல்லாம் ஜகந்நாதனுக்கு மிக்க ஆனந்தம் கொடுத்தன. ஏகநாதருடைய பணியைப் பார்த்து அவர் "ஏகநாதனுக்கு நான் எப்படிப் பிரதியுபகாரஞ் செய்யப் போகிறேன்" என்று தம்முட் சொல்லிக் கொண்டார். கிருஷ்ணனுக்கு ஏகநாதரிடத்திற் பரம பிரியம். ஆதலால், அவர் பிராமண ரூப மெடுத்து உடனே துவாரகையி லிருந்து புறப்பட்டுப் பிரதிஷ்டானத்துக்கு வந்து கோதாவரியில் ஸ்நானஞ் செய்து ஏகா ஜநார்த்தனர் வாயிலிற்போய் நின்றார். அங்கு வணக்கமாக நமஸ்காரஞ் செய்து, "உமக்குத் தொண்டு செய்யும் நோக்கத்தோடேயே வந்தேன். உம்மிடத்தில் விஷ்ணு வழிபாடும், பிராமண சேவையும், வைணவரிடத்திற் பக்தியும் சம்பூர்ணமா யிருத்தலைக் கண்டு உம்முடைய சங்கத்தை அவாவி வந்தேன். என்னுயுள் நாளெல்லாம் ஸந்தர்களுக்கே அன்பார்ந்த தொண்டாற்றி யுள்ளேன். நீர் எனக்குச் சம்பளம் ஒன்றுங் கொடுக்க வேண்டுவதில்லை. எனக்கு வேண்டுவதெல்லாம் ஒரு கம்பிளியும், ஓராடையும், வயிற்றுக்குப் போதிய உணவும், உம்மை விட்டுப் பிரியாதிருத்தலுமே" என்றார் பகவான். திவ்ய மாயாவசத்தராய் ஏகநாதர் இந்நிலை கேளவரை யறிந்துகொள்ளக் கூடாமல், "உம் நகர் யாது? உமக்கு மனைவி யுற்றார் உண்டோ? உம்முடைய கோத்திரம் யாது? இந்த உம் சரீரத்தின் பெயர் யாது?" என்று

வினவினார். இக் கேள்விகளைக் கேட்ட ஜகந்நாதர் "நான் வெறுந் தனியன். எனக்குப் பெண்டுபிள்ளை யென்னும் பாசம் இல்லை. இந்த என் சரீரத்துக்குக் கிருஷ்ணன் என்று பெயர். நான் தேச மெங்குந் திரிபவன். நான் ருக்வேதிப் பிராமணன், என் மனம் கொண்டவிடமே என் மாளிகை" என்றார். இந்த வித மாக ருக்மிணிநாதர் பதிலுரைக்க, ஏகநாதர் "உம்மை எனக்குச் சேவை செய்யச் சொல்ல எனக்கு விருப்ப மில்லை. இங்கு ஆகாரமும் ஆடையும் பெற்றுப் பரம பதத்தைத் தேடும்" என்றார். இவ்வமுத மொழியினைக் கேட்ட பரானந்த நாதர் "உமைப்பினாற் கிடைத்த ஆகாரத்தை யருந்தி உம் வீட்டி லிருப்பேன். உம் முடைய கிருபையால் எனக்குச் சரீரத்தில் வேண்டிய பலமிருக்கிறது. நான் உட்கார்ந்து உண்பேனாயின் இந்த நசுவரமாகிய சரீரமே போஷிக்கப்படும். மற்ற வர்களுக்கு இதஞ் செய்தலே இந்த சரீரத்துக்கு உத் தம வுபயோகமாகும்" என்று சொல்லிக் கொண்டு, விரைந்து காவடியைத் தூக்கித் தோள் மீது வைத் துப் பாத்திரங்களிற் கோதாவரி ஜலத்தை நிறையக் கொண்டு வந்தார். பிரமாதி தேவர்கள் பூஜிப்பவரும், சிவன் முதலிய தேவர் புகழும் பாதங்களையுடைய வரும், ஜகஜ்ஜீவனுமாகிய பகவான் இந்த நாட கத்தில் ஒரு நடராய்ப் பிராமண வேட மெடுத் தார். பிராமணர்கள் உண்ட இலைகளில் எச்சிலைத் திரட் டினார். அவர்க்குத் தொண்டி லிருந்த விருப்பந்தான் என்னே? யார் பொருட்டு யோகாஷ்டாங்கங்களையும் சம்பாதிப்பதில் யோகி தன்னை யுலர்த்தி வருத்து கிறானோ அவர் அதிகாலையி லெழுந்து பூஜா பாத் திரங்களைத் துலக்கி வைப்பார்; ஸ்நானஞ் செய்து

பூஜைக்காகப் பாத்திரங்களில் நல்ல ஜலம் கொண்டு வருவார்; சந்தன மரைத்துக் கந்தங்கள் தயார் பண்ணி வைப்பார்; பூமாலை தொடுத்துப் பூஜைக்காக வைப்பார், தீபங்களைக் கூச்சமில்லாமல் ஏற்றிவைப்பார். ஏகநாதர் 'கிருஷ்ண' என்று கூப்பிடு முன்னமே எதிரே வந்து நிற்பார். சந்தன மரைத்து வைத்ததால் அவரைப் பிராமணர் 'ஸ்ரீகண்டியா' என்றழைத்தார்கள். நகரத்து ஜனங்க ளெல்லாம் அவரைக் கண்டு அதிசயித்தனர். "ஏகநாதர் வீட்டில் ஒரு பிராமணன் வேலை செய்கிறான். அவன் சம்பளம் வாங்குவதில்லை. ஆயினும் வேலையில் எவ்வளவு ஊக்கம்!" என்றனர். ஏகநாதருக்குத் தெரியாமலே துவாரகா நாதர் சமையலறைக்குச் சென்று அவர் பத்தினிக்கு வேண்டிய வேலைகளைச் செய்து கொடுப்பார். ஸ்ரீகிருஷ்ணர் ஏகநாதர் பக்தியைக் கண்டு அவ்வளவு உன்மத்த மடைந்திருந்தார். தம்முடைய பெருமையை முற்றும் மறந்து கருணைக்கடலாகிய பகவான் எப்பொழுதும் ஏகநாதர்க்குப் பணிசெய்யத் தயாராயிருந்தார். இந்த விதமாக ஜகந்நாதர் அங்குப் பன்னிரண்டாண்டு கழித்தார். திடீரென்று ஒரு சம்பவம் நிகழ்ந்தது.

**துவாரகைப் பிராமணன் பகவானைத் தேடி வருதல்**

துவாரகையில் தன் அனுஷ்டானாதிகளை அன்போடு செய்து வந்த ஒரு பிராமணனிருந்தான். பகவான் தனக்குச் சாக்ஷாத்காரமாக வேண்டுமென்று அவன் சதா பகவந் நாமங்களை ஜபித்துக்கொண் டிருந்தான். பன்னிரண்டு ஆண்டுகள் அவன் அவ்வாறு செய்தும் பகவான் சாக்ஷாத்காரமாகவில்லை. கடைசியில் ஒருநாள் அவன் அரும்பட்டினி கிடக்க, தாய் ருக்மிணி

அவன் கனவிற்றோன்றி, "நீ அரும்பட்டினிகிடந்தாய், கிருஷ்ணன் இங்கில்லையே. பிரதிஷ்டானத்தில் அபேத பக்தனொருவ னிருக்கிறான். வைகுண்ட நாதன் அங்குச் சென்று அவனுக்குப் பணிசெய்து கொண்டிருக்கிறார். சக்ரபாணி 'ஸ்ரீகண்டியா' என்னும் பெயரோடு காவடியில் அவனுக்கு ஜலங்கொண்டு வருகிறார், சந்தனம் அரைத்துக் கொடுக்கிறார், பிராமண ஸேவை செய்யத் தயாராயிருக்கிறார். ஆதலால் உடனே நீ பிரதிஷ்டானம் போவாயானால் அங்குப் பகவானைக் காண்பாய்" என்றாள். இந்தத் தரிசனங் கண்ட பிராமணன் விழித்தான். விஷயத்தை நன்கு ஆலோசனை பண்ணி, "ருக்மிணிதேவி பகவானைக் கண்டு பிடித்தற்கு அடையாளஞ் சொல்லி யிருக்கிறாளே" யென்று பிரதிஷ்டானத்துக்கு விரைந்துசென்று அங்குக் கோதாவரியில் ஸ்நானஞ் செய்தான். அந்தச் சமயம் ஸ்ரீகண்டியா காவடி தோள்மே லிட்டுக் கோதைக் கரைக்கு வந்தார். அவர் உடனே பிராமணனைத் தெரிந்துகொண்டு, 'இந்தக் கடன்காரன் ஏன் இங்கு வந்தான்! ஒரு நல்ல இடம் சம்பாதித்து ஆனந்தமாய்க் காலத்தைக் கழித்துக்கொண் டிருந்தேனே. ருக்மிணி தான் இதைப் பகிரங்கப் படுத்தி இவனை இங்கு அனுப்பினாள்' என்று தம்முட் சிந்தித்து மிகவும் மன முளைந்தார். ஆயினும் தோண்டிகளில் ஜலம் நிரப்பிக்கொண்டு வீட்டுக்குப் போனார். பூஜையறையிற் போய்ச் சந்தனமரைக்க உட்கார்ந்தார். அந்தப் பிராமணன் வழி விசாரித்துக்கொண்டு ஏகநாதர் வீட்டுக்கு வந்து விட்டான். ஸ்ரீநாதர் பிராமணனைப் பார்த்து நமஸ்காரஞ் செய்தார். இருவரும் ஒருவரை யொருவர் தழுவினர். ஏகநாதர் அவனுக்கு

ஆசனம் கொடுத்து, "எங்கே யிருந்து வந்தீர்? உம் காரிய மென்ன?" என்று கேட்டார். பிராமணன் நமஸ்காரம் செய்து தன் கதையை ஆதியோடந்தமாய்ச் சொல்லி, "உடனே நான் கிருஷ்ணனைப் பார்க்க வேண்டும்" என்று முடித்து, ஏகநாதர் காலில் விழுந்தான். ஸ்ரீநாதர் "பரமாணு வரை கிருஷ்ணன் எல்லாவற்றையும் வியாபித்திருக்கிறார். அவரில்லாத இடம் சொல்லும்" என்று கேட்டார். பிராமணன் "ஏகநாதரே, இந்த வேதாந்தம் எனக்கு வேண்டாம்; 'ஸ்ரீகண்டியா' என்னும் பிராமண ரூபமாயிருக்கும் கிருஷ்ணனைப் பார்க்க வேண்டும். உம்முடைய பக்திக்கு மகிழ்ந்து பகவான் உமக்குப் பணி செய்வது கடன் என்று பன்னிரண்டாண்டாக உழைத்து வருகிறார். பகவான் அருளுக்கு எல்லை யுண்டோ?" என்றான். பிராமணன் வசனத்தைக் கேட்டு ஏகநாதர் பிரமித்தவராய் உத்தவரோடு, "பிராமணக் கிருஷ்ணனைக் கூப்பிடு" என்றார். உத்தவர் கூப்பிட்ட சமயம் ஸ்ரீ ஹரி பூஜையறையி லிருந்தார். உடனே அவர் சதுர்ப்புஜங்களை யுடைய தம் ஸ்வரூப மெடுத்தார்; சங்கு சக்கரங்கள் காணப்பட்டன; அவர் அணிந்த கிரீடம் சூரியனும் நாணும்படி ஒளி செய்தது; நீல வர்ணமும் ஸௌந்தர்யமும் உடைய தேவராஜனைப் பார்த்தாலே பசி யடங்குமே. அவர் பூஜையறை வாயிலில் நின்றுகொண் டிருந்த கோலத்தைக் கண்ட பிராமணன் விரைந்து சென்று அவர் காலைப் பற்றிக்கொண்டு நமஸ்கரித்தான். ஏகநாதர் 'சேஷசாயிக்கு மெய் வருத்தத்துக்கு ஏதுவா யிருந்தேனே' என்று தம்மை நொந்து கொண்டார். பகவானைத் தழுவி, "ஸ்ரீ ஹரி, இது நீர் செய்தது நீதியா? நீராகவே

பிராமணனுகிச் சலியாது எனக்காக உழைத்தீரே. உம் பெருமையை நான்கு வேதங்கள் தாமும் சொல்ல முடியாமல் தளர்வெய்துமே. என்னிடம் என்ன பெருமை உளது?" என்று புகழ்ந்து ஏகநாதர் மீண்டும் மீண்டும் நமஸ்கரித்தலும், ருக்மிணி நாதர் "உன் மெய்ப்பக்தி வாழ்க. இதற்கு முன் ஒருதடவை விட்டல் ரூபங்கொண்டு பன்னிரண்டாண்டு உனக்குப் பக்கப் பாட்டுக்காரனு யிருந்தேன். அப்புறம் கேசவ வடிவோடு உன் வாயாற் பாகவத புராண முழுதும் கேட்டேன். இவ்விதமாக முன்னமே இருபத்துநான்கு ஆண்டுகள் உன்னிடம் உழைத்தேன். நீ அறியாய்" என்று சொல்ல, ஏகநாதர் "ஜகந்நாதா, ஸர்வ வியாபீ, பக்த பூஷணு" என்றார். இந்தக் கட்டத்தில் ஸ்ரீ ஹரி திடீரென்று மறைந்தார். பிராமணன் ஏகநாதர் காலைப் பற்றி, "உலக முழுதும் தேடினும் உம்மைவிடப் பாக்கியவான் எங்கிருக்கிறான்?" என்றான். ஏகநாதர் "கிருஷ்ணன் அவ்வளவு அருகில் இருந்தும் அவரை நான் அறியேனுயினேன். நீரே இன்று நான் அவரைத் தெரிதற்குக் காரணரா யிருந்தீர்" என்றார். அத் துறவி ஆனந்த மிக்கவனுய் ஏகநாதரோ டொண்டு ஹரி கீர்த்தனங்களைக் கேட்டுக்கொண்டு பலநாள் அங்குத் தங்கினன். ஸ்ரீ ஏகநாதர் உண்மையிற் கிருஷ்ணனே யென்று மனத்தில் உறுதியாக எண்ணினன்.

**திருட வந்தவர் திருந்தி யுய்தல்**

ஒருநாள் ஸ்ரீ ஏகநாதர் ஒரு கீர்த்தனஞ் செய்து கொண்டிருந்தபொழுது பக்தஜனங்கள் பலர் வந்து கேட்டிருந்தனர். புருஷரும் பெண்டிரும் பலர் கூடியிருந்ததனுல் வீடெங்கும் ஜனக்கூட்டமே நிறைந்திருந்தது. பகவந்

நாமோச்சாரணத்தால் ஆகாசம் நிறைந்தது. ஜயஜய சப்தம் செய்து பக்தர்கள் கைகொட்டினர். கிருஷ்ணா, அச்சுதா, புருஷோத்தமா, ரகுபதீ முதலிய பகவந் நாமங்களே அதிகமாகக் கேட்கப்பட்டன. ஏகநாதர் இந் நாமங்களைத் தம் கீர்த்தனத்தில் பக்தியோடு உச்சரித்துப் பரவசராகி முற்றிலும் மெய்ம்மறந் திருந்தார். இந்தக் கீர்த்தனம் நடந்த பொழுது நான்கு திருடர் புகுந்து, "ஜனங்கள் போன பிறகு நம் வேலையைப் பார்ப்போம்" என்று சொல் லிக்கொண்டு உட்கார்ந்தனர். இவர்களுடைய வஞ்சக நோக்கம் யாருக்கும் தெரியாது. கீர்த்தனம் முடியுஞ் சமயத்தில் திருடர் ஒளிந்து கொண்டனர். ஏகநாதர் ருக்மிணிநாதருக்கு ஆரதி யெடுத்துத் தூபதீபங் காட் டினர். வந்தவர்களுக்குப் பக்ஷ்யங்கள் வழங்கப் பட் டன. எல்லாரும் அவரவர் வீட்டுக் கேகினர். திருடர் ஒரு சுவர்க்குப் பின் ஒளிந்து சிறிது நேரம் சும்மா உட்கார்ந்திருந்தனர். உத்தவர் பெரிய வாயிற் கத வைப் பூட்டிவிட்டு உடனே படுத்துக்கொண்டனர். ஸ்ரீ நாதர் தம் ஆசனத்தில் கையில் ஜப மாலை யோடு உட்காந் திருந்தார். அவர்க்கு உறக்கமும் இல்லை, சோர்வுமில்லை; அவர் ஆனந்த மயமாயிருந் தார். உத்தவரும் கிரிஜாபாயும் உறங்கி விட்டனர். திருடர் உள்ளறையுட்சென்று அங்குள்ள பொருள் களைச் சோதித்தனர். இப்பொழுது பண்டரிநாதர் ஓர் அற்புதம் செய்தார். திருடர்களெல்லாம் குருட ராயினர்; முழுக் குருட ராயினர். வீட்டில் தீபங்க ளெரிந்து கொண் டிருந்தன, அவர்களுக் கொன்றுமே தெரியவில்லை. அவர்கள் ஒருவரோ டொருவர், "இப் பொழுது நாம் என்ன செய்யலாம்?" என்று மெல்லப்

பேசினர். கதவு இருக்கிற இடமாவது படிக ளிருக்கிற இடமாவது அவர்களுக்குத் தெரியவில்லை; தூண்களில் முட்டினார்கள். "இதுவெல்லாம் சகுனத்தடை. இதிற் பகவான் கோபம் தெரிகிறது" என்றனர். பச்சாத்தாப முடையவர்களாய் அவர்கள் ஒருவரோடொருவர், "ஏகநாதர் விஷ்ணு பக்தர். இங்குத் திருடவந்ததனால் இந்தத் துர்ப்பாக்கியம் நமக்கு வந்தது. கண்ணில்லாமற் பிராண னிருந் தென்ன பிரயோஜனம்? இப்பொழுதே பிராணனை விட்டுவிடலாம். இந்த விஷ்ணு பக்தருக்குத் தீங்கு செய்து ருக்மிணி நாதர்க்குக் கோபம் உண்டாக்கினோம்" என்று சொல்லினர். இவ்விதமாகப் பேசிக்கொண்டு திருடர்கள், வீடெங்கும் திரிபவர், திடீரென்று பூஜை யறையுள் ஏகநாதர் முன்போய் நின்றனர். அப்பொழுது ஓர் அற்புதம்; அவர்களுக்கு மறுபடியும் கண் தெரிந்தது. தாம் செய்ததற்கு மிகவும் மனம் நைந்து அவர்கள் ஏகநாதரை வணங்கினர்; அவர்முன் பக்தியோடு நின்று அவரைத் துதித்தனர். "துராத்மாக்களாகிய நாங்கள் நீர் பாண்டுரங்க மூர்த்தி யென்று அறியாமல் உமக்குத் தீங் கெண்ணி வந்தோம். நீர் ஸந்தராதலால் நாங்கள் செய்த குற்றத்தைப் பொறுத்தருளும்" என்றனர். ஏகநாதர் "நீங்கள் யாவர்? என்னை ஏன் புகழ்கின்றீர்கள்? உங்களுடைய மனத்தி லுள்ள அபேக்ஷை யென்ன? சொல்லுங்கள்" என்று கேட்டார். அவர்கள் "நாங்கள் திருடர், இங்குத் திருட வந்தோம். என்ன அகப்படுமென்று தேடிய சமயம் கண்களை யிழந்தோம். அதனாற் பைத்தியம் பிடித்தவர்கள் போலாகி வீடெங்கும் திரிந்தோம். இப்பொழுது நாங்கள் பெரும் பாபம் செய்தோ மென்று தெரிந்துகொண்டோம்"

என்றனர். திருடர் இவ்வாறு சொல்லச் சாந்த சமுத்திரமாகிய ஏகநாதர் இருதயம் இளகிற்று. அவர் "நீங்கள் மிக வருந்தினீர்கள். அதிக ஆசையோடு என் வீட்டுள் நுழைந்தீர்கள். மன வருத்தத்தோடு திரும்ப வேண்டாம்" என்று சொல்லி, அவர்களை யழைத்துக் கொண்டு தம் நிதியறையுள் நுழைந்து எல்லாவற்றையும் காட்டி, "உங்களுக்கு வேண்டியதை எடுத்துக்கொண்டு போங்கள். சாந்தமும் பொறுமையும் உங்களுக்கு உண்டாகுக. நற்செய்கைகள் செய்வதாலேயே உங்களுக்குக் குற்றங்கள் ஒழியும்" என்றனர். திருடர்கள் ஏகநாதருடைய சாந்தத்தைக் காணவும் அவர்கள் மனத்தில் அவர் சொற்கள் நன்கு பதிந்தன. அவர்கள் அவர் பொருளில் ஆசையை விட்டனர்; தங்கள் பசி தீர்தற்கு அன்னம் கொடுத்தாற் போதுமென்றனர். ஏகநாதர் உடனே உத்தவரையும், கிரிஜாபாயையும் எழுப்பி, "சீக்கிரம் போஜனம் தயார் செய்யுங்கள்" என்றார். அவர்களும் உடனே போஜனம் தயார் செய்தனர். ஏகநாதர் தம் கையாலேயே திருடர்க்கு அன்ன மிட்டு அவர்களைச் சாப்பிடச் செய்தனர். உலகத்தில் ஜனங்கள் மாப்பிள்ளைகளையும், சம்பந்திகளையும் உபசரித்தல் போல ஏகநாதர் திருடரை உபசரித்தனர். அவர் தாம்பூலச் சுருள் தம் கையாலேயே மடித்துக் கொடுத்தனர். அவர்களுக்கு உபசார வார்த்தைகள் சொல்லி வழிவிட்டனர். அந்நாள் முதல் திருடர் தங்கள் பழக்கத்தை யொழித்து ஹரி பூஜை செய்வதிற் சிரத்தை யுடைய ராயினர். இதனால் ஏகநாதருடைய மன நிலை புலப்படுகிறது. அவர் பிரபஞ்சத்தையே தாமாகப் பாவித்தார். அவருக்கு உறவும், பகையு

மமானமேற. அவர் செயல்களே விசித்திரம்; அவர் செய்தது போலச் செய்து அவர் பேசியது போலப் பேசுபவன் அவதார புருஷனே. அவனைப் பார்த்த மாத்திரையில் உயிர்கள் உய்யும். அவன் புகழைக் கேட்டாலே மஹா பாதகங்கள் ஒழிந்து மோக்ஷம் சித்திக்கும், பிறவிப் பிணி நீங்கும். ஏகநாதர் அவதரிக்கப் பெற்ற பிரதிஷ்டானம் என்ன பாக்கியம் செய்தது! அங்குள்ள ஜனங்கள் அவர் செயல்களைக் கண்ணாரக் கண்டனரே!

**சண்டாளக் கைதியை ஆதரித்தல்**

ஜீவனத்துக்காகத் திருடிக்கொண் டிருந்த ஒரு சண்டாள னிருந்தான். பல நாள் திருடி ஒரு நாள் அகப்பட்டான். வீட்டுக்காரன் அவனைப் பிடித்து நீதிஸ்தலத்தில் ஒப்புவித்தான். அங்குள்ளார் அவனைத் தாறுமாறாக அடித்து கால்களைத் தொழுவில் மாட்டினர்; தன்னிடத்திலிருந்த பணமெல்லாங் கொடுத்தும் அவனுக்கு மீட்சி கிடைக்கவில்லை. இப்படிப் பல நாள் செல்லக் கடைசியில் அவனுக்கு ஆகாரம் அகப்படுவதே அருமையாயிற்று. சரீரம் சுக்காய் உலர்ந்து போயிற்று. அவன் சில நாளிற் சாகக் கூடு மென்று தச்சனைக் கூப்பிட்டுத் தொழு வாணிகளைப் பிடுங்கச் சொல்லினர். அவனுக்கு ஓடுதற்குச் சக்தியில்லையாத லால் காவல் வைக்கப்படவில்லை. இராத்திரி யாயிற்று. சண்டாளன் நினைத்தான்: 'தொழு இப்படி உடைந்து கிடக்கும்பொழுது நான் ஓடிப் பிழைத்தல் நலம். ஆனால் எனக்கு அதற்குப் பல மில்லையே!' பின்னும் ஈசுவரன் ஞாபகம் வர, "கருணைக் கடலே, நான் அநாதன், மஹா பாபி. இங்குச் சிறையிற் பல நாட்

கிடந்தேன். கிருஷ்ணு, அடியேனுக் கிரங்கி இவ்விடத்தி லிருந்து என்னை வெளி யேற்றுவாய்'' என்று புலம்பினுன். அச் சமயம் தூரத்திற் கீர்த்தனம் நடக்கிற சப்தம் கேட்டது. அவன் உடனே நகர ஆரம்பித்தான்; ஆயினும், பிராண பய மிருந்தது. ஹரி கீர்த்தனம் கேட்ட திசையை நோக்கித் தள்ளாடித் தள்ளாடிச் சென்றுன். அதைக் கேட்டவன் திடீரென்று ஏகநாதர் வீட்டு வாயிற்கதவு திறந்திருத்தலைப் பார்த்தான். உள்ளே புகுந்து ஒரு மூலையிற் பேசாது உட்கார்ந்தான். கீர்த்தனத்தை உற்றுக் கேட்டவனுக்கு மனச் சாந்தி வந்தது. ஏகநாதர் வார்த்தைகளைக் கேட்ட ஜனங்களின் உயிரு முடலு முருகின. எல்லாரும் "பாக்கியம், பாக்கியம், இதுவே இளைத்தோர்க்கு இளைப்பாறிடம்'' என்றனர். இவ்வாறு இரண்டு யாமங்கள் கழிந்தன, ஆரதி எடுத்தற்குத் தீபங்கள் ஏற்றினர். பக்தர்கள் ஜய ஜய முழக்கஞ் செய்து ஏகநாதர்க்குக் கடைசி நமஸ்காரம் செய்தனர். அவர் நைவேத்தியம் விநியோகித்து முடிந்ததும் எல்லாரும் அவரவர் வீட்டுக்கு ஏகினர். சண்டாளன் இருந்ததைக் கவனியாது உத்தவர் வாயிற் கதவை மூடிவிட்டார். உண்மைச் சிஷ்யை யாகிய கிரிஜாபாயும் உறங்கி விட்டாள். ஏகநாதர் மாத்திரம் தம்முடைய ஆசனத்திலேயே யிருந்தார். சண்டாளன் இருந்த பக்கம் அவர் பார்வை சென்றது. சமீபத்திற் சென்று பார்த்தார்; பிணம் போன்ற ஒருவன் இருத்தலைக் கண்டார்; அவன் சரீரத்திற் பலம் சிறிது மில்லை. தயாளுவாகிய ஏகநாதர்க்கு மனமிரங்கியது; அவனை விசாரிக்க முயன்றுர். அவன் கையை வாயருகிற் கொண்டுபோவதைத் தவிர வேறு வார்த்தை சொல்ல

வில்லை; ஸ்ரீநாதர் தெரிந்து கொண்டார். "இவன் பசியால் வருந்துகிறான்" என்று சொல்லிக் கொண்டு வீட்டிற் சென்று கிரிஜாபாயை எழுப்பினார். கிரிஜாபாய் தலைவணங்கி, "என்னாலாவ துண்டோ?" என்றாள். ஏகநாதர் "பசியாலும் நோயாலும் மெலிந்த ஒருவன் முற்றத்தில் உட்கார்ந்திருக்கிறான். அவனுக்குத் தக்கதாய் ஒரு நிமிஷத்தில் தயார் செய்யக் கூடியதை உடனே செய்துகொடு" என்றார். அவ்வளவு தான் உடனே கிரிஜாபாய் அடுப்பு மூட்டிக் கோதுமை மாவைப் பாகஞ் செய்து சர்க்கரையும் பாலுஞ் சேர்த்து எடுத்துக் கொண்டு முற்றத்துக்கு வந்தாள். ஸ்ரீநாதர் தம் கையாலேயே அவனுக்கு அதைப் பரிமாறினார். பலநாட் பட்டினி யிருந்தவன் திடீரென்று வாரியடைத்துக் கொண்டாற் சாகப்போகிறானே யென்று அவனுக்குக் கொஞ்சங் கொஞ்சமாக ஊட்டினார். அப்படியே சிறிய கலயத்தில் ஜலமும் கொஞ்சங் கொஞ்சமாக அருந்தினார். கடைசியாக, சண்டாளனுக்குப் பேசுதற்குச் சக்தி வந்ததும், அவன் "ஏழைகளுக்கு இரங்கு பவரே, அநாத ரக்ஷகா, உம்முடைய தயையை இன்று கண்டேன். அநாதனாகிய என்னை அங்கீகரித்து என் துயரத்தை ஒழித்தீர். நான் சண்டாளன், ஒரு மஹார், வயிற்றுக்காகத் திருடினவன். என் செய்தி நீதித் தலத்தில் தெரிந்த பொழுது என்னைக் கொடுமையாக அடித்தனர். என் சரீரம் எலும்பானது; அவர்கள் தொழுவினின்றும் என்னை விடுவித்தனர். உம்முடைய கீர்த்தனங் காதிற்பட இங்கு ஓடிவந்தேன்" என்றான். ஏகநாதர் சண்டாளன் வார்த்தையைக் கேட்டு, "உனக்குப் பலம் வரும் வரை நீ இங்கேயே இருக்கலாம்" என்று தைரிய வார்த்தை சொல்லி அவ

னுக்கு வஸ்திரங் கொடுத்துத் தொழுவத்தில் உறங்கு தற்கு இடமுங் காட்டினர். பின் அவர் வீட்டுட் சென்று பகவந் நாம ஜபஞ்செய்து கொண்டிருந்தார். சிறிது நேரம் உறங்கி அதிகாலையில் துயிலெழுந்தார். கோதாவரிக்குப் போய் நீராடி வந்து தம் அனுஷ்டா னங்களைக் கிரமமாகச் செய்தார். "உம்முடைய கைதி நேற்றிரவு என் வீட்டுக்கு வந்தான்" என்று நகராதி காரிக்குச் செய்தி அனுப்பினார். நகராதிகாரி "ஸ்வாமி, தேவரீர் அவனை அங்கீகரித்ததனால் அவனுக்கு இனித் தண்டனையில்லை" என்று சொல்லி யனுப் பினான். பிராமணர்கள் போஜனஞ் செய்தபின் ஸ்ரீ நாதர் கைதிக்கு உணவு கொடுப்பார்; இரவில் அவன் ஆனந்தமாகக் கீர்த்தனங் கேட்டுக் கொண் டிருப்பான். கடைசியாக, சரீரத்தில் நல்ல பலம் வந்து அவன் வீட்டுக்குப் புறப்பட்டுப் போனான். ஏகநாதர் உணவை யுண்டதால் அவன் கெட்ட குணம் ஒழிந்து ஸ்ரீ ஹரியை அன்போடு பூஜிக்கத் தொடங்கினான்.



## ஒன்பதாம் அத்தியாயம்

**பிராமணர் அபிப்பிராயம்**

ஏகநாதர் சண்டாளனை ஆதரித்த விஷயத்தைக் கேட்ட பக்த ஜனங்கள் அவரை வாழ்த்தினர். பிராமண பண்டிதோத் தமர்களும் மதாசாரியர்களும் சாஸ் திரிகளும் இகழ்ந்தனர். "ஏகநாதர் செய்தது அக் கிரமம். சண்டாளத் திருடனைத் தம் வீட்டிற் பல

நாள் வைத்திருந்தார். ஆதலால், பல குற்றங்களோடு நீட்டும் அவர்க்கு வந்தது. தயை காட்ட வேண்டு மானால் வேறு ஜாதிகள் அகப்பட வில்லையா? அன்றி யும் திருடனைக் காத்தலிற் பிரயோஜன மென்ன? அதனால் தீங்கே விருத்தியாகும். பாம்புக்குப் பால் வார்த்தாலும் அதனுடைய கடிக்கிற குணம் போகு மோ! அப்படியே திருடனை ஆதரித்தால் அவன் அதிகமாகத்தான் திருடுவான்'' என்றனர்.

**ஆவேசம் இழிபிறப் பொழித்தல்**

ஸ்ரீ நாதர் ஸ்நானத்துக்கு வழக்கமாகப் போகிற வழியில் ஓர் ஆலமர மிருந்தது. இம் மரத்திலிருந்து ஒரு பிராமணனுடைய ஆவேசம் திடீரென்று வெளி வந்தது. அவ்வாவேசம் ஸ்நானத்துக்குப் போகும் ஸ்ரீநாதர்க்கு எதிரில் நின்று அஞ்சலி செய்து, "உம் மைப் பார்த்தலாலே பாபியாகிய நான உய்ந்தேன். ஒரு பிராமணனைப் பகைத்து நான் இப பிறப்பை யடைந்தேன். உம்மிடத்து ஒரே பிரார்த்தனை. நெடுநாளாக நீர் பிராமணரை யுண்பித்து வருகிறீர். சின்னாள் முன் சண்டாளக் கைதிக்கு ஆகாரங் கொடுத்தீர். இவ்விரண்டு புண்ணியங்களும் உம் கை வசத்தி லுள்ளன. இந்த இரண்டி லொன்றை எனக் குத் தத்தஞ் செய்வீராயின் நான் உய்வேன. உலகம் உய்ய நீர் அவதாரம் எடுத்தீரே!'' என்றது. இப் பிரார்த்தனையைக் கேட்ட ஏகநாதர் "புண்ணிய பாப மென்ற பேதம் எனக்குக் கிடையாது. உனக்கு வேண்டியதைக் கேள்'' என்றார். பிராமண ஆவேசம் அவருடைய கருத்தறிந்து, "நீர் கைதியைக் காத்தீரே. அந்த நற்செயலை எனக்குத் தானஞ் செய்யும்'' என்

றது. ஸ்ரீநாதர் கையில் நீரெடுத்து அதனைத் தத்தஞ் செய்தார். நீர் ஆவேசத்தின் உள்ளங்கையிற் பட்ட க்ஷணமே அது விமோசன மடைந்தது. பிராமணர் இதனைப் பார்த்து அதிசயித்தனர். அவ் வாவேசம் தேவ சரீரம் பெற்று ஸ்வர்க்க வழி நோக்கிற்று. எல்லா ஜனங்களும் ஹரி நாம முச்சரித்து ஏகநாதரை வாழ்த்தினர். அவரை இகழ்ந்தாருடைய வாய் அடைத்தது.

**பண்டரி யாத்திரை போகும் வழக்கம்**

ஆடி மாதத்தில் ஏகநாதர் பண்டரி யாத்திரை போவது வழக்கம். சந்திரபாகையில் ஸ்நானஞ் செய்து ஸ்ரீ பாண்டு ரங்கரைப் போய்த் தரிசிப்பர். ஸ்ரீ நாதரோடு பெருங் கூட்டமான யாத்திரிகர் ஹரி கீர்த்தனைகளை ஆனந்தமாய்க் கேட்டுக்கொண்டே உடன் செல்வர். பண்டரிக்கு வருஷந்தோறும் இப்படி யாத்திரை போகும் வழக்கத்தை ஏற்படுத்தியவர் பானுதாஸரே. ஏகநாதர் தவறாமல் அதனை யனுஷ்டித்து வந்தார். பிரதிஷ்டான க்ஷேத்திர வாசிகள் அவருடைய ஹரி கீர்த்தனங்களையும், அமுத வசனங்களையும், அற்புதக் கதைகளையும் இடைவிடாமற் கேட்டுக் களித்தனர்.

**ஏகநாதர் இயற்றிய நூல்கள்**

ஸ்ரீ நாதர் சம்ஸ்கிருத நூல்களுக்கு வியாக்கியானங்கள் எழுதினர். சற்குரு ஆஞ்ஞையால் பொருள் தெரிந்துகொள்வது கஷ்டமா யுள்ள **சதுசுலோகி பாகவதத்**தை எளிதிற் பொருள் விளங்கச் செய்தவர் ஏகநாதரே. இதுவன்றி அநேக பாடல்கள் பதங்களாக எழுதினார்; மற்றச் சந்தங்களிலும் எழுதினார். அவருடைய **அபங்கங்களில்** விநோதமான பாகங்க

ளுண்டு. அன்றியும், ஹஸ்தாமலகத்திற்கு மிகச் சிறந்த மராட்டி வியாக்கியான மெழுதினார். சுகாஷ்டகம் எழுதினார். அதன் பின்னர் அவருடைய அனுபவங் களை அற்புதமாய் எடுத்து விளக்கும் ஸ்வாத்மஸுக மெழுதினார். இதனைப் பக்த ஜனங்கள் கேட்டு வெகு வாக ஆனந்தித்தனர். இன்னும், ஸந்தர்களும் சாது ஜனங்களும் பக்தி ரஹஸ்யங்களை விரிப்பதாகிய பாக வதத்திற்கு வியாக்கியான மெழுதும்படி ஏகநாதரை விரும்பிக் கேட்டனர். "பாகவதம் புராணங்களுள் தலைமையாயது. தாம் உத்தவ கீதையை மராட்டியில் செய்தளிப்பீராயின் அது பலர்க்குப் பேருபகாரமா யிருக்கும்" என்றனர். இவ் வேண்டுகோளைக் கேட்ட ஏகநாதர் மனமகிழ்ந்து பாகவத புராணம் பதினொ ராவது ஸ்கந்தத்துக்கு மராட்டி வியாக்கியானம் எழுதத் தொடங்கினர். சின்னாளில் இரண்டு அத்தியா யங்கள் முடித்தனர்.

**ஏகநாதர் பாகவதத்தை ஒரு பிராமணன் காசிக்குக் கொண்டு செல்லல்**

அந் நகரத்தில் ஒரு துவிஜோத்தம னிருந்தான். அவன் அதைப பார்த்து மிக்க ஆனந்தமடைந்து அதற்கு ஒரு பிரதி செய்து அதைக் கிரம மாகப் பாராயணஞ் செய்யத் தொடங்கினான். சிறிது காலஞ் சென்றபின் அவன் காசிக்கு யாத்திரை போக எண்ணி னான். நல்ல நாள் தெரிந்து ஸ்ரீ நாதரிடம் விடை பெற்று அவன் தன் குடும்பத்தோடு புறப்பட்டுப் போனான். அவன் வேறு யாத்திரிகரோடும் யாத்திரை செய்து காசியை யடைந்தான். பாகீரதியில் ஸ்நானஞ் செய்து விசுவேசுரரை வழிபட்டான். அத் தலத்திற்

செய்யும்படி விதிக்கப்பட்ட கிரியைகளை யெல்லாம் விடாமற் செய்து நான்கு மாசம் அங்குத் தங்கினன். அக்காலத்தில் ஏகநாதராற் செய்யப்பட்ட பாகவதத்து இரண்டத்தியாயங்களையும் அவன் உரக்க வாசிப்பது வழக்கம். மணிகர்ணிகையில் ஸ்நானஞ் செய்து பீடத்தைக் கரையிலிட்டுத் துவாதச நாமங்களும் கோபீசந்தனம் துளசியாதிகளும் அணிந்து கொள்வான். அவனிடத்தில் இந்தப் பாகவதம் கையிலிருந்தது; ஆனந்தமாக வாசிப்பான். திடீரென்று துன்பவேது ஏற்பட்டது. அந்தக் கரையிலேயே சாஸ்திரங்களை வாசித்தலில் தன் காலத்தைப் போக்கிய ஒரு பெரிய சந்நியாசி வசித்திருந்தார். அவருடைய சீடருள் இருவர் ஸ்நானஞ் செய்ய நீரருகில் வந்தனர். அவ்விடத்தில் பிரதிஷ்டானத்தி லிருந்து வந்தவனை இவன் பீடத்தையிட் டிருந்ததைக் கண்டு ஆச்சரியப் பட்டனர். அவனுடைய தோற்றப் பொலிவைப் பார்த்து அவர்கள் ஒருவரோ டொருவர், "இவன் பிராமண பண்டிதன் போலும். இவன் என்ன சாஸ்திரம் வாசிக்கிறானென்று விசாரித் தறிவோம்" என்று சொல்லிக்கொண்டு அவன் சமீபத்தில் வந்து உட்கார்ந்தனர். அவர்கள் அவனோடு சம்ஸ்கிருத பாஷையில், "நீர் உரக்க வாசிப்பது என்ன சாஸ்திரம்? சொல்லும்" என்றனர். அவன் "நான் வாசிப்பது பாகவதத்திற் பதினோராவது ஸ்கந்தத்திற்கு மராட்டி வியாக்கியானம்" என்றான். பண்டிதர்கள் "எங்கே, உரக்க வாசியும். கேட்கலாம்" என்றனர். அவன் மகிழ்ச்சியோடு வாசிக்க ஆரம்பித்தான். முதலாவது ஏகநாதர் நடை இனிமையானது; அவனுடைய குரலும் இனிமையானது; மொழிபெயர்ப்பிற் பிழை யில்லை; வியாக்கி

யானமும தவறில்லாதது. ஆதலால், பண்டிதர்கள் "அந்தச் சாதுவின் சொல்வன்மை அழகிது. இந்தப் புஸ்தகம் எங்கும் பரவுமாயின் சம்ஸ்கிருத பாகவதத்தை ஒருவரும் லக்ஷ்யஞ் செய்யார்" என்றும், "இந்த விஷயத்தை ஸ்வாமிக்குத் தெரிவித்து இதைத் தடுத்துவிட வேண்டும்" என்றும் சம்ஸ்கிருதத்திற் பேசிக்கொண்டனர். பின் அவர்கள் ஒருவர்க்கொருவர் சைகை செய்தனர். ஒருவன் காவ லிருந்தான்; மற்றவன் மடத்துக்கு விரைந்து போய் ஸ்வாமிக்குச் சங்கதி தெரிவித்தான்: "மணிகர்ணிகைக் கட்டத்தில் ஒரு பிராமணன் பாகவத மராட்டி மொழி பெயர்ப்பை ஆனந்தமாக வாசித்துக்கொண்டு உட்காந்திருக்கிறான். இந்த க்ஷேத்திர வாசிகளுக்கு ஸ்வாமிகளே தலைவரா யிருக்கிறீர். ஆதலால் நீர் அவனைத் தண்டிக்க வேண்டும். அவனுடைய மராட்டி மொழிபெயர்ப்பு எல்லாருக்கும் அங்கீகார மாய்விடின் புராணிகர்க ளாகிய எங்களை யார் மதிப்பர்?" சீடன் இவ்வாறு சொல்லக் கேட்ட மஹந்துவுக்குக் கோபம் வந்தது. "அவனை யிங்குக் கொண்டுவா, என்ன தண்டனை விதிக்க வேண்டுமோ அதனை விதிக்கிறேன்" என்றார். இக் கட்டளை பிறந்த க்ஷணமே ஐந்தாறு சீடர்கள் ஓடிப் புஸ்தகம் வாசித்துக்கொண் டிருந்த அப் பிராமணனைச் சினத்தோடு, "வா, புஸ்தகத்தையும் உன்னோடு எடுத்து வா, சீக்கிரமாக ஸ்வாமி மடத்துக்கு வா" என்றிரைந்தனர். அவன் திகிற்பட்டானாயினும் ஏகநாதர் திருவடியைச் சிந்தித்தான். புஸ்தகத்தை அது வைத்திருந்த துணியில் மடித்து வைத்து விரைந்து போனான். மடத்துட் புகுந்து, ஸ்வாமியை வணங்கி அவரெதிர் நின்றான்.

கண் ஜாடையால் மஹந்து அவனை உட்காரச் சொல்லினர். அவனோடு சம்ஸ்கிருதத்திற் பேசினர்; அவனுக்கு ஒன்றும் புரிய வில்லை. ஆதலால், அவனை மூடனாக மதித்து மராட்டியில்,

**மஹந்து பிராமணனை விசாரித்தல்**

“இந்த வியாக்கியானஞ் செய்த மஹா கவி எங் கிருக்கிறார்? அல்லது, இந்த மராட்டி மொழிபெயர்ப்பைச் செய்தது உன் மதிதானோ? ஒன்றும் ஒளியாமல் உண்மையை யுரை” என்றார். அவன் சொல்வான்: “கோதாவரிக் கரையில் பிரதிஷ்டான நகரத்தில் ஏகநாத ரென்றொரு பெரியா ரிருக்கிறார். அவர் விஷ்ணு வழிபாடும் ஹரி கீர்த்தனமும் விடாதாற்றுபவர். பிராமணர்களைப் பூஜித்து அவர்களுடைய பாததீர்த்தங் கொள்பவர். தம்முடைய குருவின் அனுக்கிரகத்தால் அவர் கவிதா ஸாமர்த்தியம் பெற்றுப் பாகவதம் பதினொராவது ஸ்கந்தத்துக்கு வியாக்கியானம் எழுதத் தொடங்கியிருக்கிறார். இரண்டு அத்தியாயங்கள் முடிந்தன. அவற்றை மூடனாகிய யான் அவற்றினிடத்துள்ள கவுரவ புத்தியாற் பிரதி செய்து மூலத்தோடு ஒப்பிட்டு வாசித்துக் கொண்டிருக்கிறேன்.” மஹந்து “இவனைக் குறைசொல்ல ஏதுவில்லை. ஏகநாதனை இங்கு வரவழைத்துத் தண்டிக்கவேண்டும். கோதைக் கரையிலுள்ள பிரதிஷ்டான க்ஷேத்திரத்தில் பண்டிதர்களும் மதாசாரியர்களும் இருப்பர். அவர்கள் பாகவதத்துக்கு மராட்டி வியாக்கியானஞ் செய்யும்படி எப்படி விட்டனர்?” என்று சொல்லித் தம் சீடரைப் பார்த்துப் பிரதிஷ்டானத்து மதாசாரியர்க்குப் பின்வருமாறு ஒரு கடித மெழுதும்படி கட்டளை யிட்டார்: “வியாசர் வேதங்களைக் கடைந்து ஸ்ரீ பாகவதத்தை

யெடுத்தார். இந்த உத்தவ கீதை கேவலம் உபநிஷத்துக்களின் சாரம். ஏகநாத ரென்னும் கவி, உம் நகர வாசி, அதற்கு ஒரு மராட்டி வியாக்கியானம் எழுதி யிருக்கிறார். இது சுத்த அக்கிரம மென்று எனக்குத் தோன்றுகிறது. எல்லாமறிந்த பிராமணோத்தமர்களாகிய நீங்கள் ஒருமனப்பட்டு அவரைத் தண்டித்துப் பின் உடனே இங்கு அனுப்ப வேண்டும். இந்தக் கடிதத்தோடு என் சீடர் இருவர் வருகின்றனர். அவர்களுக்கு உங்களா லியன்ற உதவி புரிய வேண்டும். அவர்கள் அவரை வாதத்தில் வெல்லுதற்காக வருகின்றனர்.'' ஏகநாதர்க்கும் "உம்முடைய மராட்டி பாகவதக் கையெழுத்துப் பிரதியை எடுத்துக்கொண்டு உடனே இங்கு வருக'' என்றொரு கடிதம் எழுதச் சொன்னார். தம்முடைய சீடர்களை, இக் கடிதங்களை எடுத்துக்கொண்டு தக்ஷிணத்துக்குப் போய் ஏகநாதரைக் கொண்டுவரும்படி ஆஞ்ஞாபித்தார். இன்னும் அப் பிராமணன் கையிலிருந்த இரண்டு அத்தியாயங்களையும் பிடுங்கிக் கொண்டார். இரண்டு சீடர்களும் சந்தோஷமாகப் புறப்பட்டுச் சென்று பைடணம் சேர்ந்தனர்.

**காசிச் சீடர் பைடணத்திற் செய்த காரியம்**

அவர்கள் காலை யனுஷ்டானாதிகளை முடித்து மதாசாரியர்களைக்கண்டனர். பிராமணர்களையெல்லாம் அவசரமாகக் கூட்டி அவர்களுக்குச் சங்கதி தெரிவிக்கப்பட்டது. சீடர்கள் கடிதத்தைக் கொடுத்தனர்; அதனை வாசித்தபொழுது பிராமண ரெல்லாரும் கேட்டனர். அப்புறம் அவர்கள் தம்முள் தர்க்கித்தனர். "இந்த அநாசாரன் நம் நகரத்தில் வசித்துக் கொண்டு அக்கிரமங்கள் புரிகிறான். பிரதான மதா

சாரியர் பகிரங்கமாக அவனைப் புகழ்கிறார். ஏகநாதன செல்வமும் செல்வாக்குமுடைய மாந்தர்க்கு ஏதோ மந்திரஞ் செய்து விட்டான்; அவர்கள் அவன் சொல் வழி நிற்கின்றனர்; இதனால் எங்களுக்கு மதிப்பு ஒழிந் தது. ஆதலால் வாதத்தில் அவனை வெல்லுங்கள். இந்த க்ஷேத்திர வாசிகளாகிய நாங்கள் அச் சமயத்தில் உங்களுக்கு உதவி செய்கிறோம்'' என்றனர். ஒருவன் ''இப்பொழுதே ஏகநாதனைக் கூப்பிட்டு வாதத்தில் தோற்கடிக்க வேண்டும்'' என்றான். வேறொருவன், ''அவன் காசி க்ஷேத்திரத்துக்குச் சென்று அங்குத் தண்டனை யடையட்டும். தன் பெருமைக்காகவே பாகவதம் மராட்டி மொழிபெயர்ப்பு ஆரம்பித்திருக் கிறான். அங்கு அவன் அவமான மடைதல் தப்பாது'' என்றான். காசிச் சீடரும் தம் கர்வத்தைப் பல வழி யாற் காட்டினர். அவர்கள் ''அவனைக் கட்டாயம் வெல் வோம். எவ்வளவு துன்மார்க்கன் அவன்!'' என்ற னர். நகரத்துப் பிராமணர் உடன்வர அவர்கள் ஏக நாதர் வீட்டுக்கு வந்தனர். அவர்கள் வருதலைக் கண்ட ஏகநாதர் எழுந்து அவர்களை நமஸ்கரித்து அன்பாக உட்காருவித்து, ''கருணையே யுருவானவர்களே, நீங் கள் இருப்பது எந்த நகரம்? சொல்லுங்கள்'' என்ற னர். அதற்கு விடையாகச் சீடர்கள் மஹந்து கடி தத்தை ஏகநாதர் கையிற் கொடுத்தனர். ஏகநாதர் தலைவணங்கிக் கடிதத்தை உரக்கப் படித்தனர். அவர் சந்தோஷ பூரிதராய்ப் பிராமணர்களை நோக்கி, ''விசுவேசுவரன் என்னை நினைத்தார். ஆதலால் என்னை வரும்படி யேவினார்'' என்றார். ஏகநாதர் உடனே காசிக்குப் போகத் தீர்மானித்து உத்தவரைக் கூப் பிட்டுத் தாமில்லாத சமயத்திற் காரியங்களை யெல்லாம்

பார்த்துக் கொள்ளும்படி வேண்டினர். உத்தவர் சம் மதித்து நமஸ்கரித்தார். இப் பெரு யாத்திரை போதலே நினைத்த மாத்திரத்தே ஏகநாதர் மனம் களித்தது. அவர் மஹந்துவின் சீடர்களை உடனே போஜனத் துக்கு உட்காரும்படி வேண்டினர். "பல நாட் பிரயா ணம் செய்து களைத்திருக்கிறீர்கள். இந்தத் தூரப்பிர யாண சிரமம் என்றால் தானே உங்களுக்கு ஏற்பட்டது" என்றனர். இரண்டு சீடர்களும் கேட்டு, "இப்பொழுது தான் மதாசாரியர் கிருகத்திற் போஜன முடித்தோம். ஆயினும் உம்மைப் பார்த்துப் பூர்ண திருப்தி யடைந் தோம்" என்றனர். அவரை அவமதிப்பாகப் பேச வேண்டு மென்று அவர்கள் கொண்டிருந்த நோக்கம் அவரைப் பார்த்த மாத்திரத்திலேயே பறந்தோடிற்று. ஒருவரோ டொருவர், "என்ன பக்தி! என்ன சீலம்!" என்று கசுகுசுத்தனர். மதாசாரியர்களுடைய ஒற்றர் சிலர் அங்கு நின்றவர்கள் ஓடி நடந்த தெல்லாம் அவர்கட்குத் தெரிவித்தனர்: "ஏகநாதரைப் பார்த்த க்ஷணமே காசிப் பிராமணர் பணிவுடைய ராயினர். நாங்கள் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவர்கள் பரமசாந்த மடைந்தனர். ஏகநாதர் ஏதோ மந்திரஞ் செய்துவிட்டார்." மதாசாரியர்கள் பிரமித்து, "ஏக நாதன் சத்துருவை உபசாரத்தால் வெல்லும் உபாயத் தைக் கண்டு பிடித்திருக்கிறான் என்பது நிச்சயம். விஷ்ணு பகவான் பிருகு கொடுத்த உதைகளை யெல் லாம் பொறுத்துப் பெருமை பெற்றார். அப்படியே ஏகநாதனுக்கும் அந்த வித்தை தெரிந் திருக்கிறது. அவனிடத்தில் எப்பொழுதும் சாந்தம் உண்டு. அவனை இம்சிக்க வருபவன் எவனாயினும் கடைசியில் அவன் பாதத்தில் விழுகிறான். இவ்விதமாக அவனுடைய

உபசாரங்களாற் கோபம் பறக்கிறது. அவனுக்கு விரோதமாக ஏதாவது குறும்பு சூழ்ந்தால், அஃது அவனுக்கு நன்மையாக முடிகிறது. அவமரியாதை யுத்தேசித்தால் அஃது அவனுக்குப் புகழ்ச்சியாக மாறுகிறது. பகவான் அவனுக்குத் துணை புரிகிறார்" என்று தம்முள் முணுமுணுத்தனர்.

**ஏகநாதரும் மஹாந்துவும் சந்தித்தல்**

ஏகநாதர் தம்மை யழைத்துப் போக வந்த பிராமணச் சீடரோடு பிரயாணப்பட்டார். அவர் தம்மிடத் திருந்த பாகவதம் ஐந்து ஸ்கந்தங்களினுடைய கையெழுத்துப் பிரதியையும் எடுத்துக் கொண்டார். திடீரென்று புறப்பட்டதனால் குதிரை, மூட்டை, முடிச்சு ஒன்றும் இல்லாமற் புறப்பட்டார். ஆயினும் உத்தவர் அவர்க்குச் சகாயமா யிருக்கும்படி இரண்டு பிராமணரை யனுப்பினார். தாமாகவே காசியி லிருந்து வந்தவர்களோடு பிரயாணப்பட்டு வழி நடந்து கடைசியாக ஒரு நாள் ஆனந்த பவனம் சேர்ந்தார். பாகீரதியில் ஸ்நானஞ் செய்து ஏகநாதர் உட்கார்ந்தார். இரண்டு சீடரும் மஹாந்துவிடம் போய் நமஸ்கரித்து, "தங்களுடைய சக்தியாலேயே நாங்கள் பிரதிஷ்டானஞ் சென்று வியாக்கியாதாவைக் கொண்டு வந்தோம். இனித் தங்களுடைய விருப்பம் என்ன?" என்றனர். ஸ்வாமி "நான் இப்பொழுது பிக்ஷைக்குப் புறப்பட்டுக் கொண் டிருக்கிறேன். அவனை மடத்துள் உட்கார வையுங்கள்" என்று கட்டளை யிட்டுத் தாம் பிக்ஷைக்குப் போயினர்; அவருடைய முந்நூறு சீடரும் உடன் போயினர். இரண்டு சீடரும் கங்கைக் கரைக்குப் போய் ஏகநாதரை யழைத்து வந்து,

"ஸ்வாமி திரும்பி வருகிறவரை மடத்தில் உட்காந் திரும்" என்றனர். "ஆஹா" என்று சொல்லி எப் போதும் உயர்வு தாழ்வை யெண்ணுதவரான ஏகநாதர் உட்காந்தார். பிக்ஷை முடிந்து வந்த மஹந்து தம் முந்நூறு சீடர்களுக்கும், "மஹாராஷ்ட்ரப் பிரபந்தத் தைச் செய்த பைடணபுரி மஹா கவியை என் இரண்டு சீடரும் இங்கு அழைத்து வந்திருக்கின்றனர். நீங்கள் அவனைத் தண்டிக்கவேண்டு மென்பது என் விருப்பம். நீங்கள் முந்நூறு சீடர்கள். ஒவ்வொருவரும் அவ னுக்கு ஐவைந்து அடி கொடுக்கவேண்டும். இவற்றிற் குத் தப்பிப் பிழைப்பா னயின் அப்புறம் செய்வதை ஆலோசிக்கிறேன்" என்று கண்டிப்பான உத்தரவு கொடுத்து அவர்களை மடத்துட் புகச் சொன்னர். சற் குருவின் ஆஞ்ஞையைச் சிரமேற் கொண்டு சீடர்கள் விரைந்து சென்றனர். செல்லும்போதே, "ஸ்வாமி சக்திமான், கவுரவிக்கத் தக்கவர், நமக்கு ஆஞ்ஞை தந் தார். ஆயினும் அடி பொறுக்க முடியாமல் பிராமணன் சாவானுயின், நாம் செய்ய வேண்டிய பிராயச்சித்தம் மிகக் கடுமையா யிருக்குமே. ஏகநாதன் மாதிரிகள் எத் தகையன என்று கவனிப்போம். அவனுடைய அந்தஸ் தென்ன, அவனுடைய பூஜாக் கிரமமென்ன, இவ் வறிவை அவன் எங்ஙனம் பெற்றுன்?" என்று தம்முள் தர்க்கித்துக்கொண்டு அவர்கள் மடத்து வாயி லில் நின்றனர். கடைசியாக, "நாம் ஒருவர் பின் ஒருவராக உள் நுழைந்து அவனைப் பார்ப்போம்" என்று நிச்சயித்து, சீடர்கள் ஒருவர் பின் ஒருவ ராக மடத்துள் நுழைந்தனர். அங்கு அவர்கள் ஏகநாதர் ஸ்ரீ கிருஷ்ண ரூபத்தோடு சாந்தமாக உட்காந்திருத்த லைக் கண்டனர். அவர்க்கு வணக்கஞ் செய்து அஞ்சலி

ஹஸ்தராய், "சச்சிதானந்தமே இவ் வண்ணம் சகுண மாய் அவதரித்தது" என்றனர். முந்நூறு சந்நியாசி களுக்கும் ஏகநாதர் மடத்தில் அவ்வாறு தோற்றினர். அவர்கள் "இவர் உலகம் உய்யத் தோன்றிய நாராயண மூர்த்தியே. நம் ஸ்வாமி கட்டளைப்படி செய்திருந் தால் எப்படிப்பட்ட ஆபத்து விளைந்திருக்கும்!" என்றனர். வேறொரு சீடன் ஸ்வாமியிடம் சென்று, "தாங்கள் ஏகநாதரைத் தடி கொண்டு மொத்தச் சொல்லிச் சீடர்களை அனுப்பினீர்கள். அவர்கள் தங்களுடைய கட்டளையைமறுத்து ஏகநாதரை வணங்கி அவர் முன் கூப்பிய கையராய் நிற்கின்றனர். இஃது என்ன விபரீதம்!" என்றான். பிரகலாதன் ஸ்ரீ ஹரியை வழிபட்டதைக் கண்ட ஹிரண்யகசிபுவுக்குக் கோபம் பொங்கியது போலும், ஸ்ரீ ராமர் பலங் கண்ட விபீ ஷணன் அவரைச் சரணாகதி யடைந்த வுடனே இராவணன் குரோதத்தால் நடுங்கிப் பற்களை நற நற வென்று கடித்ததுபோலும், இதனைக் கேட்ட மஹந்து கோபாவேசத்தோடு, "இச் சன்னியாசிகள் என் இனத் தவராயினும் என் கட்டளையை மறுத்து அவனுக்கு வச மாயினர். ஏகநாதன் என்ன மந்திரங் கற்று இவ்வாறு தன்னைக் கண்ட மாத்திரையில் மனிதர் தன்னை வணங் கும்படி செய்கிறான்!" என்று படபடத்துச் சீடனை நோக்கி, "என் ஆசனம் உள்ள விடத்தில் ஒரு திரை யிடு; மஹாராஷ்ட்ரத்தில் நூல் செய்தவனை நான் கண்ணாலும் பாரேன்" என்று கட்டளை யிட்டனர். சீடனும் விரைந்து போய் அவ்வாறே திரை யிட் டான். ஸ்வாமி வேறு வாயில் வழியாக உட் புகுந்து தம் சர்மாசனத்தை விரித்து உட்கார்ந்தார். முந்நூறு சீடர்களும் ஏகநாதர் திருவுருவின் மேல்

வைத்த கண்களை வாங்காமல் வாயிலருகிலேயே நின்றுகொண் டிருந்தனர். அவருடைய சதுர்ப்புஜங்களோடு கூடிய ஆகாரத்தைப் பார்த்தவுடனே அவர்கள் மெய்ம்மறந்தனர்; நான் நீ யென்னும் பேதவுணர்வும் அற்றனர். எல்லாரும் ஏகநாதரை உற்று நோக்கினவர்களாய், "ஏகநாதா ஏகநாதா" என்று அன்பாற் கரைந்தனர். அருந்தவம் புரிந்தே காணத்தக்க வைகுண்டநாதராகிய அவரைத் தங்கள் வாயார வாழ்த்தினர். தம் சீடர்கள் வார்த்தைகளைக் கேட்ட ஸ்வாமி ஆச்சரியப்பட்டு, "இவன் எல்லாரையும் மயக்கி விட்டான். எப்படியோ தெரியவில்லை" என்றார். பின் ஸ்வாமி ஏகநாதரிருந்த விடத்துக்குச் சமீபமாகத் தம் ஆசனத்தை ஒற்றி யிட்டார்; திரை மாத்திரம் நடுவி லிருந்தது. மஹந்து முதல்வர் ஏகநாதரை நோக்கி, "சந்நியாசிகளுள் தர்க்கத்தில் என்னை வெல்வார் எவருமில்லை. உன் வஞ்சகத்தை யொழித்து உடனே உன்னைப் பகிரங்கமாகத் தண்டிப்பேன்" என்றார். பொறைக்கும் அருளுக்கும் கடல் போன்ற ஏகநாதர் இம் மிடுக்கு வார்த்தையைக் கேட்டுச் சிறிதும் மனங் கலங்காது, "ஓ ஸ்வாமி, நீர் பெரியீர், வல்லீர்; நான் உம் பாதத்தில் என் சிரத்தாற் பணிந்தேன். அநாதனாகிய எனக்கு உம்மைக் கண்ணாற் காணும் பேற்றை அளியும். குழந்தையே யாகிய என்னைப் பார்க்க விரும்பி இங்கு வரச் செய்தீர். நெடுந்தூரம் நடந்து இங்கு வந்து சேர்ந்தேன். இப்பொழுது ஏன் இந்தத் திரை யிடுவித்தீர். நான் ஏதாவது தீங்கு செய்துள்ளேனாயின், பொறுத்துக் கொள்ளும். என் புத்தியைச் சோதித்தீராயின் சம்ஸ்கிருதம் எனக்குப் புலப்படாதென்று காண்பீர். என்னிடத்திற் பக்தி ஞானம்

வைராக்கிய மொன்றுமில்லை. நான் சாஸ்திரங்கள் படியாதவன், வேதங்கள் ஓதியறியாதவன், உம்முடைய சேவையாலேயே இந்த அற்ப கவித்வமும் பெற்றிருக்கிறேன். அதனால் என்னாற் கூடியவரை பாக்கள் செய்ய முயன்று பாகவதத்தைத் தொடங்கியிருக்கிறேன். பாகவதம் பதினொராவது ஸ்கந்தத்தில் ஐந்து அத்தியாயங்கள் தான் பாடி யிருக்கிறேன். ஸ்வாமி தயைகூர்ந்து அதனைப் பார்வையிட்டுப் பொருட் பொருத்தம் பார்க்க வேண்டும். நான் செய்திருக்கிற பாகத்தில் ஸ்ரீ பாகவதத்தினுடைய கருத்துச் சிறிதாவது மாறுபட் டிருப்பதாக ஸ்வாமி கண்டால் அதனை மணிகர்ணிகையில் தாழ்த்துவிடலாம். அப்படிப் பட்ட நூல் உலகில் நிலவுதற்கு நியாய மில்லையே. இப் பெரிய க்ஷேத்திரத்தில் அறிவு நிரம்பிய நீரே நாராயண ரூபமாய் விளங்குகிறீர். இந்தக் கருத்தை நீர் ஒப்பாத விடத்து, வேறெவர் ஒப்புவர்? ஆதலால் இப்பொழுது உம் கோபத்தை யொழித்துத் தயையைக் காட்டும். அநாதனாகிய யான் உம்மைப் பார்க்கும்படி அருள்புரியும்" என்றார். ஏகநாதருடைய இவ் வமுத வசனங்களைக் கேட்டதும் மஹந்துவுக்குக் கோபம் ஒழிந்து சத்துவ குணம் மேலிட்டது. அவர் மனத்திற் செறிந்திருந்த அஞ்ஞான விருள் ஞான சூரியன் உதித்தவுடனே மறைந்தது. ஒளி அவர் ஆத்மாவுள் ஊடுருவிப் பாய்ந்தது. மஹந்து 'உலகம் உய்யும்பொருட்டு வைகுண்டவாசியாகிய நாராயணன் ஏகநாதராகப் பூமியில் அவதரித்து நாம் வேண்டாமலே இம் மடத்துக்கு வந்து நமக்குக் காட்சி தந்தார். இவர் உண்மையில் மனித னல்லர்' என்று தம்முட் சொல்லிக்கொண்டு, "இப்பொழுதே திரையை எடுங்கள்,

அந்தத் திவ்ய புருஷனை நான் பார்க்கட்டும்'' என்றனர். சீடர் திரையை நீக்கலும், அச்சோ! அவர் கண்களுக்குக் கிருஷ்ணனே புலப்பட்டார்.

**ஏகநாதர் பதினொராவது ஸ்கந்தத்தைச் செய்து முடித்தல்**

ஸ்ரீ பாகவதத்தில் வர்ணிக்கப்பட்ட தியானத்துக்கு ஏற்ற உருவம் கண்முன் தோன்றலும் மஹந்து பச்சாத்தாபப் பட்டார், "என்னை யாட்கொள்ளும்'' என்று கூவினார். எண்வகை மெய்ப் பாடுகளும் மேற்கொள்ளலால் அவர் மெய்ம்மறந்து ஏகநாதருக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தார். ஸ்ரீ நாதர் மீண்டும் மனிதவுருவை யடைந்து, "ஜய ஜய, நான் இன்று உய்ந்தேன்'' என்று கூவிக்கொண் டிருக்கும் மஹந்துவைத் தூக்கினார். தாமும் "நாராயணனுக்கு நமஸ்காரம்'' என்று சொல்லிக் கொண்டே அவருக்கு நமஸ்காரஞ்செய்து, "ஸ்வாமி, இது தவறு, இம் மடத்தில் நீர் மஹந்துவன்றோ'' என்றார். மஹந்து ஏகநாதர் மொழிகளைக் கேட்டு ஆச்சரிய வசத்தராய், "இவர் நம் கண்முன் அற்புதச் செயல்கள் காட்டினார். சுருதிக்கும் மரியாதை வைத்துள்ளார்'' என்றார். இவ்விதமாக ஆத்மானந்தம் அனுபவித்தவராய் மஹந்து தம் வழக்கமான ஆசனத்தி லிருந்துகொண்டு தம் பக்கத்தில் ஏகநாதரை யிருக்கச் செய்து சுவடியை எடுத்துப் பிரிக்கச் சொன்னார். ஐந்து அத்தியாயங்களையும் அங்கங்கே படிக்கச் சொல்லிக் கேட்டு, "என்ன அபார ஞானம்!'' என்று அதிசயித்தார்; அவர் மனத்திற் சாந்தி யுண்டாயிற்று. அப்புறம் எல்லாரும் சற்குருவோடாலோசனை செய்து ஏகநாதர் முன் கும்பிட்டு நின்று, "நீர் பாக

வதத்தில் ஐந்து அத்தியாயம் முன்னமே இயற்றியாய் விட்டது. இந்தக் காசியிலேயே பதினோராவது ஸ்கந்தத்தை முடிக்குமாறு வேண்டுகின்றோம். இது முடியும் வரை நீர் மகிழ்ச்சியோடு எங்களோடுறைய வேண்டும்'' என்று அவரை இரந்தனர். ஏகநாதரும் அப்படியே என்று அவர்கள் வேண்டுகோட்கு இசைந்து தலை வணங்கினர். அவர் மனமகிழ்ச்சியோடு புஸ்தகத்தை முடிக்கத் தொடங்கினர். அன்றன்று அவர் இயற்றிய பாகத்தை மஹந்து படித்துச் சம்ஸ்கிருதத்திற்குச் சரியாயிருக்கிறதா என்று மனத்தால் ஆராய்ந்து பார்த்தார். சிறிது தவறுகூட இல்லாதிருந்தது. ஆறு மாசங்கள் சென்றன, புஸ்தகம் முடிந்தது. பக்தி ரஹஸ்யங்கள் நிறைந்திருந்ததனால் கேட்டவர்களெல்லாம் சந்தோஷித்தனர். எல்லாரும் உட்கார்ந்திருக்க மஹந்து புஸ்தகத்தை மீண்டும் மீண்டும் வாசிக்கச் சொல்லிக் கேட்டார். இரவில் வாசித்த பொழுது எல்லாருக்கும் சந்தோஷமும் திருப்தியும் அணைகடந்த வெள்ளம் போற் பொங்கி வந்தன. புஸ்தகம் முடிந்ததும் மடத்தில் ஓர் உற்சவம் கொண்டாடிச் சரஸ்வதியைப் பூஜிக்க வேண்டுமென்று மஹந்துவுக்குத் தோன்றிற்று. இந்த எண்ணத்தோடு அவர் வேண்டியனவெல்லாம் தயார் செய்து நகரத்திலுள்ள இதர பண்டிதர்களுக்கு ஓர் அழைப்புப் பத்திரம் அனுப்பினர்: "ஏகநாதர் பாகவதம் பதினோராவது ஸ்கந்தத்துக்கு மராட்டி வியாக்கியானஞ் செய்திருக்கிறார். அதை நான் ஆராய்ந்து பார்த்தேன், ஆனந்தமடைந்தேன். நாளை மடத்தில் இது சமபந்தமான உறசவம் நிகழும், பிராமணர்களாகிய நீங்களெல்லாரும் வர வேண்டும்."

**பிராமணர் அது கங்கையில் முழுக்கத் தக்கதெனல்**

பூதேவர்கள் இவ் வழைப்பைக் கேட்டதும், "என்ன! பாகவதத்துக்குப் பிராகிருத வியாக்கியானமா? இது கூடாது. இந்தக் கலியுக ஆரம்பத்தில் பாஷண்டம் மிகுதியாகப் பரவியிருக்கிறது. ஸ்வாமி எப்படி மயங்கி விட்டார்? உடனே அம் முயற்சியை ஏன் தடுக்கவில்லை? இப் பெரிய க்ஷேத்திரத்தில் இந்தப் பிராகிருத மொழிபெயர்ப்பை அவர் மனமார மெச்சுகிறார். ஸ்வாமி ஏகநாதன் மாயையிற் சிக்கி யிருக்கிறாரென்பது வெளிப்படை. நாம் விரைந்து சென்று சாஸ்திரக் கற்பனையை அவர்க்குத் தெரிவிப்போம். அவன் புஸ்தகத்தைக் கட்டாயம் நதியில் முழுக்கி விடவேண்டும்" என்று உறுதியாகத் தீர்மானித்தனர். இந்த நோக்கத்தோடு வேத சாஸ்திரங்கள் அறிந்த பிராமண பண்டிதர்களும் வேதாந்தப் பிரவர்த்தகர்களும் ஸ்வாமியினுடைய மடத்தில் வந்து அவரைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தனர். அப்புறம் அவரைத் தனியே அழைத்துச் சென்று, "ஸ்வாமி, நீர் எல்லோருக்கும் முக்கியராயிருக்கிறீர். பிராமணர்களாகிய நாங்கள் உம்முடைய சீடர்கள். நீரே ஞானத்திற் கெல்லாம் முக்கிய உறைவிடம். நீரே எங்களுடைய பெரிய சற்குரு. இதற் கெல்லாம் மேல் நீர் நான்கு ஆசிரமங்களுள் உயர்ந்த ஆசிரமத்தைச் சேர்ந்தவர். கௌரவ யோக்கியதையில் உம்மிற் பெரியார் கிடையாது. இஃது இப்படி யிருத்தலால் பிரதிஷ்டானத்து ஏகநாதர் செய்த பிராகிருத பாகவதத்தை ஸ்வாமி அங்கீகரித்தது முற்றுந் தவறென் றெண்ணுகிறோம். வேத சாஸ்திரங்களைக் கடைந்தெடுத்துப் பாகவதம் செய்யப்பட்டது. அதற்கு ஏக

நாதர் செய்த பிராகிருத வியாக்கியானம் மணிகர்ணி கையில் முழுக்கத் தக்கதே. பண்டை நாளில் ஜைமினியாற் செய்யப்பட்ட பாரதத்தைத் துவைபாயனர் முழுக்கிப் புகழ் பெற்றானன்றோ. அவ்வாறு செய்தாற் பிராமணரெல்லாம் களிப்பர். இந்த க்ஷேத்திரத்தின் புகழ் ஓங்கும்'' என்று வாதித்தனர். மஹந்து "நான் ஏகநாதரை அதிகமாக வருத்தினேன். அவர் மனிதரல்லர், விஷ்ணு அவதாரம். நீங்களெல்லாரும் அவர் புஸ்தகத்தை மந்திர பூர்வமாகப் பூஜிக்க வேண்டும்'' என்றார். இவ்வாறு அவர் வேண்டியும் பண்டிதர்கள் பிடிவாதமாயிருந்தனர்.

**பாகவதத்தைக் கங்கை ரக்ஷித்தல்**

பண்டிதர்கள் ஏகநாதரைக் கேட்டு அவர் பாகவதத்தை வாங்கி விரைந்தெழுந்து போய் அதனை மணிகர்ணிகையில் வீசியெறிந்தனர். திடீரென்று ஓர் அற்புதம் நிகழ்ந்தது. பாகீரதி நதி தன் இரு கைகளையும் தூக்கிப் புஸ்தகத்தை ஏந்தியது. அக் கைகளில அழகிய மணியழுத்திய திவ்ய வளைகள் காணப்பட்டன. புஸ்தகம் கையில் இருத்தலைக் கண்டாரனைவரும் ஆச்சரிய மெய்தினர். ஜய ஜய முழக்கஞ் செய்து ஜனங்கள் கை கொட்டி ஆர்ப்பரித்தனர். சந்நியாசித் தலைவர் "சந்திர மௌலி எனக்குத் தரிசனந் தந்தார்'' என்று கூவி மணிகர்ணிகையிற் குதித்துத் தம் கைகளாற் புஸ்தகத்தைப் பற்றித் தம் தலைமே லேந்திப் பண்டிதரிடம் கொண்டு வந்தார். அவர்கள் முகத்தைத் தொங்க வைத்துக்கொண்டு அதைப் பார்த்தனர். மஹந்து "எச்சரிக்கை, இப்பொழுது ஏகநாதரைப் போய்ப் பணியுங்கள்'' என்றார்.

அவர்கள் கேட்டு ஸ்வாமி பாதத்திற் பணிந்து, "உம்முடைய வார்த்தையைக் கேளாததனால் நாங்கள் எல்லாவழியாலும் தவறிழைத்தோம். ஏகநாதர் பிரத்தியக்ஷ தெய்வம், இப்பொழுது உண்மையை யறிந்தோம்" என்றனர். பிறகு பண்டிதர்களெல்லாம் மடத்துள் நுழைந்து ஏகநாதர்க்கு மரியாதையாக அஞ்சலி செய்தனர். அவர்கள் புஸ்தகத்தை அவர்முன் வைத்து, "இஃது உம்முடைய அருள்வாக்கு, ஸ்ரீபாகீரதி தன் கைகளை யுயரத் தூக்கி அதனை அன்பாக ரக்ஷித்தாளே" என்றனர். ஸ்ரீ நாதர் பண்டிதர்களையும், மஹந்துவையும் எதிரே கண்டு அவர்களை நமஸ்கரித்தார். ஸ்வாமி பிராமணர்களை நோக்கி, "ஏகநாதரை அன்போடு பூஜியுங்கள்" என, அவர்கள் ஏகநாதரிடம், "இந்தச் சம்சார சாகரத்தினின்று உய்யுமாறு உம்மைப் பூஜிக்க எங்களுக்கு விடை கொடும்" என் றிரந்தனர். ஸ்ரீநாதரோ அவர்கள் பாதத்திற் பணிந்து, "அப்படிப்பட்ட தகாத காரிய மொன்றும் செய்யாதிருக்கப் பிரார்த்திக்கிறேன்" என்றார்.



## பத்தாம் அத்தியாயம்

**பண்டிதர்கள் பாகவதத்தைக் கவுரவித்தல்**

ஏகநாதர் பணிதலைக் கண்டு ஸ்வாமி வெட்கி, "உம்முடைய பெருந் தன்மையால் எம் கர்வத்தைத் தொலைத்தீர்" என்று சொல்லி, பூஜைக்கு வேண்டிய சாமக்கிரிகளை யெல்லாம் ஸித்தப்படுத்தி ஏகநாதரை மனப்பூர்வமாகப் பூஜிக்கும்படி பண்டிதர்களுக்கு ஆஞ்ஞை தந்தார். அவர்களுக்கு இருதயத்தில்

கவுரவ புத்தி யில்லை யாயினும் தாம் கண்ட அற்புதச் செயல் நோக்கி அவர் பாதத்தில் விழுந்தனர். ஏகநாதர் "நான் பிராமணர்கள் அடியார்க் கடியான். என்னைப் பூஜிப்பதை விட இந்தக் கிரந்தத்தை ஆதரத்தோடு பூஜிப்பீர்களாயின் அஃது எனக்குச் சந்தோஷத்தைத் தரும்" என்றனர். அவர்க ளெல்லாரும் ஏகநாதர் சொல்லியதைக் கேட்டு அவ்வாறே செய்ய உடன் பட்டனர்; அம்பாரி வைத்த யானை யொன்றைக் கொண்டு வந்து அதனைப் பல வகையாய்ச் சிங் காரிப்பித்தனர். மஹந்து ஏகநாதரைக் கிரந்தத்தோடு அம்பாரியில் வீற்றிருக்குமாறு வேண்டினர். ஏக நாதர் "அப்படிப்பட்ட அபராதம் நான் செய்யேன். கிரந்தத்தை அதில் வைத்து ஊர்வலஞ் செய்வித்தலே கிரமம். தமியேன் எவ்வகையிலும் உங்களுடைய பாததூளியை நாடும் ஒரு தாஸனே" என்றனர். பண் டிதர்களுள் எழுவர் செல்வ ரிருந்தனர். மஹந்து அவர்களுள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நாள் விருந்து செய்ய வேண்டுமென்று கட்டளை யிட்டார். ஸ்வாமி சொல்லியதை எல்லாரும் அங்கீகரித்தனர். இந்தப் பிரகாரமாகக் கிரந்தத்தை அம்பாரியில் வைத்துப் பெருங் கூட்டம் சூழ்ந்து வர, இன்னியங்கள் ஒலிக்க, வைணவர் ஜய ஜய முழக்கஞ் செய்து பகவந் நாம சங்கீர்த்தனம் செய்ய ஊர்வலஞ் செய்வித்தனர். ஆங்காங்கே ஜனங்கள் கூட்டங் கூடி இவ்வற்புதக் காட்சியைக் கண்டு களித்தனர். பொழுதுபடுமட்டும் ஊர்வலம் வரும்; இரவில் பாண வேடிக்கைகள் நடக்கும். புஷ்பங்களும்,கந்தங்களும் வாரி வாரி யிறைக் கப்பட்டன. காசி நகர முழுதும் ஏழு தினங்கள் பெருவிழாச் சந்தோஷமாகக் கொண்டாடப்பட்டது.

எல்லாரும் ஏகநாதர் பெருமையை எடுத்தியம்பினர். எட்டாம் நாள் ஊர்வலம் ஆரம்பித்த இடத்திற்குத் திரும்ப வந்தது. இங்கு ஒரு பெருங் கொண்டாட்டம் நடந்தது. மஹந்து பண்டிதர்களை நோக்கி, "பிராமணர்களுட் பிரமுகர்களை யெல்லாங் கூட்டி ஏகநாதர் வாக்கிலிருந்து ஒரு கீர்த்தனம் பக்தியோடு கேளுங்கள்" என்று ஆஞ்ஞாபித்தார். சந்நியாசித் தலைவர் இவ்வாறு சொல்லியது எல்லாருக்கும் திருப்தியைத் தந்தது. வித்வான்களும், வைணவ பக்தர்களும், வைதிகப் பிராமணரும், ஸந்தர்களும், மஹந்தர்களும், பக்த ஜனங்களும் மடத்திற் கூடினர். வீணை மிருதங்சம் முதலிய வாத்தியங்கள் முழங்க ஏகநாதர் கீர்த்தனஞ் செய்தபொழுது அவர் மனம் ஆனந்தத்தில் ஆழ்ந்தது. ஜனங்கள் விட்டலர் நாமங்களை யெடுத்துச் சொல்லிக் கரகோஷஞ் செய்தனர். எங்கும் ஜய ஜய சப்தம் நிறைந்தது. ஏகநாதர் பக்திரஸம் நிறைந்த கதைகளைக் கோத்துச சொல்லினர். அவற்றுட் சில ஞானத்தைப் போதிப்பன வாயினும் பக்தியின் பெருமையையே எல்லாம் காட்டின. ஸ்ரீநாதர் அருள் வாக்குகளைக் கேட்ட ஜனங்கள் ஸ்தம்பாகார மாயினர். பண்டிதர்கள் தம்மை மறந்திருந்தனர். பிராமணர் ஒருவரோ டொருவர், "ஹரி கீர்த்தனஞ் செய்வோர் பலருண்டு. ஆயினும் இவ்வளவு அதிசய பக்தியோடு செய்வோர் வேறொருவரு மில்லை" என்று சொல்லிக் கொண்டனர். ஸ்திரீ புருஷர்கள் "என்ன தத்துவ ஞானம்! ஆயினும், எவ்வளவு பணிவு! இவருடைய தந்தை தாயர் பாக்கியவந்தர்" என்றனர். கீர்த்தன காலக்ஷேபம் நான்கு நாள் நடந்தது. ஐந்தாம் நாள் 'கோபால் காலா' நடந்தது; ஸ்ரீ ஹரியின் லீலைகள்

நடித்துக் காட்டப்பட்டன. எல்லாருக்கும் மிட்டாய்கள் வழங்கப்பட்டன. காசி நகரத்துத் துவிஜர்க ளனை வரும் ஆபாலகோபம், "பாக்கியம், பாக்கியம். இவர் கண்கண்ட அவதாரமே" என்று கூவினர். சந்நியாசி களும் "ஸ்ரீ கிருஷ்ணன் அவதார காலத்திற் செய்த செயல்களை நாம் கண்ணாரக் கண்டோமே. இன்றைய உற்சவம் அற்புதம்" என்றனர். அப்பொழுது மஹந்து பண்டிதர்களை யெல்லாம் நோக்கி, "நீங்களெல்லாரும் கூடி உங்கள் கைப்பட ஏகநாதர் கிரந்தத்தைப் பிரதி செய்துகொள்ளுங்கள்" என்றனர். அவர்களும் அவ்வாறே செய்வோமெனச் சொல்லி ஒவ்வொரு அத்தியாயமாகப் பிரதி செய்தனர். மணிகர்ணிகைக் கரையில் இருந்து பண்டிதர்கள் ஏகாக்கிர மனத்தராய்க் கிரந்தத்தைப் பிரதிசெய்து ஸ்ரீராமநவமி யன்று முடித் தனர். அப்புறம் அவர்கள் அதனை மடத்திற்கு ஆத ரத்தோடு கொண்டு வந்து கொடுக்க, ஸ்வாமி பக் தியோடு பிரதி தினமும் அதனை வாசித்தனர். ஏகநாதர் இதன் பின் மஹந்துவிடம் விடைபெற்றுக் கொண்டு தம் நாட்டுக்குப் பிரயாணப்பட்டார். சந்நி யாசிகள் பண்டிதர்க ளனைவரும் கூடி நின்று அவர்க்கு வழி விட்டார்கள். ஸ்ரீ நாதர் பக்திபூர்வமாக அப் புண்ணிய நகர வாசிகளுக்குச் சாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்தார். ஏகநாதரோடு சிறிது தூரஞ் சென்று வழி விட்டு நகர வாசிகள் தம் நகரத்துக்குத் திரும்பி, இரவும் பகலும் ஏகநாதரது அத்தியற்புத குணத்தைக் கொண்டாடிக்கொண் டிருந்தனர்.

ஏகநாதர் ஆனந்தம் நிறைந்த மனத்தோடு புறப் பட்டுவந்தபொழுது, வழியில் எதிர்பாராத வண்ணம்

தாஸோபந்தரைச் சந்தித்தார். குழந்தைப் பருவமுதலே

**ஏகநாதர் வழியில் தாஸோபந்தரைச் சந்தித்தல்**

தாஸோபந்தர் ஸ்ரீ தத்தாத்ரேயரைக் கண்ணுற்று தரிசிக்க வேண்டுமென்று அபேக்ஷைகொண் டிருந்தார். இதற்காகக் கடுந் தவங்களும் உஞற்றினர். எப்படி யென்றாலோ, தம் உற்றார் உறவினரை யெல்லாம் விட்டுத் தனித்துக் காட்டகஞ் சென்றார்; உதிர் சருகுகளை யருந்தி யுயிர் தரித்தார்; தம்முடைய சரீரத்தைக் குறித்துக் கிஞ்சித்தும் கவனித்தவ ரல்லர்; வெறும் பாறை மீது சீதோஷ்ணங்களைப் பொறுத்து உறக்கங் கொண்டார். எங்காவது மனித வுருவம் எதிர் பாராது தோன்றினால் அங்கிருந்து ஓட்டம் பிடிப்பார்; இடையறாது ஸ்ரீ தத்தாத்ரேயரையே மனத்திற் சிந்தித்தார். இவ் வகைக் கடுந் தவ முஞற்றி அவர் கடைசியில் சரீர முண்மையையே முற்றும் மறந்தார். பாறைகள் மீது துயில் கொண்டதால் அவர் உடம்பெங்கும் புண்ணா யிருந்தது. இருபது வருஷ காலம் இவ்விதமாகத் தவஞ் செய்தார். கடைசியாகத் தத்தாத்ரேயர் அவர்க்கு முன் வெளிப்பட்டார். தத்தாத்ரேயர் அவரைத் தழுவியபொழுது அவர் சரீரம் திவ்ய சரீரமாயிற்று. ஸ்ரீ தத்தர் அனுக்கிரகத்தால் அவர் மஹா கவியுமானார். சற்குரு கடாக்ஷத்தாலும், நல் லூழாலும் அவருக்குப் பெருஞ் செல்வமும், பெரு மதிப்பும் ஏற்பட்டன. தாஸோபந்தர் அம்பாஜோகையில் வசித்து வந்தார். அவர் ஸ்ரீநாதர் புகழைப்பற்றிப் பலர் வாயிலாகக் கேட்டிருந்தார். ஏகநாதர் காசி யாத்திரையிலிருந்து திரும்பி வந்தபொழுது இருவரும் தற்செயலாக எதிர்ப்பட்டனர். உளங் கொளா மகிழ்ச்சியோடு

ஒருவரை யொருவர் தழுவினர். தாங்கள் அடைந்த ஆனந்தப் பேற்றைக் குறித்து உரையாடினர். ஏகநாதர் இன்பமீதூர, "இப்படிச் சந்தித்தது பெரும் பாக்கியம்!" என்றனர். ஆத்மாவில் ஆனந்தம் ததும்பத் தாஸோபந்தர் ஏகநாதரைத் தமது வீட்டுக்கு அழைத்துச் சென்று மனமார அவரை யுபசரித்து விருந் துண்பித்தார். அப்புறம் பாகவத காலக்ஷேபம் நடந்தது. இரவில் ஹரி கீர்த்தனம் கேட்டவர்களை யெல்லாம் களிப்பித்தது. இவ்வாறு ஒரு மாதஞ் சென்றது. ஏகநாதர் விடை கேட்டனர். தாஸோபந்தர் பிரயாணத்திற்கு வேண்டிய குதிரைகளும், செலவிற்கு வேண்டிய பணமும் பெற்றுக் கொள்ளுமாறு ஏகநாதரை மிகவும் வேண்டினர். ஸ்ரீ நாதர் உலக விஷயங்களில் வைராக்கிய முடையவராதலால் தாஸோபந்தர் செல்வத்தைப் பெற மறுத்தனர். ஒரு குதிரைகூட வேண்டா மென்றனர். "ஏனென்றால் வழி கஷ்டமானது" என்றார். விடை கொண்டபொழுது ஏகநாதர் தாஸோபந்தரை நோக்கி, "என்னுடைய கிருகத்தில் கிருஷ்ண ஜனனோற்சவம் கொண்டாடப் போகிறேன். அச்சமயம் தாம் பிரதிஷ்டானத்துக்கு வர வேண்டும்" என்றனர். அவரும் "அவசியம் வருவேன்" என் றுரைத்தார். ஒருவரை யொருவர் நமஸ்கரித்ததும் ஏகநாதர் பிரயாணத்தைத் தொடங்கி வேகமாக முடித்துப் பிரதிஷ்டானம் புக்கார்.

அவர் நகரத்தைச் சமீபித்ததும் சங்கதி உத்தவருக்கு எட்டியது. பஞ்ச காலத்தில் மழைகண்ட பூமி போல அவர் பேரானந்தங் கொண்டார். சின்

னங்கள், கொடிகள், வாத்தியங்கள், கந்தங்கள், துளசி புஷ்ப ஹாரங்கள் முதலியவற்றை எடுத்துக்கொண்டு நகரத்து மாந்தரும் பக்த சிகாமணிகளாகிய வைணவர்களும் ஆரவாரத்தோடு ஆடிப் பாடிக்கொண்டு ஏக நாதரை யெதிர் கொள்ளப் போயினர். ஸ்ரீநாதர் உருவைக் கண்ணாரக் கண்டதும் அவர்கள் ஆனந்தத் தாழ்ந்தனர். விட்டல் விட்டல் என்று முழக்கஞ் செய்து அவர்கள் அவர்முன் சாஷ்டாங்கமாக விழுந்தனர். அன்பு நிறைந்த உத்தவர் அவர் பாதத்தில் விழுந்து வணங்கினார். ஏகநாதர் அன்பை யடக்க முடியாதவராய்த் தம் இருகைகளாலும் அவரைத் தழுவினர். உத்தவர் அவர்க்குக் கந்தமும் துளசியும் சமர்ப்பித்து, மாலையுங் கழுத்தி லிட்டார். விட்டல் நாம முழக்கஞ் செய்து வைணவர்கள் "உம்மைத் திரும்ப ஊர்க்கழைக்கும் பாக்கியம் பெற்ற ஜனங்களுக்கு இந்த நாளே நன்னாள்" என்றனர். ஸ்ரீஹரியினது சுகுணங்களைப் பாடிக் கொண்டும் ஆடிக்கொண்டும் ஸ்ரீநாதர் நகரத்துட் புகுந்தார். இன்னியங்கள் ஒலித்தன. ஜனங்கள் கையிற் கந்த புஷ்பங்களை வாரிவாரி யிறைத்தனர் இவ்வாறு கவுரவிக்கப்பட்டு ஸ்ரீநாதர் வீட்டுள் நுழைந்ததும் அவர் கண்கள் பாண்டுரங்கர்மேல விழுந்தன. ஸ்ரீநாதர் அவர்க்குச் சாஷ்டாங்க நமஸ்காரம் புரிந்து இனிமையான பாடல்கள் பாடிக்கொண்டே பூஜைகள் செய்தார். வந்தவர்க ளனைவருக்கும் திருப்தியுண்டாகும்படி மிட்டாய்கள் வழங்கினார். அவர்கள் பிரயாண சங்கதி வினவினர்; அவர் தம்முடைய ஆசனத்தில் இருந்து பிரியமாகச் சங்கதிகளெல்லாம் சொல்லினார். இராத்திரி நான்காம் யாமத்தில் ஜனங்க ளெல்லாம்

**ஏகநாதர் பிரதிஷ்டானஞ் சேர்தல்**

வீட்டுக்குப் போயினபின் கிரிஜாபாய் தன் கையால் அவருக்குச் சிற்றுண்டி கொடுத்தனள். ஒரு கீர்த்தனம் செய்த பிறகு ஏகநாதர் சிறிது கண்ணுறங்கினர்.

**தாஸோபந்தர் வருகையும் கிருஷ்ண ஜன்ம விழாவும்**

இரண்டு மாதங்கள் கழிந்தன. கிருஷ்ண ஜன்ம விழா வந்தது. வழக்கம்போல உத்தவர் வேண்டியன ஸித்தஞ் செய்ய ஆரம்பித்தார். ததியாராதனைக்கு வேண்டிய சாமான்கள் ஏராளமாகச் சேகரித்தார். சுவர்களை உள்ளும் புறம்பும் தீற்றி அவற்றிற் சித்திரங்கள் வரைவித்தார். திடீரென்று, பூர்ணிமையன்று, தாஸோபந்தர் விழாவிற்காக வந்து சேர்ந்தனர். ஏகநாதர்க்குச் சமாசாரம் தெரியாது. எதிர் பாராத விதமாய்த் தாஸோபந்தர் தலைவாயிலின்கண் தோன்றினார். ஓர் அற்புதக் காட்சி அப்பொழுது காணப் பட்டது. ஸ்ரீ தத்தர் சூலங் கையிற் கொண்டு வாயிலில் துவாரபாலகராய்க் காத்திருந்தார். அவரைத் தாஸோபந்தர் கண்டதும் திக்பிரமை கொண்டார். அவர் பல்லக்கி லிருந்து குதித்துச் சாஷ்டாங்க நமஸ்காரஞ்செய்து தத்தரைத் தழுவி, "நீர் ஏன் இங்குப் போந்தீர்?" என்று வினவினார். அநஸூயா புத்திரர் அதற்கு விடையாக, "ஏகநாதன மானுட பக்தனல்லன், சாக்ஷாத் பாண்டுரங்காவதாரம். உலகம் உஜ்ஜீவித்தற்காக அவன் இக் கலியுகத்தில் அவதரித்துள்ளான். பூர்வ புண்ணிய மிகுதி யிருந்தால் மட்டுமே அவனுக்குத் தொண்டுபுரியும் பாக்கிய முண்டாம். இது சத்திய மென்பதை அறி. நான் இச் சூலத்தைக் கையி லேந்தி வாயிலை நன்றாகக் காக்கிறேன். உட்சென்று நீ வந்திருப்பதை ஏகநாதற்

குணர்த்துவேன். அதுவரை உள்ளே வராதே'' என்றார். அவதூதர் இவ்வண்ணஞ் சொல்லத் தாஸோபந்தர் ஆச்சரியத்தாற் பரவசராய் ஏகநாதரை வாழ்த்தி, "அவர் பெருமையை அறியாமற் போனேனே'' என்றார். ஸ்ரீ தத்தர் ஏகநாதரிடம் சென்று தாஸோபந்தர் வந்திருப்பதை யறிவித்தார். ஏகநாதர் உத்தவரோடு வெளியே வந்து அன்போடு அவரை நமஸ்கரித்தனர். அவர்கள் ஒருவரை யொருவர் வணங்கித் தழுவிக் கொண்டனர். ஏகநாதர் தாஸோபந்தரைக் கையைப் பற்றி வீட்டுள் அழைத்துச் சென்றார். உத்தவர் அவருடைய பல்லக்குகளுக்கும் வண்டிகளுக்கும் வேண்டிய ஏற்பாடு செய்தார். உடன வந்தவர்களுக்குச் சமையலுக்கு வேண்டிய வஸ்துக்கள் தாராளமாகக் கொடுக்கப்பட்டன. பூர்வத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் அவதரித்த காலே உத்தவர் அவருக்குப் பரமாப்தரா யிருந்தார். பகவானைச் சேவிக்கும் ஆசை உத்தவருக்கு அப்பொழுது பரிபூர்த்தியாகவில்லை. பூர்வ ஜன்மத்தில் இருவரும் நண்பரா யிருந்தமையால் இப்பொழுது ஏகநாதர்க்குத் தநயங் கருதாமற் பணி செய்யும் சந்தர்ப்பம் உத்தவருக்கு வாய்த்தது. தாஸோபநதர் ஸ்நானஞ் செய்து முடித்து ஏகநாதரோ டுண்டார். இரவெல்லாம் ஹரி கீர்த்தனங் கேட்டுக் கொண்டிருந்தார். இரவியு முதித்தது. ஏகநாதர் பாண்டுரங்க விக்கிரகத்திற்கு அபிஷேக அலங்காராதிகள் செய்து பூஜை புரிந்தார். வாயிலில் உற்சவத்துக் குரிய இன்னியங்கள் ஒலித்தன. பாடல்கள் பாடப்பட்டன. பிராமணர் வேதமோதினர். புஷ்பாஞ்சலி சமர்ப்பணத்தோடு பூஜை முடிந்தது. பகலிற் பிராமண சமாராதனை; இரவில் ஹரி கீர்த்தனம். பக்ஷத்துப் பிரதமை முதல்

நவமி வரை உற்சவம் ஆடம்பரமாகக் கொண்டாடப் பட்டது. தசமி யன்று கோபால்காலா ஆட்டம் அழ காக நடிக்கப்பட்டது. தாஸோபந்தர் மன நிறைந்த ஆனந்தத்தோடு எல்லாங் கண்டு, "ஸ்ரீ ஏகநாதருடைய நாடக சாமர்த்தியத்தையும் தத்துவஞான காம்பீர் யத்தையும் என் கண்ணுரக் கண்டேன். தத்தருடைய தாசனென்று என்னை எண்ணியிருந்தேன். என் கண் ணுர ஏகநாதர் பெருமையைக் கண்ட பின் துவைத பாவ மொழிந்தேன்" என்றார். மஹோற்சவம் முடிந் ததும் துவாதசியன்று விருந்து நடந்தது. தாஸோ பந்தர் விடைகொண்டு தம் ஊர்க் கேகினர்.

**தம்மேல் துப்பிய துலுக்கனுக்குப் பச்சாத்தாபம் வருவித்தல்**

ஏகநாதரைப் பற்றி இன்னும் பல அற்புத கதை கள் உண்டு. ஒருநாள் ஏகநாதர் கங்கையில் ஸ்நானம் முடித்து வீட்டுக்கு வந்துகொண்டிருந்தார். நகர் வாயிலருகில் ஒரு போக்கி ரித் துருக்கன் உட்கார்ந்துகொண் டிருந்தான். அவன் பூமியிற் துப்பப்போகும் சமயம் ஏகநாதர் தெருவில் வந்தார். துருக்கன் பூமியைப் பார்த்துத் துப்பினுன்; அவன் எச்சில் ஏகநாதர்மேல் விழுந்தது. ஆயினும் அவர்க்குச் சிறிதும் கோபம் வர வில்லை. சிலர் பூமியை வணங்குகின்றனர்; வேறு சிலர் மலாதிகளை அதில் இடுகின்றனர். பூமிதேவி எப்படித் தன்னுடைய சுகதுக்கங்களைத் தனக்குள்ளே வைத்துக்கொண்டு விருப்பு வெறுப்புக்களை வெளிக் காட்டுவதில்லையோ, அப்படியே இவ் வறிவிலி அறியா மல் ஏகநாதர்மேல் துப்பியபொழுது அவர்க்குக் கோபம் வரவில்லை; அவனுக்காக அவர் மிகவும் இரங்கிஞர்.

"இவன் ஒரு குற்றத்தைச் செய்தான், நரகத்துக்குப் போவான். இவன் பச்சாத்தாபப் படுவதற்கு வேண்டிய மார்க்கத்தைத் தேடவேண்டும்' என்றெண்ணி, அவர் நதிக்குப் போய் மீண்டும் நீராடி வீட்டுக்குத் திரும்பிவந்து விஷ்ணுபூஜை செய்தார். தேவர்க்கும் அக்கினிக்கும் பலி யாகுதிகளைச் சமர்ப்பித்தபின் பிராமண சமாராதனையை ஆரம்பித்து முடித்தார். அப்புறம் அவர் இருவர்க்குப் போதுமான உணவை ஒரு பாத்திரத்தில் இட்டு அத் துருக்கன் வீட்டுக்கு அதனைக் கொண்டுபோய் அவனை வணங்கி, "இதனைத் தயை செய்து ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்று மரியாதையாகச் சொன்னார். துருக்கன் மேன் மூடியைத் திறந்து பார்த்து அது தேவப் பிரசாதமென்று கண்டு, தன் குற்றத்தை எண்ணிப் பச்சாத்தாபப் பட்டு, "போக்கிரிப் பயலும் பரம துஷ்டனும் பிராமணத் துரோகியும் இழிந்தாருள் இழிந்தவனுமாகிய தமியேன செய்வ தின்னதென்று சிறிதும் சிந்தியாமல் தேவரீர் மீது துப்பினேன். இந் நகரத்தில் தேவரீர் நல்லோருள் நல்லராய் எல்லாராலும் கவுரவிக்கப் படுகிறீர். பெருந்தகையே, நான் செய்த குற்றத்தை மன்னியும்" என்று சொல்லிப் பூமியில் தண்டாகாரமாக விழுந்தான். ஸ்ரீநாதர் அவனைத் தூக்கியெடுத்து அன்பாக அணைத்துக் கொண்டு, "நான் பார்த்து நடந்திருந்தேனால் நீ இக் குற்றம் செய்திருக்க நேர்ந்திராது. திடீரென்று அறியாமற் செய்த இத் தவறு உன்னை அதிகம் பாதியாது. இப்பொழுது அதனை நினைந்து மனப்பூர்வமாக வருந்தினையாகலின் அக் குற்றத்திற்குப் பரிகாரம் வேறு வேண்டா. என்மேல் துப்பிய குற்றம் இனி யில்லை

யென்பதை ஞாபகத்தில் வை'' என்று சொல்லி வீட்டுக்குத் திரும்பிவந்தார்.

**மஹார் ஸ்திரீயின் குழந்தையை சுடுமணலிலிருந்து காத்தல்**

ஒருநாள் நண்பகலில் ஏகநாதர் கங்கைக்கு வந்தார். பிரம யஞ்ஞத்தை முடித்து அவர் வீட்டுக்குச் செல்ல விரைந்தார். அது வைகாசி மாதம். வெயில் கொடுமையா யிருந்தது. நதிக் கரையில் மணல் அதிகமாகச் சூடேறி யிருந்தது. மணலின்மேல் ஒரு சிறுவன் கோவென் றலறிக்கொண் டிருந்தான். அதைப் பார்த்த ஏகநாதர்க்கு மனம் இளகிற்று. ''ஐயோ, அவன் இப்பொழுதே உயிர் துறப்பானே!'' என்று நினைத்து அவர் அவனைத் தூக்கி இடுப்பில் வைத்துக்கொண்டு தன்னுடைய ஆடையால் அவன் கண்களைத் துடைத்து அவனிடத்தில் அன்பாகப் பேசினார். ''உன் வீடு எங்கே?'' என்று கேட்டார். அச் சிறு குழந்தைக்குப் பேசக் கூட முடியவில்லை. தன் விரலால் அது வீடு இருக்குமிடத்தைக் காட்டிற்று. அக் குடிலருகில் அவர்கள் வந்தபொழுது அக் குழந்தையின் தாய் வந்தாள். அது ''அம்மா அம்மா'' என்று கத்திற்று. ஏகநாதர்க்கு அப்பொழுது சங்கதி விளங்கிற்று. 'அவள் ஒரு மஹார் ஸ்திரீ போலத் தோன்றுகிறாள்' என்று தம்முள்ளே நினைத்தார். சிறுவனை ஏகநாதர் கீழே விட்டதும் அவன் தாயிடத்து ஓடினான். ஏகநாதர் நதிக்குப் போய்ச் சசேல ஸ்நானஞ்செய்தார். இந்தக் கருணாவதாரம் தேஹத்தை யுலர்த்தித் துவாரகை மண்ணால் நெற்றியிற் குறிவைத்துக்கொண்டு வீட்டுக்குத் திரும்பி வந்து சந்தோஷ

மாகத் தம் போஜன முடித்தார். ஏகநாதர் மஹார் ஸ்திரீயின் குழந்தையை இடுப்பி லெடுத்த சங்கதி நகரத்துப் பிராமணர் எவர்க்கும் தெரியாது. ஆயினும் அவருடைய புகழை எங்கும் பரவச் செய்ய விரும்பிய பாண்டுரங்கர் அதற்கு ஒரு வழி செய்தார்.

**குட்டரோகி குட்டந் தீர்தல்**

ஒரு பிராமண பண்டிதனிருந்தான்; அவனுக்கு அழிகுட்டம். அவன் மனத்திற் பச்சாத்தாபப்பட்டுத் திரியம்பகேசுவரர் சந்நிதியில் அருந் தவஞ் செய்தான். மஹா பாதக மொன்றைப் புரிந்ததன் பயனாகத்தான் இக் கொடிய வியாதி அவனைப் பற்றி வருத்தியது. தன்னுடைய பூர்வ தேகசுகத்தை யடையும்படி அவன் தவ முஞற்றினன். சமைத்த வுணவு மறுத்துக் கந்தமூலங்களை யுண்டு ஜீவித்தான். விதிப்படி பன்னீரியாண்டு அவன் இத் தவ முஞற்றினன். திடீரென்று திரியம்பகேசுவரர் அவனுக்குக் கனவில் வெளிப்பட்டு, "கோதாவரிக் கரையில் பிரதிஷ்டானமென்றொரு பட்டணம் உளது. அங்குச் செல். அங்கே ஏகநாதனென்றொரு வைணவ பக்தன், பிராமண சேவையி லீடுபட்டவன், சர்வ ஜீவர்களிடத்தும் தயையுள்ளவ னிருக்கின்றான். அவன் ஒரு விசேஷ புண்ணியம் புரிந்துளான்: ஒரு நாள் மணல் சுணல்போற் சுட்டுக்கொண் டிருந்தபொழுது ஒரு சண்டாளச் சிறுவன் அதன்மேற் கிடந்தான்; ஏகநாதன் அவனைத் தடவிக் கொடுத்துத் தன் இடுப்பி லெடுத்து அவன் தாயிடத்துக் கொண்டு சேர்த்தான். அவன் இப் புண்ணியத்தை உனக்குத் தருவானாயின் நீ உடனே சுகப்படுவாய்" என்றுரைத்தார். இக் கனவு கண்ட பிராமணன்

வியப்புடன் விழித்தான். பிரதிஷ்டானத்துக்கு வந்து அங்கு ஜனங்களைக் கேட்க ஆரம்பித்தான். "இங்கு ஏகநாதரென்றொரு வைணவ பக்த ருண்டன்றோ? அவர் வீடு எங்குளது?" என்றான். அச் சமயம் ஏகநாதர் கோதாவரியில் நீராடிக்கொண் டிருந்தார். ஜனங்கள் அவரை அவனுக்குக் காண்பித்தனர். உடனே பிராமணன் நீருள் இறங்கி ஏகநாதரிடஞ் சென்று தன் கதையைச்சொல்லி, "நீர் ஒரு சண்டாளச் சிறுவனை இடுப்பி லெடுத்தீர். அப் புண்ணியம் உம் கைவச முளது. உமாநாதராகிய ஸ்ரீ திரியம்பக ராஜர் எனக்கு அதைச் சொன்னார்" என்று முடித் தான். ஏகநாதர் முகத்துப் புன்னகை யரும்ப, "யான் பிறந்தது முதற் செய்துள்ள புண்ணிய மனைத்தையும் உனக்குத் தருவேன்" என்று பதி லுரைத்தார். பிரா மணன் "அவ்வளவுக்கு நான் பாத்திரனல்லேன். திரி யம்பகேசுவரர் எனக்குச் சொல்லிய அதனை மாத் திரமே எனக்குக் கொடும்" என்றான். ஏகநாதர் கையில் நீரை யள்ளிக் குட்டரோகி கையில் விட்டார். அழிகுட்டம் உடனே மறைய அவன் தேகம் அழ காகத் திகழ்ந்தது. அவன் ஏகநாதரை நமஸ்கரித்தான். இதுகண்ட அப் புண்ணிய நகரத்து ஆண்களும் பெண் களும் நமஸ்காரஞ் செய்தனர். பெரிய துவிஜோத்த மர்களும் "ஏகநாதர் செயல் அற்புதமானது; அவர் தீயர் தீமையை நன்மையாக மாற்றுகின்றார்" என்று தம்முட் சொல்லிக்கொண்டே நமஸ்காரஞ் செய்து விம்மிதராயினர்.

ஒருநாள் பக்தர்களும் உத்தவரும் சேர்ந்து ஏக நாதரிடம் ஒன்று வேண்டினர்: "ஸ்வாமிகள் பாக

வதம் பதினொராவது ஸ்கந்தத்திற்கு மராட்டி வியாக்கியானஞ் செய்துள்ளீர்கள். தங்கள் வாயால் அதைக் கேட்க வேண்டுமென்று நாங்கள் மிகவும் ஆசைப்படுகிறோம்.'' ஏகநாதர் அவர்களுடைய ஆவலைக் கண்டு சந்தோஷித்தார்; ஒரு நல்ல நாள் தெரிந்துகொண்டு பாகவதம் வாசிக்கத் தொடங்கினார். நகரத்திலுள்ள பக்தஜனங்களனைவரும் கேட்க வந்தனர்; ஆற்றொழுக்குப் போல் இருந்த ஏகநாதர் வாக்கை ஏகாக்கிரமாகக் கேட்டனர். அங்கு விசேஷ காரியமொன்று அப்பொழுது நிகழ்ந்தது. கங்காதேவியானவள் ஒரு சுந்தர வனிதையின் உருவமெடுத்து அதனைக் கேட்க வந்தாள். அதற்கு முன் அத்தகைய ஸ்திரீயை யாரும் அங்குப் பார்த்ததில்லை. அப்படிப்பட்ட சுந்தர ரூபத்தோடு விஷ்ணு புத்திரியாகிய அவள் ஏகநாதர் முன் வந்து உட்கார்ந்து புராணங் கேட்டாள். அங்கு வேறு ஸ்திரீகளும் இருந்தனர். இவள் எங்கே அவர்கள் எங்கே! அவள் ஏகநாதர் வாயிலிருந்து வரும் ஒவ்வொரு வார்த்தையையும் வெகு கவனமாகக் கேட்டாள். மனத்தை பலையாது நிறுத்தவே தன்னை மறந்தாள். பக்தி ரஹஸ்யத்தை விளக்கும் கதை வந்த கட்டங்களில் அவள் அன்புமயமானாள்; அவள் கண்களினின்று கண்ணீர் தாரை தாரையாகப் பெருகிற்று. ஜனங்கள் பார்த்துக்கொண்டிருந்தனர். கேட்பவர்களுள் சில துஷ்டர்களும் இருந்தனர். அவர்கள் மனத்தில் ஐயுறவு கொண்டனர்: “இவ்வழகிய மடந்தை எங்கிருந்து வருகின்றாள்? இந்தப் பிரதிஷ்டான நகரத்தில் இதற்கு முன் இவளை நாம் பார்த்ததில்லை; எனினும், நாள் தவறாமல் வந்து

கங்காதேவி பாகவதங் கேட்க வருதல்

ஆர்வத்தோடு பாகவதம் கேட்கின்றாள். மற்ற ஸ்திரீகள் கூடி யிருக்கு மிடத்தி லிராமல் ஒதுங்கி உட்கார்ந்துகொள்ளுகிறாள். கலியாண மானவள்போ லிருக்கிறது; சிறு பிராயமா யிருக்கிறது. ஆனால் ஒருவரோடும் பேசக் காணோம். அவள் ஏகநாதரைக் கவனமாய்ப் பார்த்து அவர் சொல்வதைக் கூர்ந்து கேட்கிறாள்.'' இத் துஷ்டர்கள் இம் மாதிரி அவளைச் சந்தேகித்து ஊரில் அவள் வரலாற்றைப் பரவச் செய்தனர். சிலர் அவளைத் தங்கள் கண்களாற் பார்த்து அவள் எத்தகைய சுந்தரி யென்று அறிய விரும்பிப் பாகவதங் கேட்பதற்கு வருவதுபோல் நடித்து வந்தனர். இவ்வாறு பல நாட்கள் சென்றன; ஒரு நாள் புராணம் முடிகிற சமயம்; அவள் இருப்பிடத்தைத் தெரிந்துகொள்ள எண்ணிய இத் துஷ்டர்கள் "புராணம் முடிந்தவுடனே அவள் பின்னே போய்த் தூரத்திலிருந்தே அவள் எவ்விடத்தவ ளென்று கண்டுபிடிப்போம். அவள் தன் வீட்டுக்குத் தானே எஜமானியா, அல்லது அவள் தன் தாய்வீட்டி லிருக்கிறாளா, அல்லது மாமியார் வீட்டி லிருக்கிறாளா? ஒருவர் உத்தரவு மின்றி இங்கு வருவதாகத் தோன்றுகிறதே'' என்றனர். இவர்கள் இவ்வாறு தம்முள் தீர்மானித்துக் கொண்டிருந்த பொழுது புராண படனம் முடிவு பெற்றது. கங்கை ஏகநாதருக்கு அன்போடு நமஸ்காரஞ் செய்து அவர் உருவத்தைத் தன் மனத்திலிருத்திப் புறப்பட்டாள். துஷ்டர்கள் ஒருவரோ டொருவர் கண் சிமிட்டிக்கொண்டு அவளைத் தொடர்ந்தனர். சிலர் அவளுக்கு முன்னே போயினர்; சிலர் பின்னே போயினர். இதனிடையில் அழகும் சீலமும் அமைந்த அவ் விஷ்ணுபுத்திரி கோதாவரிக்

கரை வந்து சேர்ந்தாள். ஒரு நிமிஷம் ஜலம் தன் கணைக்காலண்டை நிற்கு மிடத்து நின்றாள். சிறிது நீரைத் தன் கையி லள்ளி யுறிஞ்சிவிட்டு உடனே மறைந்தாள். மேகத்துள் மின்னுத் தோன்றி ஒரு கணத்தே மறைதல்போல அவள் தன் ஒளியுருவைக் காட்டி மறைந்தாள். துஷ்டர்களுக்கு இப்பொழுது உண்மை தெரிந்தது. அவர்கள் "சமுத்திரத்தை நோக்கிச் செல்லும் கோதை ஸ்திரீயுருவ மெடுத்துப் பாகவதம் கேட்க வந்துகொண் டிருந்தாள். நம் மடமைதா னென்னே! நம் இருதயங்கள் சந்தேகத்தாற் புழுங்கினவே. ஸ்ரீ நாதர் விஷ்ணு அவதாரமே யாவர். நாம் அவரை மனிதருகக் கணிக்கப் படாது. கண்ணாடிக் குப்பியி லிருக்கும் அமிருதத்தைக் கூர்ந்து நோக்குகிறவன் அது மது வென்று தவறி யுணர்வதுபோல நாம் செய்தோம்" என்று பச்சாத்தாபப்பட்டுச் சந்தியாதிகளைச் செய்துவிட்டு விம்மிதராய் வீடு திரும்பினர். மறுநாள் மூன்றாம் யாமத்தில் அவர்கள், மறுபடியும் புராணங் கேட்க வந்தவர்கள், ஏகநாதரை நமஸ்கரித்துத் தங்கள் இடங்களிலிருந்தனர். ஏகநாதர் புஸ்தகத்தை எடுத்துக் கவசத்தை நீக்கி, "கேட்பவர்களுள் ஒரு ஸ்திரீ இன்னும் வரவில்லை. அவள் மிகவும் தாமதித்தாள்" என்று சொல்லிக்கொண்டு சிறிது தாழ்த்தனர். அச் சந்தேகப் பிராணிகள் முன் வந்து ஏகநாதர் காலில் விழுந்து மனமிரங்கிச் சங்கதி முழுதையுஞ் சொல்லினர். "அழகும் மனோஹரமு மமைந்த நதி இங்குத் தவறாமற் புராணங் கேட்க வந்துகொண் டிருந்தாள். மனத்திற் சந்தேகங் கொண்டு நாங்கள் அவளைப் பின் தொடர்ந்தோம். அவள் கோதாவரியில் அடியெடுத்து வைத்து

அக்கணமே மறைந்தாள். அவள் கங்கா தேவியென்று அப்பொழுதுதான் உணர்ந்தோம். நாங்கள் துஷ்டர்கள், புண்ணியமில்லாதவர்கள்; ஆதலால்தான மனத்தில் ஐயுறவு கொண்டோம்; இதனால் ஒரு மஹாபாதகத்தைச் செய்தவர்களாயினோம். நாங்கள் செய்ததைப் பொறுக்க" என்றனர். ஸ்ரீநாதர் மனத்தில் ஆனந்தம் நிறைந்தவராய், "இப்பொழுது ஒரு பெரும் புண்ணியம் உங்கள் வசமாயிற்று. கோதையை உருவத்தோடு நீங்கள் பார்த்தீர்கள்; இதனால் உங்கள் பாபம் தொலைநதது. இனி மனத்தில்' ஐயத்தை விட்டுப் பாகவதத்தைக் கேளுங்கள். இப்பொழுது உங்கள் பெருமையைக் கணிக்க நான் வல்லேனல்லேன். நீங்கள் ஓர் அற்புதம் கண்டீர்களே!" என்றனர். இப்படி அவர்களைத் தேற்றி அவர் புராணம் வாசிக்கத் தொடங்கினர். ஏகநாதர் அற்புதச் செயல்களைக் கண்ட ஜனங்கள் களிகொண்டனர்.



## பதினொராம் அத்தியாயம்

**ஏகநாதர்க்கு அருகில் வசித்த வணிகன் உய்தல்**

இன்னும் ஒரு கதை. ஏகநாதர் வீட்டுக்குச் சமீபத்தில் ஒரு வணிகன் வசித்தான். அவன் துன்மார்க்கன், பக்தியில்லாதவன். அவன் ஏகநாதர் வீட்டுக்குப் போனதேயில்லை. அவன் எங்கும் புராணப் பிரசங்கம் கேட்கப் போகான; ஹரி கீர்த்தனங்கள் கேட்கவும் போகான். கோதை நதி அவன் சமீபத்தில் இருந்தாலும் அவன் வீட்டில் வெந்நீரிலேயே குளிப்பான். அவன் சந்தியாவந்தனஞ் செய்

தது கிடையாது, சிராத்தமும் செய்த தில்லை. நித்தி யம் இரண்டு வேளை யுண்டான். தன் குடும்ப க்ஷேமத் தையே கவனித்தான். ஏகநாதர் அவன் வாழ்ந்த மாதிரி யைப் பார்த்தபொழுது அவனிடத்துப் பெரியதோ ரிரக்கம் அவர் மனத்தில் தோன்றிற்று. அவர் எண்ணு வார்: "இவன் பெறுதற்கரிய மனிதப் பிறவியைப் பெற்றும் அநாவசியகமாய் நரகத்துக்கு வழி தேடுகின் ருன். இவன் எனக் கருகில் வசிப்பவனு யிருத்தலால் இவன் மனத்தில் நல்லெண்ணங்கள் உதித்து இவன் மோக்ஷத்துக்கு வழி தேடும்படி ஓர் உபாயஞ் செய்ய வேண்டும்". இவ்வாறெண்ணி, அவர் தெருவுக்குப் போய் அவனைச் சந்தித்தார். அவர்க ளிருவரும் ஒரு வரை யொருவர் வார்த்தையால் வணங்கினர். ஏகநாத ரிடத்து வைத்த சிறிது கவுரவ புத்தியால் அவன் ஒரு நிமிஷம் சும்மா நின்ருன். ஏகநாதர் அவனை நோக்கி, "உன்னைச் சார்ந்தவர்கள் யார்? நீ என்ன வியாபாரஞ் செய்கின்ருய்? குடும்பத்தை எப்படிப் பாதுகாக்கின்ருய்?" என்று கேட்டார். வணிகன் கேட்டுப் பதிற் சொன்னுன: "எனக்கு வீட்டில் புத் திரரும் மனைவியும் உண்டு. நான் உம் பக்கத்தில் தான் வசிக்கிறேன். கொடுக்கல் வாங்கல் செய்கிற ஒரு வியா பாரியினிடம் நான் உத்தியோகமா யிருக்கிறேன். அவன் எனக்குச் சம்பளம் கொடுக்கிருன்; அதைக் கொண்டு காலந தள்ளுகிறேன்." இதன்மேல் ஸ்ரீநாதர் "நான் உன்னை ஒனறு வேண்டுகிறேன்" என்ருர். விஷயங்களில் வைத்த பற்றினுற் குருடனுய்ப் பெரிய பிசுநனுன அவன் மனத்திற் பெரும் பயம் உண் டாயிற்று; அவன் பதிலொன்றுஞ் சொல்லவில்லை. ஏகநாதர்க்கு அவன் எண்ணந் தெரிந்தது. அவர் "உன்

னிடத்தில் பணமாவது வேறு பொருளாவது வாங்க எனக்கிச்சையில்லை. கீர்த்தனங்கள் நடக்கும் சமயத்தில் என் வீட்டுக்கு வருதற்குக் கொஞ்சம் சாவகாசம் தேடிக்கொள்ள வேண்டுமென்றுதான் கேட்கிறேன்" என்றார். அவன் "எனக்கு அவகாசமே கிடையாது. நித்தியம் வேண்டுபவைகளைத் தேடுவதற்கு எனக்குக் காலம் சரியாயிருக்கிறது" என்றான். ஏகநாதர் "நான் சொல்வதைக் கேள். ஸ்ரீ விஷ்ணு சகச்சிரநாமத்தில் ஒரு சுலோகம் சொல்லுகிறேன். அதைப் பாடம் பண்ணு. அஃது எனக்குப் பூர்ண திருப்தியைத் தரும்" என்றார். ஏகநாதர் குரலைக் கேட்டபொழுது அவன் மனம் பக்தியால் நிரம்பியது. ஏகநாதர் சுலோகத்தை ஒரு துண்டுக் காகிதத்தில் எழுதி அதனை அவன் வாசிக்கும்படி செய்தார். ஏகநாதர் தம் தாமரைக் கையால் அவனை மெல்லத் தடவிக் கொடுத்தபொழுது அவன் இருதயம் உடனே மாறுதலடைந்தது. அவன் சுலோகத்தை மனத்திலமைத்துச் சீக்கிரமாகப் பாடம் பண்ணினான். அடுத்த நாள் அவன் ஏகநாதரிடம் வந்து இன்னும் ஒரு சுலோகம் வேண்டுமென்றான். சிறிது நாள் செல்லுமுன்னமே அவன் சகச்சிரநாம முழுதும் பாடம்பண்ணி விட்டான். ஸ்ரீநாதர் அதற்கு மேல், ஸ்நானம் செய்தவுடனே ஒருவருடனும் பேசாமல் சகச்சிரநாமத்தைப் பாராயணஞ் செய்துகொண்டு தியானத்திலிருக்க வேண்டுமென்று சொன்னார். அவன் கேட்டு அப்படியே செய்யச் சம்மதித்தான்; அப்படியே செய்யத் தொடங்கினான். இதனாலெல்லாம் அவன் இருதயம் கொஞ்சம் மாறிவிட்டபடியால் அவன் கடவுளை நேரே காண ஏகநாதர் வீட்டுக்கு வரத் தொடங்கினான். ஆயினும் அவன் ஏகநாதர் பாதத்தை

வணங்கிவிட்டுத் தன் காரியங்களைப் பார்க்கும் பொருட்டுத் தன் வீட்டுக்கு விரைந்து செல்வான். இப்படிப் பல நாட்கள் கழிந்தன. திடீரென்று அவனுக்குச் சுரம் கண்டு ஒன்பது நாள் படுக்கையிற் கிடந்தான். அவனுக்குப் பிராணன் போகும்பொழுது யமதூதர் அவனை நரகிற்குக் கொண்டு போதற்காக வந்தனர். அவன் தொண்டை முன்னமே அடைத்துவிட்டது. ஆதலால் உறவினர் அவனுக்குப் பிராயச்சித்தம் நடத்தினர்; ஸ்நானஞ் செய்வித்தபொழுது அவனுக்குத் திடீரென்று ஸ்மரணை வந்தது; விஷ்ணு சகச்சிர நாமத்தை உரக்கச் சொல்ல ஆரம்பித்தான். எல்லாரும் ஆனந்த பரராய், "இவன் பாக்கியமே பாக்கியம்" என்று கூவினர். யமதூதர் அவன் குரல் விஷ்ணு நாமங்களைச் சப்தித்ததைக் கேட்ட வளவிலே ஓடிப் போயினர். விஷ்ணு தூதர்கள் வந்து அவனை வணங்கி அவனைத் தம்மோடு வைகுண்டத்துக் கழைத்துச் சென்றனர். ஸ்ரீநாதர் அவன்மே லிரங்கி யிராவிட்டால் அவன் நரகத்துக்கே சென்றிருப்பான். அப்புண்ணிய நகரத்து ஆணும் பெண்ணும் "இவன் அப்பெரியார்க்குச் சமீபத்தில் வசித்ததனால் பகவான் அருளைப் பெற்றான்" என்று பேசினர்.

**ஏகநாதர் மக்கள்**

ஏகநாதருடைய தருமபத்தினி கிரிஜாபாய்க்கு முதலில் ஒரு புத்திரி ரத்நம் பிறந்தாள். அவள் பெயர் கோதாபாய். அவளுக்கப்புறம் ஒரு புத்திரன் பிறந்தான். அவன் ஹரி யெனப்பட்டான்; யுக்த வயது வந்ததும் அவனுக்கு உபநயனம் நடந்தது; பின் பாடசாலைக்கு அனுப்பப்பட்டான். ஹரிக் கப்புறம் ஒரு புத்திரி பிறந்தாள்.

அவள் பெயர் கங்காபாய். இப் பெண்மணிகளின் கலியாணம் நடந்த வரலாறும் கேட்கத் தக்கது. பிரதிஷ்டான மென்னும் புண்ணியபுரியில் சிந்தோபந்தர் என்னும் சிரேஷ்டர் இருந்தார். மூத்த புத்திரி கோதாபாய் அவர் குடும்பத்தில் விவாகஞ்செய்து கொடுக்கப்பட்டாள். கருநாடக தேசத்தில் அவருடைய பழைய பந்து வொருவர் இருந்தார். அவருடைய புத்திரனுக்குக் கங்காபாய் நிச்சிதார்த்தஞ் செய்யப்பட்டுச் சீக்கிரம் விவாகம் நிறைவேறிற்று. கங்காபாய்க்குப் புண்டாஜியென்றொரு புத்திரன் பிறந்தான். அவனும் சிறந்த விஷ்ணுபக்தனானான்.

**பிராமணர் ஹரியை மெச்சல்**

ஏகநாதர் புத்திரன் ஹரியோ நல்ல புத்திமான். சாஸ்திரங்களை யெல்லாங் கற்றான். ஆறு சாஸ்திரங்களிலும் வல்லவனானான். பிராமணோத்தமர்கள் அவனுக்கு மரியாதை செய்து அவனை ஹரிபண்டிதனென் றழைத்தனர். பிரதிஷ்டானத்துப் பிராமண சிரேஷ்டர் ஓயாது அவனைப் புகழ்ந்தனர். "பிதாவைவிடப் பிள்ளை அதிக புத்திமான்" என்றனர். "ஏகநாதர் பக்தராகித் தம் பாட்டுக்களை மராட்டியிற் பாடுகின்றனர். ஸ்திரீ சூத்திரர்கள் மனமாரக் கேட்டு அவற்றி லீடுபடுகின்றனர். பிராகிருதத்திற் பாடுதலால் ஏகநாதர் பக்தஜனங்களை வசியப்படுத்திவிட்டார். சம்ஸ்கிருதத்திற் புராணம் வாசிப்பது மறைநது விட்டது. ஹரிபந்தர் திரும்ப அதற்கு உயிர் கொடுத்தார். பொன் மண்ணிலிருந்து வருகின்றது, பணக்காரர் அதைக் கொண்டு அணிகலன்கள் செய்கின்றனர். அப்படியே ஹரிபந்தர் தம் பிதாவை விடச் சிறந்தவர். ஆறு சாஸ்திரங்களும்

வல்ல ஹரிபண்டிதரென்னும் பிராமண ரத்நம் நம்மனை வராலும் அங்கிகரிக்கத் தக்கவர்.'' இந்தப் பிரகார மாகப் பிராமண சிரேஷ்டர்கள் பிள்ளையைப் புகழ்முகத்தால் ஏகநாதரை யிகழ்ந்தனர்.

**ஹரிபண்டிதர் காசிக் கேகல்**

முதலாவது, ஹரிபந்தர் மனம் அறிவுமதம் நிரம்பி யிருந்தது. இதனோடு தூஷிப்பவர்கள் சேர்க்கையும் கூடிற்று. இவ்விதமாக அவர் உள்ளம் தவறான எண்ணங்களால் அசுத்த மடைந்து, 'எவ்வளவு காலம் என் பிதா சொல்லைக் கேட்பது? நான் ஆறுசாஸ்திரங்களும் வல்ல பண்டிதன். என் பிதாவோ பிராகிருத புஸ்தகங்களை உரக்க வாசிக்கிறார். இந் நகரத்துப் பிராமணோத்தமர்க ளிடையில் லஜ்ஜையா யிருக்கிறது' என்றெண்ணி, அவர் "நான் இப்பொழுதே என் தேசத்தை விட்டுக் காசியிற் போய் வசிப்பேன்'' என்று தம்முட் சொல்லிக் கொண்டார்: அதனைச் செய்யவும் தீர்மானித்தார். ஹரி பண்டிதருக்கு மூன்று புத்திரர்கள் இருந்தனர். இருவரைத் தம்மோடு கூட்டிக்கொண்டு தம் மனைவியோடு காசி போய்ச் சேர்ந்தார்.

**ஹரி புத்திரன் ராகோபா ஏகநாதரோ டுறைதல்**

கடைசிப் புத்திரன் ராகோபா என்னும் உததம குணத்தன் ஏகநாதரோடே தங்கிவிட்டான். தன் தந்தைதாயருக்காக அவன் துக்கப் படவில்லை. தன்னாற் செய்யக் கூடிய சிறு பணிகளை அன்பாகச் செய்துகொண்டு சந்தோஷம் நிறைந்த மனத்தோடு இரவும் பகலும் பாட்டனார் பாட்டியாரோ டிருந்தான். ஏகநாதர் வீட்டிற் கீர்த்தனம் நடக்கும்பொழுது அவன் கையில் தாளம் வைத்துக்

கொண்டு கண்டோர் அதிசயிக்கும்படி தன்னு லான மட்டும் பாடுவான். கோபால் உற்சவத்தில் அவன் அபிநயங்களோடு நடித்து ஏகநாதர் பாடும் பாட்டுக் களை உடனே உரக்கச் சொல்லுவான். ஒரு நாள் ஏக நாதர் தனியே இருக்கும் சமயம் பார்த்து அவன் அவர் திருவடியில் தன் தலையைப் பக்தியாக வைத்துக் குழந்தைப் பருவத்திலேயே பிறர்க்குக் கிடைத்தற் கரிய மந்திரோபதேசம் பெற்றுக் கொண்டான். இவ் வாறெல்லாம் வெளிப்பட்ட அவனுடைய நற்குணங் களைக் கண்டு ஜனங்கள் அவனை வாழ்த்தி, "ஸ்ரீ நாதர் பெருமையை இவன் அடைவது நிச்சயம். இவன் அவர் ஸ்தானத்தை வகிக்க வல்லவனே. இவனுடைய பிதா தம்முடைய வித்தியா மதத்தால் பண்டிதத் தொழில் புரிகிறார்" என்றனர். இவ்விதமாகப் பக்தஜனங்கள் தம் முள் விஷயத்தைத் தர்க்கித்தனர். ஹரி பண்டிதரோ, தம்மைச் சார்ந்தவர்களோடு காசிபுரியிலேயே வசித்துக் கொண்டிருந்தார். ஹரி பண்டிதர் ஆறு சாஸ்திரங்களி லும் வல்லவராயும் வாக்கு வன்மை யுடையவராயு மிருந்தமையால் பெருந் திரவியம் சம்பாதித்தார். அப் பெரிய புண்ணிய நகரில் ஒரு வீடு கட்டிக்கொண்டு அதனையே தமக்கு நிலையான இடமாக்கினார்.

**ஏகநாதர் ஹரியை அழைத்துவரக் காசிக்குப் போதல்**

இங்குப் பிரதிஷ்டானத்திலோ ஏகநாதர் ஹரி கீர்த்தனங்களை விடாமற் செய்து கொண்டு ஒவ்வொருவரையும் பக்தி நெறியில் திருப்பினார். ஒருநாள் ஏகநாதர் தனியே யிருந்து நினைத் தார். 'இப் புண்ணிய புரியிலே சர்வ ஜனங்களும் இப்பொழுது ஸ்ரீ கிருஷ்ணனை

வழிபடுகின்றனர். என்னுடைய புத்திரன் ஹரியோ கர்மங்களைத் தவறாமற் செய்வதிற் சிரத்தை பூண்டவனா யிருக்கிறான். விளக்கின் கீழ் இருள் அதிகம் என்னும் பழஞ்சொல் அவனுக்கே பொருத்தமா யிருக்கிறது. ஆதலால் நானே காசிக்கு நேரிற் போய் அவனை மீட்டுக்கொண்டு வருவேன். இதைச் செய்து இந்த அவதார வாழ்க்கையை முடித்துவிட வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன். அவனைப் பக்திநெறிக்குத் திருப்ப நான் ஏதாவது ஓர் அற்புதஞ் செய்து காட்ட வேண்டும்.' இவ்வாறு மனத்தி லுறுதி செய்து கொண்டு ஸ்ரீ நாதர் காசிபுரிக்குச் சென்றார்; மணிகர்ணிகையில் ஸ்நானஞ் செய்து பின் விசுவேசுவரரைப் போய்த் தரிசித்தார். ஹரிபண்டிதர் வீட்டை நோக்கி அவர் நடந்தபொழுது, பண்டிதரே அவரை எதிர் கொண்டழைக்க முன் வந்தார்; வந்து அவரை நமஸ்கரித்து மிக்க ஆர்வத்தோடு தழுவிக்கொண்டார். வீட்டில் தம் பிதாவுக்கு ஓராசனம் இட்டு அதில் அவரை யிருக்கச்செய்தார், சர்வோபசாரங்களோடும் அவர்க்குப் பூஜைசெய்து சந்தோஷ சித்தரானார். தம் பிதாவை எல்லாச் சமாசாரங்களும் விசாரித்தார். அவர்கள் அப்புறம் போஜன முடித்தனர். ஏகநாதர் தம் வீட்டுக்குப பிரயாணப்பட்டு வந்ததால் புத்திரர்க்குப் பரம திருப்தியாயிற்று. அங்கு ஏகநாதர் பல நாட்களிருந்தார்; புத்திரரும் சலியாது உபசரித்தார். எங்கும் ஜனங்கள் முன்பு பிராகிருத பாகவதம் ஏகநாதரால் எழுதப்பட்ட கதையைச் சொல்லினர். மணிகர்ணிகை மடத்து மஹந்துவும் ஹரி பண்டிதரை நோக்கி, "ஸ்ரீநாதர் கட்டளைப்படி தவறாமல் நடப்பீராக. அவர் மனிதரல்லர், விஷ்ணுவினுடைய அவதார மென்றறி

யும். நானும் அவரைத் துன்புறுத்தினேன். அவரு டைய அற்புதச் செயல்கள் கணக்கிறந்தன" என்று கூறினர். ஹரிபண்டிதர் "என்ன! அவர் எண் ணத்திற்கு விரோதமாக நான் நடக்கிறேனென்று நீங்கள் சொல்லுகிறீர்களா?" என்று சொல்லிவிட்டு வீட்டுக்கு வேகமாகச் சென்றார். பலநாட் சென்ற பிறகு ஸ்ரீநாதர் தனியாகத் தம் பிள்ளையைப் பார்த்து, "என் சரீரம் வரவரத் தளர்ச்சி யடைகிறது. பிரயாண காலம் அடுத்தது. என் மன விருப்பம் குறைநாளை உன்னோடு கழிக்கவேண்டுமென்பதே. உன்னை விட் டிருக்க எனக்குக் கூடவில்லை. என் மனம் உன்னையே தேடுகிறது. நீ என்னுடைய சற்புத்திரன், எனக்குப் பிறந்தவன் நீ ஒருவனே. எனக்கு வேறு கிட்டின் பந் துவுமில்லை. நீ இப்பொழுது பிரதிஷ்டானத்துக்கு வருவாயானால் உன் புகழ் அதனால் மிக வளரும். இந் தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் ஒரு பெரிய வீட்டைக் கட்டியிருக்கிறாய். உன்னுடைய இரண்டு புத்திரர் களும் இங்கிருக்கட்டும்; நீ பிரதிஷ்டானத்தில் என்னு டைய இடத்தைக் காணியாகக் கொள்" என்றார்.

**ஹரிபண்டிதர் நிபந்தனைகள்**

ஸ்ரீநாதர் வார்த்தைகளைக் கேட்டு ஹரி பண்டிதர் "ஸ்வாமி, நான் தங்களை ஒன்றே வேண்டுவேன்; அதைச் செய்ய உங்களுக்கு மனமிராது. நம் வீட் டுக்கு வெளியிற் பாகஞ்செய்யும் உணவை உண்ணப் படாது; பிராகிருதத்திற் புராணத்தை வாசிக்கப் படாது. இந்த இரண்டு நிபந்தனைகளுக்கும் இணங்கு வீர்களாயின் நான் உங்களோடு திரும்பி வருவேன்" என்றார். ஸ்ரீநாதர் ஆனந்த மேலிட்டு இதற்கு ஒரு

வித ஆக்ஷேபமும் சொல்லாமல், "நீ விரும்புவதுபோல நான் நடந்துகொள்வேன்" என்றார். இவ் வாக்குறுதி மகனுக்குத் திருப்தி யளித்தது. இருவரும் பிரிய மாகப் புறப்பட்டனர். தங்களிஷ்டம் போல யாத்திரை செய்து கடைசியாகப் பிரதிஷ்டான நகரம் வந்து சேர்ந் தனர். ஜனங்கள் மிகவும் சந்தோஷித்து நகரத்தி லிருந்து அவர்களை எதிர்கொண் டழைக்கச் சென்ற னர். ஏகநாதர் திரும்பியது பக்தர்களுடைய தாமரைக் கண்களுக்குத் தீபத் திருவிழாப் போலிருந்தது. அவர் கள் அவரை நமஸ்கரித்துப் பிரியமாகத் தழுவிக் கொண்டனர்.

இவ்விதமாக ஏகநாதர் தம் வீடு வந்து சேர்ந்தார்.

**ஹரிபண்டிதர் புராணம் வாசித்தல்**

பக்த ஜனங்கள் இருதயத்தில் ஓர் ஆசை வைத்திருந்தனர். 'இன்று கீர்த்தனம் இருக்கும்' என்று அவர்கள் எண்ணினர். ஏகநாதரோ தம் யதாஸ்தானத் தில் மவுனமாக வீற்றிருந்தார். அடுத்த நாள் ஹரிபண் டிதர் புராணத்தைச் சம்ஸ்கிருதத்தில் உரக்கப் படித் தார். அவர் ஆரம்பித்த அன்று விவேகிகள் அநேகர் கூடினர். ஸ்ரீ நாதர் பிரியமாகக் கேட்டுக்கொண்டு உட் கார்ந்திருந்தார். ஜனங்களோ ஏகநாதர் வாயிலிருந்து வார்த்தை வருமா என்று ஆசையோடு பார்த்திருந்தனர். ஏகநாதர் பிராகிருத கிரந்தங்களை வாசிப்பதையும் ஹரி கீர்த்தனங்கள் செய்வதையு மொழித்தார், கீர்த்தனங் கள் செய்வதற்கு ஹரி பண்டிதரைக் கொண்டு வந்து விட்டார், வேறொருவர் வீட்டில் போஜனஞ் செய்வ தில்லை யென்றும் ஒப்புக்கொண் டிருக்கிறார் என்ற செய்திகள் நகரமெங்கும் பரவின. பக்த ஜனங்களுக்கு

இது மிகவும் கஷ்டமா யிருந்தது. "நம் நற்பாக்கியம் ஒழிந்தது, ஆதலா லன்றோ ஏகநாதர் பிராகிருத கிரந்தங்களை வாசிப்பதை விட்டுத் தாமே சம்ஸ்கிருத புராணங்களைக் கேட்கின்றார்" என்று சொல்லிக்கொண் டனர். ஸ்திரீகளும், சூத்திரரும், இதர ஜாதியரும் சம்ஸ்கிருத மறிய வல்ல ரல்லர்; ஆதலால், புராண படனம் நடக்கும்பொழுது அவர்கள் கிரமமாகக் கேட்ட லின்றி எழுந்து போய்விடுவர். ஸ்ரீ நாதர் புராணம் வாசித்த காலத்தில் வீடு முழுதும் நிரம்பி யிருக்கும்; அஞ்சு பத்துப் பேர் வெளியில் நின்றுவிட வேண்டி யிருக்கும். ஏகநாதர் அவர்களுடைய எண்ணங்களைத் தெரிந்துகொண்டு, 'பக்தி மிகவும் குறைந்து போயிற்றே' என்று மனம் வருந்தினர். அப்பொழுது வேறு ஒரு சங்கதி யாயிற்று.

**ஆயிரவருக்கு உணவிட நேர்ந்த பார்ப்பனி**

பிரதிஷ்டான நகரத்தில் ஒரு பணக்காரத் துவிஜ னிருந்தான். அவன் மனைவி ருக்மிணிநாதருக்கு ஒன்று நேர்ந்தாள்: 'ஜகதீசா, நீ என் விருப்பத்தைப் பூர்த்தி செய்வாயாயின், நான் ஆயிரம் பிராமணருக்கு விருந்து செய்வேன்.' இந்த எண் ணத்தை அம் மாது மனத்திற் கொண்ட அந்தக் கணமே அவள் விருப்பம் நிறைவேறிற்று. பின்பு பூர்வ ஜன்ம கர்ம வசத்தால் அத் துவிஜன் பணம் சின்னபின்ன மாயிற்று. அவனும் இறந்தான், அவன் மனைவியாகிய அவளும் பரம ஏழை யாயினள். தன் உடம்பைக் காப்பாற்றிக் கொள்ளுதற்கு அவளுக்கு உணவும் உடையும் வேண்டி யிருந்தது; ஆதலால், வீட்டுக்கு வீடு ஜலம் சுமந்து கொடுத்து ஒவ்வொரு

நாளும் சில வைபசாக்கள் சம்பாதித்தாள். இவ்விதமாக இந்தப் பிரதிஷ்டானத்துப் பிராமண ஸ்திரீ தன் காலத்தைக் கழித்தாள். அவள் நாள் தவறாமற் புராணம் கேட்பதற்கு ஸ்ரீ நாதர் வீட்டுக்கு வருவது வழக்கம். அவள் ஒரு நாள் விவேகியும் பக்தருமான பிராமணர் ஒருவரிடம் தன் மனத்திற் கிடந்த கருத்தை வெளியிட்டாள்: "ஒரு காலத்தில் ஆயிரம் பேருக்குப் போஜன மளிப்பதாக நேர்ந்தேன். ஊழ் வசத்தால் என் பணமெல்லாம் போய் வைதவ்விய மும் வந்து உணவுக்கும் உடைக்கும் வேண்டியவளவு சம்பாதித்தற்கும் சக்தியில்லாதவ ளானேன். வீட்டுக்கு வீடு ஜலம் சுமந்து காலந் தள்ளுகின்றேன். ஆயினும் இந்தத் தெய்வக் கடன் எப்பொழுதும் என் மனத்தில் உறுத்திக் கொண் டிருக்கிறது. இதை எப்படித் தீர்ப்பேன்?" இவ் வார்த்தைகளைக் கேட்ட துவிஜர் "பிரம நிஷ்ட னொருவனுக்குக் கொடுக்கும் போஜனத்தால் வரும் புண்ணியத்தை அளவிட முடியாது. வேதத்தை யோத அறியாது காயத்ரி ஜபத்தைச் செய்ய மாத்திரம் கற்றுக்கொண்ட பிராமணர் நூறு பேருக்கு விருந்தளிப்பதும் வேதாத்தியயனஞ் செய்யும் ஒரு பிராமணனுக்கு விருந்தளிப்பதும் பயனளவில் ஒன்றே. மூன்று வேதங்களை மாத்திரம் அறிந்த பிராமணர் நூறு பேருக்கு விருந்தளிப்பதும் வேதாந்த தத்துவத்தை யறிந்த ஒரு மஹா பண்டிதனுக்கு விருந்தளிப்பதும் பயனளவில் ஒன்றே. தன் வாழ்க்கை முறையில் பேசுவது போல் நடந்து தன்னைத் தரிசித்த மாத்திரத்திற் பிறர் குற்றம் நீங்குமாறு செய்யவல்லவ னொருவனுக்கு விருந்தளித்தல் வேதாந்த பண்டிதனை உண்பிக்கும் பலனைவிட நூறு

மடங்கு அதிக பலனைத் தரும். காமக் குரோதாதிகளை யடக்கி இந்திரியங்களைத் தன் வயத்தனவாகச் செய்யும் உபாயத்தைப் பயின்று எப்பொழுதும் சித்த சுத்தியோ டிருப்பவனைப் பூஜித்தல் முன்னையதினும் நூறுமடங்கு பலனைத் தரும். அப்படிப்பட்டவர் நூறுபேரை யுண் பிக்கும் புண்ணியமும் பொருமை பகை யில்லா விஷ்ணுபக்த னொருவனை யுண்பிக்கும் புண்ணியமும் சமம். ஆதலால் நட்புப் பகை யில்லாது சாக்ஷாத் ஜநார்த்த னவதாரமாய்த் தோன்றுகிற ஏகநாதருக்கு ஒரு நேரம் உணவளிப்பவன் நூறாயிரம் பிராமணருக்கு உணவளித்தவ னாகிறான்" என்றார். அவருடைய பிரிய வசனத்தால் பிராமண விதவை மனத்திற் சந்தோஷ மடைந்து வீட்டுக்குப் போய் விருந்துக்கு வேண்டிய சாமான்களைச் சேகரித்தாள். அவதார புருஷராகிய ஏகநாதரை வீட்டுக்கு அழைத்து அவரைப் பல் சுவை யுண்டிகளும் உண்ணச் செய்ய வேண்டுமென்று விருப்பங்கொண்டாள். அவளோ பரம ஏழை. வீட் டிற் பணமும் கிடையாது, தானியமும் கிடையாது. மற்ற வீடுகளுக்கு நீர் சுமந்து தான் சிறிது பணம் மிச்சம் வைக்கவேண்டி யிருந்தது. கொஞ்சம் கொஞ்ச மாய் வீட்டிற் கோதுமை, அரிசி, பருப்பு, நெய் இவற்றை வாங்கிச் சேர்த்தாள். தன் கையாலேயே வடக முதலியவற்றை இட்டாள். கறிகாய்கள், கீரை கள், சர்க்கரை இவற்றைச் சேர்த்து வைத்தாள். அப் புறம் அந்தத் துவிஜரையும் கூட்டிக்கொண்டு ஏக நாதரை அழைக்கப் போனாள். அச் சமயம் ஹரிபண்டி தர் புராணம் வாசித்துக்கொண் டிருந்தார்; ஸ்ரீநாதர் கேட்டுக்கொண்டிருந்தார். ஆதலால், அவர்கள் வாசிப்பு முடிகிறவரை இருவரும் பேசாதிருந்தனர். புராண

வாசிப்பு முடிந்ததும் ஹரிபா எழுந்து வீட்டுச் சென்றார். துவிஜரும் விதவையும் ஏகநாதரை வேண்டினர்; அவள் கதை முழுதும் ஆதியோடந்தமாக அவருக்குச் சொல்லப்பட்டது. "ஆயிரவரை உண்பிப்பது இன்னும் குறையாயிருக்கிறது. நீர் பிடியளவு சாப்பிட்டீரானால் ஆயிரம் பிராமணர் போஜனம் முடிந்ததாகும்." அவள் சொல்வதன் நியாயத்தைத் தெரிந்துகொண்டு ஸ்ரீநாதர் "சரி, ஹரிபா இப்பொழுது தான் வீட்டுப் போனான். அவனைப் போய்க் கேளுங்கள்" என்றார். அவர்களும் உள்ளே சென்றனர்; ஆனால் மனத்தில் கொஞ்சம் அச்சந்தான். ஹரிபண்டிதர் வீட்டுள் உட்கார்ந்திருந்தார். அவர்கள் தங்கள் கதையைச் சொல்லினர். ஹரிபண்டிதர் கோபங்கொண்டு பிராமண விதவையை அலக்ஷ்யமாக நோக்கி, "ஏகநாதர் பெரிய யாத்திரை செய்து வந்தார். அது முதல் வேறொருவர் வீட்டில் அவர் சாப்பிடுவதில்லை" என்றார். இக் கொடிய வார்த்தைகளைக் கேட்ட விதவை மனம் நொந்து ஏகநாதரிடம் மீண்டும் வந்து அஞ்சலி ஹஸ்தையாய் நின்றாள். "ஹரிபண்டிதர் ஒப்பமாட்டேனென்றார். ஆனாலும் எனக்கு ஆசையதிகமா யிருக்கிறது" என்று முணுமுணுத்தாள்; கண்ணீர் பெருகிற்று, நாத் தழுதழுத்தது. ஸ்ரீநாதருக்கு மன வருத்த முண்டாயிற்று. விதவையின் விருப்பம் அளவு மயமா யிருந்தது. ஆதலால் உள்ளே சென்று பிள்ளையைப் பார்த்து, "அவள் எண்ணத்தைப் பூர்த்தி செய்" என்றார். ஹரிபண்டிதரோ "அப்பா, நீங்கள் எனக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுங்கள். நான் இந்தப் புண்ணிய நகரத்துக்குத் திரும்பி வந்த பொழுது உங்களுடைய சித்தப் போக்கைத் தெரிந்தே

வந்தேன்'' என்றார். அதன் மேல் ஸ்ரீநாதர் "உன் கையாலேயே சமையல் செய். நாம் இருவரும் அங்கு உண்போம். இந்து அவளுக்குத் திருப்தியைத் தரும். இப்படிச் செய்தால் நான் உனக்குக் கொடுத்த வாக்கும் பிழைபடாது, அவளுடைய கருத்தும் நிறைவேறும். ஏழை அநாதைக் கிழ விதவை!'' என்றார். தம் பிதாவிடம் வைத்திருந்த கவுரவ புத்தியால் ஹரி பண்டிதர் சம்மதித்தார். ஏகநாதர் வெளியே வந்து உட்கார்ந்து கொண்டார். பிராமண விதவை மேலும் மேலும் வேண்டினாள். "ஆறுமாதமாக என் கையாலேயே செய்து வைத்திருக்கும் வடகம் பப்படம் முதலியவை வீணாய்ப்போம். நீர் பக்தியைத் தேடித் திரியும் அவதாரமன்றோ? ஸ்வாமி, என் விருப்பம் நிறைவேறுதற்கு ஓர் உபாயம் சொல்லும்'' என்றாள். அவளுடைய அன்பு நிறைந்த உபசார வார்த்தைகளைக் கேட்டு ஏகநாதர் மனத்திற் சந்தோஷித்து, "நீ அன்போடு வடகம் முதலியவற்றை இட்டிருக்கிறாய். உன் கையாலேயே அவற்றைப் பொரி. நான் பஞ்சப் பிராணன்களுக்கும் சமர்ப்பித்துக் கவளம் கொண்ட பிறகு நீ வீட்டிற் செய்து வைத்திருக்கும் பதார்த்தங்களைப் பரிமாறலாம்'' என்றார். ஸ்ரீநாதர் பதிலைக் கேட்டு அவள் பரமானந்தங் கொண்டாள். இன்னும் அவர் "உனக்கு எதுவெல்லாம் பிரியமோ அவை எனக்கும் பிரியமே, எனக்கு வேறு ஆசையில்லை'' என்றும் சொன்னார். அவருடைய அமுத வசனத்தைக் கேட்டு அவளுடைய இருதயம் ஆனந்தத்தால் நிறைந்தது. அவள் வீட்டுக்குப்போய்க் கறிகாய்களைத் திருத்த ஆரம்பித்தாள். மறுநாள் அதிகாலையில் அவள் எழுந்து வீட்டைப் பெருக்கி மெழுகி, பாத்திரங்களை நன்றாகத்

தேய்த்து அலம்பி வைத்துவிட்டு, கோதாவரிக்குப் போய் ஸ்நானஞ் செய்தாள். இவ்வேளைக் கிழ விதவை ஜலங் கொண்டுவந்து வீட்டில் வைத்து விட்டுக் கதவை யிழுத்துச் சாத்திக்கொண்டு ஏகநாதர் வீட்டுக்குப் போனாள். அவள் ஹரிபண்டிதரை நமஸ் கரித்து, "நான் எல்லாச் சாமக்கிரிகளும் சேர்த்து வைத்திருக்கிறேன். இப்பொழுது என் வீட்டுக்கு வந்து என் விருப்பத்தை நிறைவேற்றும்" என்றாள். ஸ்ரீநாதர் தம் மகனைப் பார்த்து, "போய்ச் சமையல் செய். நான் இதோ வருகிறேன்" என்றார். ஹரி பண்டிதர் விதவையோடு அவள் வீட்டுக்குப்போய் ஸ்நானஞ் செய்துவிட்டுச் சமைக்கத் தொடங்கினார். அவருக்குச் சமைத்தற்கு என்னென்ன வேண்டுமோ அவற்றை யெல்லாம் கொடுத்து விட்டுத் தன் சமை யலைக் கவனிக்கிறதற்கு அவள் போய் விட்டாள். இப்பொழுது ஏகநாதர் விதவையின் மனக் கிடக் கையைத் தெரிந்து கொண்டு, "என்னை அழைக்கிற தற்கு அவள் யாரை அனுப்புவாள்!" என்று தம்முட் சொல்லிக் கொண்டு, ஸ்ரீஹரி விதுரர் வீட்டுக்குக் கூப்பிடாது போனதுபோல அழைக்காமலே அவள் வீட்டிற் போய்ச் சேர்ந்தார். அவள் அவருக்கு ஸ்நானத்துக்கு ஜலம் எடுத்துக் கொடுத்தாள். ஹரி பண்டிதர் அக்கினிக்கு ஆகுதி செய்து தம் கையாலேயே இரண்டு வகைகள் பரிமாறினார். புத் திருக்கு நெய் பரிமாறியவுடனே ஸ்ரீநாதர் பிராமண விதவையைக் கூப்பிட்டு, "இதற்குப் போக்தா ஜநார்த் தனர்" என்று சொல்லி அவள் கையில் நீரை விட்டார். அப்புறம் பாண்டுரங்கர் திருவுருவத்தை மனத்தில் அமைத்து அவர்க்கு அதனை அனபோடு அர்ப்பணஞ்

செய்தார். அதன்மேல் ஏகநாதர் பிராணன்களுடைய பெயரால் ஒரு வாய் நீரும், சில கவளங்களும் உட்கொண்டார். தந்தையும் மகனும் அப்புறம் உண்ணத் தொடங்கினர். கிழவி சமையலறைக்குச் சென்று உணவைக் கொண்டு வந்தாள். ஒரு தட்டு நிறைய ஆகாரங் கொண்டு வந்து ஸ்ரீ நாதரின் முன் வைத்துப் போளிகளை எடுத்துப் பரிமாறினாள்; வடகங்களையும், எண்ணெயிற் செய்த பக்ஷயங்களையும், பாலும் சர்க்கரையுங் கொண்டு செய்த ஒன்பது வகை யுணவுகளையும் படைத்தாள். ஸ்ரீ நாதர் ஒன்றையும் வேண்டாமென்று சொன்னவரல்லர்; அவர் வேகமாகவும், ஆவலாகவும் சாப்பிட்டார். இந்தக் காட்சியைக் கண்டு அவள் அக மகிழ்ந்தாள். பில்ல ஸ்திரீ கொடுத்த பழத்தை இராமர் தின்ற காலத்தில் நிகழ்ந்ததையே இதற்கு இணையாகச் சொல்லலாம். ஆனால் ஹரி பண்டிதர் இதனைப் பார்த்த பொழுதே கோபாக்கிராந்தரானார்; கண்கள் சிவந்தன, பற்கள் நற நற வென்றன. கிழவியோ ஏகநாதர் முன் அஞ்சலிஹஸ்தையாய் நின்று, "அநாதையாகிய என் மேற் கிருபை வைத்து என் விருப்பத்தை நிறைவேற்றினீரே" என்றாள். ஹரி பண்டிதரோ "இவர் உத்தேசம் இதுவாயின் என் கைகள் சுட என்னைச் சமைக்கச் சொல்லி யிருப்பானேன்?" என்று தம்முட் சொல்லிக்கொண்டார். தம் சிவந்த கண்களை யுருட்டி உதடுகளைக் கடித்துச் சரீர முழுதும் நடுங்க அவர் கிழவியைக் குரூரமாகப் பார்த்தார். கோபம் ஒரு மத யானை, அதனை யடக்குதல் சிரமம். பண்டிதரோ விவேகத்தை அங்குசமாக உபயோகித்துத் தம் கோபத்தை அடக்கினார். அவர் 'என் பிதாவைக் கவுரவக் குறைவாக நடத்துவேனாயின் என் தலை

மேல ஒரு பெரிய பாபம் ஏறும்' என்று நினைத்து மனத்தைச் சந்தோஷமாக வைத்துக்கொண்டு உணவை யுண்டார். ஏகநாதர் ஆனந்த ரஸத்தைப் பூர்த்தியாக அநுபவித்தார். அப்புறம் சுத்த ஜலம் பருகிக் கைவா யலம்பினார். கிழவி முன்னமே ஏகநாதருக்கு ஒரு தனி யாசனமிட்டு இரண்டு தாம்பூலச் சுருள்களும் துள சி தளிரும் விஷ்ணுதீர்த்தமும் தயாரித்து வைத்திருந் தாள். ஏகநாதர் வாய் பூசின பின் பிள்ளையை நோக்கி, "உடனே நம் மிருவருடைய எச்சிலிலைகளையும் எடுத்து விடு. இந்தக் கிழவிக்கு இங்கு வேறு துணை யில்லை, தனியே இருக்கிறாள், பாபம். உதவிக்கு ஒருவரு மில்லை யாகையால் அவளுக்கு ஸ்நானஞ் செய்வது கஷ்டமா யிருக்கும்" என்றார். ஸ்ரீநாதர் இப்படி வேண்டவே ஹரி பண்டிதரும் பிதாவின் சொல்லைக் கவுரவித்தார். அவர் தோவத்தியை யிழுத்துக் கட்டிக் கொண்டு இலைகளை எடுக்கத் தொடங்கினார். அவர் ஏகநாதர் இலையை யெடுத்துத் தம் இலைமேல் விட்டார், உடனே, என்ன ஆச்சரியம்! வேறோர் இலை கிடந் தது. அவர் 'கிழவி சமையலறையி லிருந்து சாப்பாடு கொண்டுவரும் பொழுது இதனையும் கொண்டு வந் திருப்பாள்' என்று நினைத்தார். ஆதலால் அதனையும் எடுத்தார். திரும்பவும், என்ன அதிசயம்! மூன்றா வது இலை கண்டார். அப்படியே ஒன்றன்பின் ஒன்றாகக் கிளம்பிற்று. அவருடைய இருதய கமலம் ஆச்சரி யத்தால் நிறைய அவர் அவற்றை வேகமாக எடுத்தார். ஆயிரம்வரை எடுத்தும் அவை முடிந்தில. ஹரி பண்டிதர் பச்சாத்தாபத்தோடு ஏகநாதர்க்குச் சாஷ் டாங்க நமஸ்காரஞ் செய்தெழுந்து, அவர் முன் கை கூப்பியவராய் நின்று, கட்டாமரைகளில் நீர் ததும்ப

"ஜய ஜய நித்ய, அவ்யக்த, அக்ஷய, ஜகந்நாத லோக குருவே, பாபியாகிய நான் உம்முடைய பெருமையை அறியாமற் போனேன். அதிகம் பிழைத்தேன். நீர் சாக்ஷாத் விஷ்ணு அவதாரமே. இப்பொழுது என் ஆத்மா வெங்கும் இந்த உண்மை பரந்துளது. உம்முடைய அற்புதச் செயல்கள் போதும். என்மேல் கிருபை வையும், பிதாவே" என்றலறித் தம் தலையை ஏகநாதர் திருவடியில் வைத்தார். ஸ்ரீநாதர் கருணை மேலிட்டவராய்ப் பிள்ளையைத் தடவிக் கொடுத்து, "என் செல்வமே, அதிக கஷ்டமடைந்தாய். இனி மயங்கிறதற்கு இலையொன்றுமிராது" என்றார். ஏகநாதர் இவ்வாறு தைரியம் சொல்ல, ஹரி பண்டிதர் இலைகளை எடுத்தெறிந்தார். மொத்தம் ஆயிரம் இலைகள் எடுத்திருந்தார். அவர் பிராமண விதவையைப் பார்த்து, "உன்னுடைய பாக்கியமே பாக்கியம். ஸ்ரீ நாதரவதரித்ததில் நீ ஆயிரம் பிராமணருக்குப் போஜனமளித்தவளாகிறாய். இதனை அனுபவத்தாற் பூர்த்தியாக அறிந்தேன்" என்றார். அப்பொழுது கிழவியின் உள்ளம் பூரித்தது. அவள் ஏகநாதனை மரியாதையாக நமஸ்கரித்து, 'நீர் அநாதையாகிய என்மேல் இரக்கம் வைத்து என்னைக் காத்தீர்" என்று கூறினாள். ஹரி பண்டிதர் பிதாவை நோக்கி, "நான் ஆறு சாஸ்திரங்களிலும் பண்டிதனாய்விட்டேன் என்னும் மதத்தால் உம் பெருமையை அறியாது போனேன். இனி, ஸ்வாமி, எங்கு உம்மைச் சித்த சுத்தியோடு அழைக்கிறார்களோ, அங்குப் போய்ப் போஜனஞ் செய்யும். நீரே எழுதியுள்ள பிராகிருத புஸ்தகங்களையும் வழக்கம் போல் தினந்தோறும் வாசியும்" என்றார். இவ்விதமாகச் சம்பாஷித்துக் கொண்டு இருவரும் வீட்டிற்குத் திரும்பி வந்தனர்.

## பன்னிரண்டாம் அத்தியாயம்

**ஏகநாதர் மீண்டும் ஹரி கீர்த்தனமும் புராண வாசிப்பும் தொடங்கல்**

இவர்கள் பேசிக் கொண்ட சங்கதி மூன்றும் பேருக்குத் தெரியாது. கிழவி ஏகநாதர் பரிகல சேடத்தை யுண்ண உட்கார்ந்தாள். ஏகநாதரை யுண்டு திருப்தி யடையச் செய்த அவளுடைய பக்தி அற்புதமானது. அவள் உண்டபின் ஆயிரத்துக்குமே லிருந்த இலைகளைத் திரட்டித் தன் தலைமேல் வைத்துக்கொண்டு கோதாவரிக் கரைக்கு வந்தாள். அங் கிருந்த ஜனங்களுக்கு நடந்தவற்றைச் சொன்னாள். தன் கையாலேயே அவள் இலைகளையெடுத்து நதியின் நீரோட்டத்தில் விட்டாள். விஷயத்தைக் கேட்டுக் களித்த பக்தஜனங்கள் "இனி ஏகநாதர் புராணம் வாசிப்பார். மனமார அவர் கீர்த்தனங்களைக் கேட்கலாம்" என்று தம்முட் சொல்லிக் கொண்டனர். சங்கதி ஊரெங்கும் பரவிற்று. ஹரி பண்டிதர் தம் பிதாவின் பக்தராக மாறினார்; ஸ்ரீ நாதர் புராணம் வாசிப்பதைக் கூர்ந்து கேட்டுக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பக்த ஜனங்கள் ஹரி கீர்த்தனங்களைக் கேட்டற்குத் திரள்திரளாக வந்தனர். ஜய ஜய முழக்கத்தோடு அவர்கள் கைகொட்டி ஆரவாரித்தனர்; ஹரிபாவின் நாமமரைக் கண்களில் நீர் நிறைந்தது. தாளம், வீணை, மிருதங்கம் இவற்றின் ஒலி மேன்மே லெழுந்து பகவந் நாமத்தின் பெருமையை வெளியிட்டன. அந் நாமங்களைக் கேட்ட மாத்திரையிலேயே அவர்கள் மனம் ஆனந்த மடைந்தது. ஹரி பண்டிதர் 'பைடணத்தில் முன்பு காரியங்கள் நிகழ்ந்தபொழுது நான் அறியாப் பருவத்தினனு

யிருந்தேன். ஸ்வாமி என் மீது இரங்கினார். ஸ்ரீநாத ருடைய மகிமையை முன்பு அறியாது போனேன். வித்யா மதத்தால் தவற்று நெறியிற் சென்றேன். இப்படிக் குருவை விட்டுக் காசியிற் சென்று வசித்தேன். துவாபர யுகத்தில் பக்தன் அர்ஜுனன், ஸ்ரீ கிருஷ்ணனை தன் சமபபந்துவென்று கருதிக் கொண்டிருந்தவன், அவர் விசுவரூபத்தைக் கண்டபின் பரமாத்மாவென் றறிந்தா னன்றோ' என்று எண்ணினார். உண்மையும் அப்படித்தான். இப்பொழுது ஹரிபண்டிதர் ஏகநாதர் கீர்த்தனங்களைக் கவனமாகக் கேட்டலோடு அவர் குறிப்பறிந்து தம் நன்மைக்காகவே அவர்க்கு வேண்டியவற்றைச் செய்தார்.

**முழுமகன் காவபாவை ஆதரித்தல்**

இன்னும் அவரைப் பற்றி அற்புத கதைகள் வேறுண்டு. கோதாவரிக்கரையில் ஒரு சிறு கிராமம் இருந்தது. அதில் ஒரு பிராமணன் இருந்தான். அவன் ஊர் மணியம் வேலை பார்த்து வந்தான்; ஆனாற் பரம ஏழை. அவனுக்குக் குழந்தைகளுக்குக் குறை வில்லை; அவர்களுக்குச் சாப்பாட்டுக்குத்தான் வழி கிடையாது. கடைசிப் பையன் ஒரு முழு மகன், ஊமையு மாவன். ஸ்திரீகள் அவனைக் காவபா வென்றழைத்தனர். காலக்கிரமத்தில அவன் பெரிய பையனாய் வளர்ந்தும் எப்போதும சிறு பிள்ளைகளோடேயே விளையாடிக்கொண்டிருந்தான். எட்டு வயதாயும் அவனுக்குச் சரியாகப் பேசக் கூடவில்லை. அவன் பிதா அவனை ஒரு குழந்தையாகப் பாவிக்கவே யில்லை; ஆயினும் அவனுக்கும் உபநயனம் நடந்தது. பையனுக்குக் கேசவ நாராயண என்று சொல்ல வர வில்லை.

காயத்ரி மந்திரம் எப்படி ஜபிப்பான்! 'பூர்வ ஜன்ம கருமத்தால் இந்த நம் கடைசிப் பையன் ஊமையாய்ப் பிறந் துள்ளான். வயிறு நிறையச் சாப்பிடுகிறானே யன்றி ஒரு வார்த்தைகூடச் சொல்வதில்லை. நம் முடைய கோடி பாபஞ் சேர்ந்து இந்த ராக்ஷஸன் நமக் குப் பிள்ளையாகப் பிறந் துள்ளான்' என்று அவன் தந்தைதாயர் மனம் வருந்தினர். ஒரு நாள் அவர்கள் வீட்டில் ஒரு பண்டிகை கொண்டாடினர். பைய னுக்குப் போளி கொடுத்தனர்; வயிறு நிறையச் சாப்பிட்டான். அடுத்த நாள் அதே நேரத்தில் காவஜி இன்னும் கொஞ்சம் போளி வேண்டுமென்று தாயைக் கேட்டான். அவள் கொஞ்சம் பழைய போளி வைத்திருந்தாள்: அதைக் கொண்டுவந்து அவனுக் குக் கொடுத்தாள். அது இராத்திரி சென்றபின், காவஜிக்கு வழக்கமாகத் தின்னுகிற ரொட்டி கீரைகள் மேல் மனஞ் செல்லவில்லை. இன்னும் கொஞ்சம் போளி வேண்டுமென்று கையாற் சைகை செய்து காட்டினன். தாய்க்குக் கோபம் வந்து தன் பிள்ளையை அடித்தாள். 'அடா அதிஷ்டமே எப்போதும் நல் லுணவைக் கேட்கத்தானே பிறந்துள்ளாய்!" என்றாள். காவஜி அழுது தரைமேற் புரண்டான். அப்புறம் எழுந்து தாயிடம் மீண்டும் ஓடிப் போளி வேண்டு மென்று சைகை செய்தான். இப்பொழுது தாய்க்கு இரக்கம் வந்து, 'இவனுடைய இந்தத் தீரா ஆசைக்கு என்ன செய்யலாம்?' என்று ஆலோசித்தாள். அப் புறம் அவள் அவனைக் கையைப்பிடித்துப் பைடணத் துக்குக் கொண்டுவந்தாள். அங்கு ஏகநாதர் வீட்டுக் குப்போய் அவருக்கு மரியாதையோடு நமஸ்காரஞ் செய்து, காவஜியை அவர் காலிற் கிடத்தி, "கருணை

நிதியே, இவனை ஏற்றுக்கொள்ளும். இவனுக்கு ஒன்பது வயதாகிறது. ஒரு வார்த்தை கூடப் பேசுவதில்லை. ஆயினும் நல்ல உணவுகள் வேண்டுமென்கிறான். நான் என்ன செய்வேன்! நாங்கள் உதவியற்ற ஏழைப் பிராமணர்; ஒரு குக்கிராமத்தில் வசிக்கிறோம். இங்கு உம்முடைய கிருகத்திலே தினந்தோறும் விருந்து நடக்கிறது. பிராமணர்கள் நல்ல நல்ல உணவு உண்கின்றனர். உம்முடைய கருணை விலாசத்தைப் பற்றி என் செவியாரக் கேட்டேன். அதனாலேயே அவனை இங்குக் கொணர்ந்தேன்'' என்றாள். ஸ்ரீ நாதர் "அவன் என் வீட்டிலேயே இருக்கட்டும்'' என்னும் அமுத மொழிகள் பகன்றார். அப்புறம் ஏகநாதர் அவன் பையனைப் பக்ஷத்தோடு பார்த்துக் கொள்ளும்படி கிரிஜாபாயிடம் சொல்லினர். ஸ்ரீ நாதர் சொல்லியபடியே கிரிஜாபாய் காவஜிக்கு ஸ்நானஞ் செய்வித்துப போஜன பாத்திரங் கொடுத்து உட்கார்ந்து உண்ணச் சொன்னாள். காவஜியின் தாய்க்குச் சந்தோஷம் பொங்கிற்று. அவள் ஏகநாதரிடம் விடைபெற்றுக்கொண்டு தன் கிராமத்துக்கு விரைந்து சென்றாள். தன்னுடைய கணவனிடத்தில் தம் ஊமைப் பிள்ளையை ஏகநாதரிடம் ஒப்புவித்து வந்துவிட்டதாகச் சொன்னாள்: "இனி அவனைப்பற்றிய கவலையே நமக்கு வேண்டாம். நம்முடைய பக்ஷமென்ன விருதாபக்ஷம். அவனுக்குப் பூர்வபுண்ணிய மிருக்கிறது. இப்பொழுது திவ்யமான இல்லங் கிடைத்தது.'' இவ்விதமாகத் தந்தை தாய் இருவரும் திருப்தி யடைந்தனர். காவஜிக்கோ, ஏகநாதர் தம்முடைய கையாலேயே ஆடையுடுத்தினர். அவன் காலை மாலை சாப்பிடுவதும் மற்றைப் பிள்ளைகளோடு விளையாடுவதுமாக இருந்தான்;

பெற்றோரை மறந்தான். இங்கு அவன் சந்தோஷ மாக இருந்தான்; அவனுக்கு அதுவரை பகப்படாத நல்லுணவு கிடைத்தது. அவன் சரீரம் புஷ்டியடைந் தது. ஒருநாள் ஏகநாதர் தம் பூஜையறையில் தனியே உட்கார்ந்திருந்தார். அவர் காவஜியைக் கூப்பிட்டு ராம நாம மந்திர மொன்றைச் சொல்லிக்க முயன்றார். அந்த ஊமைப்பையன் முழுமகனு யிருந்தமையால் ஓர் அக்ஷரங்கூடச் சொல்லக்கூடாம லிருந்தான். ஏகநாதர் 'என் பெயரென்ன?' என்று அவனைக் கேட்டார். திடீரென்று அவனுக்கு வாக்குத் திடப் பட்டு "ஏக்நாத்" என்று கூவினான். ஏகநாதர் கருணை யால் அந்தப் பெயரையே சதா ஜபம் செய்தற்குரிய மந்திரமாக அவனுக்கு அளித்தார். தம் கையால் ஒரு கயிற்றை எடுத்து அதில் முடிச்சுக ளிட்டு, "இந்த ஜபமாலையில் என் பெயரைச் சதா ஜபஞ் செய்" என்றார். அந்தக் காலமுதல் காவஜி சற்குரு சேவை செய்தான். அவனுக்கு நிரம்ப ஸ்வாரஸ்யமா யிருந்தது. விளையாட்டை மறந்தான். பக்தியானந்தத்தை அனுபவித்தான். வேறு வார்த்தையே சொல்லான். மற்றவர்களுக்கெல்லாம் அவன் ஊமையே; ஆயினும், ஏகநாதரிடம் பக்தி அவன் இருதயத்திற் பதிந்தது. அவன் இனிய பண்டங்களில் ஆசையை வென்றான். சிறிது உணவை உண்டு இரவும் பகலும் பூஜையிற் காலத்தைக் கழித்தான். நகரத்து ஜனங்கள் இதைப் பார்த்து ஆச்சரியப்பட்டு, "ஏகநாதர் கருணையை அவன் அனுபவித்த வுடனே அவன் நடக்கை மாறிற்று" என்றனர். காவஜியினுடைய பெற்றோர் அவனைப் பார்க்க வந்தபொழுது அவன் அவர்களை ஏறிட்டுக் கூடப் பார்க்கவில்லை.

இவ்வாறு சில நாட் செல்ல ஒரு விசேஷ சங்கதி நடந்தது. ஏகநாதர் தம்முடைய பூஜை யறையில் காடதியானத்தி லமர்ந் திருந்தார். ஸ்ரீ ராமர் அவர்க்குப் பிரத்தியக்ஷமாகி அவரைக் கையைப் பற்றி எழுப்பினர். அவர் கண்ணைத் திறந்ததும், ஜானகி ராமனை எதிரே கண்டார். ஏகநாதர் எனைவகை மெய்ப்பாடும் தம சரீரத்திற் புலப்பட அன்போடு அவர் காலைப் பற்றித் தழுவினர். இரகுபதி ஏகநாதரை அன்போடு நெஞ்சாரப் புல்லி, "வால்மீகி ராமாயணத்திற்கு ஒரு பிராகிருத வியாக்யானம் உன் வாயாற் செய்" என்றார். இவ்வாறு அயோத்தியாநாதர் கட்டளை தருதலும், ஏகநாதர் "உம பெருமையை எடுத்துரைக்கும் வழு காண்டங்களையும் என் மனத்திலமைக்க முடியவில்லையே. என்னுடைய கொச்சை மொழியால் ஒருவாறு முயற்சி செய்யலாமாயினும் என் வாழ்நாளிற் கொஞ்சமே எஞ்சியுளது. புஸ்தகத்தை முடிக்க நான் ஜீவித் திருப்பேனோ வெ பது சந்தேகம்" என்றார். இரகுநந்தனர் "உன்னுடைய பூஜை முதலியவற்றை மட்டாகச் செய்து கொண்டு காலத்தை யெல்லாம் இராமாயண ரசனையிற் போக்கு. உன்னுடைய பக்தியும் மனோபாவங்களும ஆச்சரியமானவை. நீ செய்த காவியங்கள் எனக்கு மனோஹரமானவை. ஆதலால் உன்னை நான் செய்யச் சொல்லுகிற அந் நூலுக்குப் **பாவார்த்த ராமாயண** மென்று பெயரிடு. நீலவர்ணனாகிய நான உன் இருதயத்தில் அகலா திருந்து எல்லாக் காலத்தும் உனக்கு ஞாபகமூட்டுவேன். கலியுகமும், மரணமும் உனக்கு அடங்கியவை தானே. சிறிதும் கவலைப்படாதே" என்று சொல்ல, ஏகநாதர் அவர் பாதத்தில் நமஸ்

கரித்து, "உம்முடைய கட்டளைதான் எனக்குப் பிரமாணம், வேறு என்ன நான் உத்தேசிக்கப் போகிறேன்!" என்றார். இவ்வளவும் பேசிவிட்டு அயோத்தியாநாதர் அந்தர்த்தானமாயினார்; இராமசந்திரமூர்த்தி ஏகநாதர் இருதயத்திற் குடி கொண்டார் என்பதுதான் உண்மை.

**பாவார்த்த ராமாயணம் எழுதல்**

இதன் பிறகு ஏகநாதர் ஒரு நல்ல நாட் பார்த்து மராட்டி இராமாயணஞ் செய்யத் தொடங்கினார். இது பக்தர்களுக்குச் சந்தோஷாதிசயத்தைக் கொடுத்தது. ஒவ்வொரு நாளும் செய்தது முடிந்த வரையில் அவர்கள் கேட்டுக் களித்தனர். மூடர்களுக்கெல்லாம் மனத்திற் பக்தி அதிகமாயிற்று. ஏகநாதர் பால காண்டம் தொடங்கி அதை முடித்தார். அயோத்தியா காண்டம் ஆரம்பித்து அதையும் முடித்தார். இதன் பிறகு இரகுநந்தனர் காட்டிற்குச் சென்ற ஆரண்யகாண்டம் முடிந்தது. பிறகு அவர் கிஷ்கிந்தாகாண்டம் முழுதையும் முடித்தார். அப்புறம் ஹனுமந்தன் அற்புதச் செயல்கள் செய்து சீதையைத் தேடிக் கண்டதையும் இரகுபதி இலங்கைக்குச் சென்றதையும் சொல்லும் சுந்தர காண்டமும் முடிந்தது. அப்புறம் ஏகநாதர் யுத்த காண்டத்தை ஆரம்பித்து அதில் நாற்பத்துநான்கு படலங்கள் செய்து முடித்தார். அவர்க்கு மஹாபிரயாண காலம் நெருங்கிவிட்டது. "என் பிரயாண காலம் இப்பொழுது அடுத்தது" என்று ஏகநாதர் சொல்லிய பொழுது பக்த ஜனங்கள் மனங் கலங்கினர். அவர்கள் "ஸ்வாமி வாயாலேயே இராமாயண முழுதும் முடிக்கப்படும் என்று நம்பியிருந்தோம். யுத்த

காண்டமே இன்னும் முடிவு பெறவில்லையே. அப்புறம் உத்தர காண்டம் முழுது மிருக்கிறது. ஆதலால், நாங்கள் மிகவும் கவலைப்படுகிறோம். நூலைப் பூர்த்தி செய்துவிட்டு அப்புறம் உங்களுடைய பிரயாண காலத்தைக் குறிப்பிடலாகாதா?'' என்றனர். பக்தர்கள் இவ்வாறு மன்றாடவும், ஸ்ரீ நாதர் சொல்வார்: "யமன் எந்தச் சரீரத்தையாவது கலக்க நிச்சயித்துவிட்டால், அவனைத் தடுக்க முடியாது.'' அவர்கள் "கிருஷ்ண தாஸர் தங்களைப் பிரார்த்தித்தபொழுது தாங்கள் அவரைப் பதினொரு நாள் மரணத்தினின்றும் தப்பச்செய்து யுத்தகாண்ட முழுதும் முடிக்கச் செய்தீர்கள். அது போலவே இப்பொழுதும் யமனைத் தடுத்து விடுங்கள். நூல் முடியும் சந்தோஷ காலத்தை நாங்கள் பார்க்கட்டும். ஸ்வாமிகளுடைய கவிதா சாமர்த்தியத்தைக் கேட்டு நாங்க ளெல்லாம் களிப்போம்'' என்றனர். ஸ்ரீநாதர் "நான்சொல்வதைக் கேளுங்கள். என்னுடைய புஸ்தகத்தை முடித்தற் பொருட்டு யமனைத் தண்டித்தல் எனக்குத் தக்க தென்று தோன்ற வில்லை. காவஜி யுத்த காண்டத்தைப் பூர்த்தி செய்து உத்தர காண்டத்தையும் எழுதிவிடுவான். வேறு வழி ஒன்றுந் தோன்றவில்லை'' என்றார். இவ் வார்த்தைகளை ஸ்ரீ நாதர் சொல்லியபொழுது ஜனங்கள் ஆச்சரியத்தோடு, "எந்தக் காவஜி? ஒருவரோடும் பேசாத அந்தப் பிறவி யூமையா? அவன இராமாயணத்தை எப்படி எழுதப் போகிறான்? இஃது எங்களுக்குப் பொய்யாகத் தோன்றுகிறது'' என்று கூவினர். ஸ்ரீ நாதரோ காவஜியைத் தம் அருகில் அழைத்து, பிரியமாக அவன் தலையில் தம் கையை வைத்து, "என்னிடத்தி லிருக்கும் காவிய கவன சக்தி உன்னிடத்து

வருவதர்க" என்று சொல்லி, அவனுக்குத் தம் எழுதுகோலைக் கொடுத்தார். ஏகநாதருடைய அனுக்கிரகத்தைப் பெற்றவுடனே சாவஜியின் மனம் அலர்ந்தது. அவன் கையிற் காகிதத்தை யெடுத்து எழுதத் தொடங்கினான். அவன் வாக்கிற்கும், ஏகநாதர் வாக்கிற்கும் சிறிதும் பேதமில்லை. ஒரு படலம் முடிந்ததும் பக்த ஜனங்கள் அதைக் கேட்டு, "ஏகநாதர் தயையால் இவ்வூமைக்கு வாக்கு வன்மை யுண்டாயிற்று. அவனுடைய வாக்கு அதிமாதுரியமா யிருக்கிறதே! அவன் காவியத்தை முடித்து விடுவான்" என்று சொல்லிக்கொண்டனர். ஏகநாதர் முன்னிலையில் அவன் ஒரு படலம் எழுதினான்; காவியத்தில் எஞ்சி நின்றதைப் பிறகு எழுதி முடித்தான்.

**ஏகநாதர் இறுதிக் காலம்**

பங்குனி மாதத்தில் கிருஷ்ண பக்ஷத்துப் பஞ்சமியன்று ஸ்ரீ நாதர் ஒரு கீர்த்தனஞ் செய்தார். பிரசாதங்களை விநியோகித்த பிறகு அவர் "என் வேண்டுகோளைத் தயை செய்து கேளுங்கள். நாளை நான் பிரயாணமாகிறேன். நீங்க ளெல்லாரும் ஸ்நானஞ் செய்த பிறகு என்னை வழியனுப்பக் கோதாவரி வரை வாருங்கள். அப்புறம் உங்கள் வீடுகளுக்குத் திரும்பிப் போங்கள்" என்றார். ஏகநாதருடைய இந்த வேண்டுகோளைப் பக்த ஜனங்கள் கேட்டுத் துக்காக்கிராந்தராய், "இந்த அவதாரத்தினுடைய காலம் இன்று முடிவு பெறுகிறது" என்று சொல்லி மனத்துயரத்தி லாழ்ந்தனர். மறுநாள் அதிகாலையில் ஏகநாதருடைய சிநேகிதர்களெல்லாம் அவர் வீட்டிற் கூடினர். அவருடைய பந்துக்கள் மூர்ச்சையாகு நிலையி

விருந்தனர். இதைக் கண்ட பக்த ஜனங்கள் மிகவும் துக்கித்தனர். ஸ்ரீ நாதரைப் பார்த்த பொழுது அவர்களுக்குக் கண்ணீர் பெருகிற்று. துஷ்டரும் துன்மார்க்கரும் வேறு விதமாகப் பேசிக்கொண்டனர்: "இவர் பல அற்புதங்கள் செய்து காட்டினரே, யமனுக்கு எல்லாரும் ஒன்றுதான். இப்பொழுது அவன் அவரை விடாப் பற்றாய்ப் பற்றிக் கொண்டான்: கடைசியில் ஏகநாதர் சரீரமும் மனிதர் தோளிற் சுமக்கப்பட்டுத்தான் போம்." இவ் வார்த்தைகள் காதிற் பட்ட பொழுது பக்த ஜனங்கள் துக்கிதராயினர். ஆயினும் அவர்கள் ஏகநாதருடைய பெருமையை மனத்தில் நினைத்தனர். அவர்கள் "உலக சம்ரக்ஷணார்த்தம், ஏகநாதரே, நீர் மனித ஸ்வபாவங்களோடு அவதாரமாய் வந்தீர். உம்முடைய சாவுக்கும் சாமானிய மனிதர் சாவுக்கும் பேதமிருக்க வேண்டுமென்பது எங்கள் கோரிக்கை" என்றனர். ஸ்ரீ நாதர் பக்தர்களின் கோரிக்கையைக் கேட்டு, உறக்கத்தினின்று விழித்தவர்போல ஸ்மரணை பெற்று உட்கார்ந்தார். இதைக் கண்டவுடனே எல்லாரும் ஜய ஜய சப்தஞ் செய்து கைகொட்டினர். பக்தர்கள விட்டல் நாமத்தைப் பலமுறை சொல்லிக் களித்தனர். ஏகநாதர் உத்தவரைத் தமக்கு ஸ்நானத்துக்கு ஜலங் கொண்டுவருமாறு சொல்லினா. மந்திர ஜபத்தோடு ஸ்நானத்தை முடித்துத் தம் கையாலேயே மடி வஸ்திரந் தரித்துக் கொண்டார். ஆசனத்தி லமர்ந்து, திருமண்ணால் துவாதச நாமங்களுந் தரித்துக்கொண்டு, அனபோடு துளசி மாலையைக் கழுத்தி லணிந்தார். அப்புறம், ஜநார்த்தனர் நாமங்களை ஜபித்துத் தாரக மந்திரத்தை யுச்சரித்தார்; சிறிது தியானத்தி

விருந்து விட்டல் நாமங்களை உரக்கச் சொல்லினார். பின்பு, வீணையைத் தோளி லெடுத்து ஸ்ரீ ஹரியின் குணாதிசயங்களை வாழ்த்திப் பாண்டுரங்கரை நமஸ்கரித்து அவர் திருவுருவை மனத்தில் நிறுத்தினார்.

**ஏகநாதர் ஜனங்களோடு நதிக்குப் போதல்**

பகவந் நாமங்களை உரக்கச் சொல்லிக் கொண்டே ஏகநாதர் தம் வீட்டை விட்டுப் புறப்பட்டார். ஜனங்கள் அவரை யன்போடு தொழுதனர்; "இப் பூமி என்ன புண்ணியம் செய்தது!" என்று கூவினர்; வழியில் ஒவ்வோ ரடிக்கும் மாந்தர் கந்தங்களும் புஷ்பங்களும் துளசிமாலைகளுங் கொண்டு அவரைப் பூஜித்தனர்; பல வகை மங்கலப் பாடல்கள் பாடினர். அவர்கள் ஸ்ரீநாதர் திருவுருவைத் தம் மனங்களில் அழுத்திய பொழுது அவர்கள் கண்களில் நீர் பெருகிற்று. இனி அவரைப் பார்க்கப் போகிற தில்லையே யென்று நினைத்துப் பெருந் திரளான ஜனங்கள் நெடுந்தூரத்தி லிருந்து வந்திருந்தனர். கொடிகள் கணக்கில்லா துயர்த்தப்பட்டன, அடிக்கடி பகவந் நாமங்கள் உரக்க உச்சரிக்கப்பட்டன, வழியிற் கூட்டம் நிபிடமாயிற்று. நகர்ப்புறத்துள்ள கிராமத்து ஜனங்கள் தங்களுக்குத் தோன்றியபடி கோலஞ் செய்துகொண்டு வந்திருந்தனர். ஏகநாதர்க்கு முன்னும் பின்னும் கூட்டம் நிறைந்திருந்தபடியால் அவ்வரைப் பார்ப்பது கஷ்டமாயிருந்தது. எல்லாரும் ஊர் வலமாகக் கோதாவரியில் லக்ஷ்மிதீர்த்த மென்னுங் கட்டத்திற்குப் போயினர். தேவர்கள் அப்பொழுது ஆகாசத்தில் தங்கள் விமானங்களோடு தோன்றி ஏகநாதர் மேற் புஷ்பமாரி பெய்தனர்

எண்ணிறந்த திவ்ய மலர்கள் பூமியில் விழுந்தன. இவற்றை ஜனங்கள் கண்ணாரக் கண்டு பகவந் நாம கோஷத்தோடு கை கொட்டினர். அவ்வற்புதக் காட்சியைக் கண்ட அக்காலத்து ஜனங்களுடைய பாக்கியமே பாக்கியம்! ஜனத்திரள் நதியின் மணலிடத்தைச் சார்ந்தவுடனே ஏகநாதர் எல்லாரையும் மனச்சாந்தத்தோடு ஸ்ரீ ஹரியின் குணங்களைக் கேட்கும்படி சொல்லினார். ஸ்ரீ நாதருடைய வேண்டுகோளினைக் கேட்ட ஜனங்க ளெல்லாரும் பரமானந்தங் கொண்டனர். யாவரும் தங்கள்முன் னிருக்கும் திருவுருவைக் கூர்ந்து பார்த்த வண்ணமே உட்காந்தனர்.

**ஏகநாதர் கடைசி அபங்கம்**

விட்டல் நாமங்களை உரக்க உச்சரித்து ஹரி கீர்த்தனம் தொடங்கப் பட்டது. ஏகநாதர் பக்தியின் பெருமையையும் பகவந் நாமோச்சாரணத்தின் சக்தியையும் அற்புதமாக வர்ணித்தார்: "இக் கலியுகத்தில் பகவான் திருநாமமே மோக்ஷோபாயம், வேறில்லை. எல்லாப் பிராணிகளிடத்தும் தயையா யிருங்கள். இவ்வுண்மையை உங்கள் இருதயத்திற் பதியுங்கள். உங்களுடைய நன்மைக்காகவே இந்தப் பூலோகத்திற்கு நான் வரவேண்டி யிருந்தது. மற்றைப்படி நான் மாயாதீதன், பூர்ணன், சுத்தாத்மா." இவர்கள் ஏகநாதர் கீர்த்தனத்தைக் கேட்டுக்கொண் டிருந்த பொழுது நல்லோ னொருவன் அவரை இக் கேள்வி கேட்டான்: "ஸ்வாமி, நீர் வருங்காலத்தில் மீண்டும் அவதாரமாக இங்குப் பிறக்கவேண்டி யிருக்குமல்லவா? எல்லாருடைய ஆசையும் அதுதான். கருணாமூர்த்தீ, இதைச் சொல்லும்." இக் கேள்வியைச் செவியி

லேற்ற ஏகநாதர் "சன்மார்க்கம் அழிந்து அசத்தியம் தலைகாட்டின வுடனே நான் திரும்பவும் இவ்வுலகிற் பிறக்க வேண்டியது தான். அநேக தப்பபிப்பிராயங் களும், தகர்ச் சடங்குகளும் கிளம்பி யிருக்கின்றன. அவற்றை யுடைத்தல் ஹரிபூசனையால்தான் சாத்திய மாகும். ஹரியின் அவதார மெப்படியோ அப்படியே தான் என்னுடைய அவதாரமும். ஆனால் பகவானும் அவர் பக்தனும் அத்துவைதமா யிருக்கிறார்கள்; அவர் களுட் பேதமில்லை. ஹரி என்னென்ன அவதார மெடுக் கிறாரோ அவையெல்லாம் நானு மெடுப்பேன். உலகம் உஜ்ஜீவிக்கும் பொருட்டு நான் ஹரியின் திருநாமங் களைப் பிரகடனஞ் செய்கிறேன். எல்லாப் பிராணிக ளிடத்தும் பகவற்சிந்தை யுண்டாகித் தருமம் அபி விருத்தி யாகவேண்டு மென்பதே பக்தியின் உண்மை நோக்கம். எல்லாப் பிராணிகளிடத்தும் ஒவ்வொரு வனும் இரக்கமும் அன்பும் வைத்திருக்க வேண்டு மென்பதே வேதங்களின் ஆஞ்ஞை. இதனை வெளிப் படுத்தவே நான் வந்தேன். அவதாரசரீரத்தையெடுத்த பொழுதும் பகவான் நித்தியமுக்தனென்று சொல்லப் படுவார். உண்மையில் நான் வேறு என்ன? கிருஷ்ணன் அர்ஜுனனுக்குத் தம்மை விசுவ ரூபராகக் காட்டினார். ஆதலால், பல வகைப் பேதங்களைப் பற்றிப் பேசுதற் குத் தானும் இடமேது? கன்றுகளை அவர் கொண்டு போன கதையில், கன்றுகளும் இடையரும் வேறு, ஆயி னும் அவரே இசைக் கருவியும், பாதுகையும், இடைக் கச்சு மாயினர். ஏகர் ஜநார்த்தனன் சொல்லுகிறான்: கோவிந்தனை நான் விசுவ ரூபனாக எண்ணுகிறேன். பேதமுண்டென்று எண்ணுபவன் இழிந்த சண்டா ளனினுஞ் சண்டாளன்" என்னும் பொருள் கொண்ட

அபங்கத்தைச் சொல்லினர். ஏகநாதர் தம்முடைய பிர யாண காலத்திற் சொன்ன இவ் வற்புத அபங்கத்தை உத்தவர் அப்பொழுதே காகிதத்தில் எழுதிவைத்தார். அப்புறம் விட்டல் நாமஞ் சொல்லி ஹரிகீர்த்தனம் நடந்தது. எல்லாருங் கைகொட்டினர். சில மங்கல ஆரதிப் பாடல்கள் பாடப்பட்டன:

1. ஒருவன் மனிதரைப் பார்க்கும்பொழுது ஜநார்த்தனனையே பார்க்கின்றான். பேதங்கள் உள்ள விடத்து அபேதம் தோன்றுகிறது. அநேகம் உள்ள விடத்துப் பூர்ண ஏகம் தோன்றுகிறது. வர்ணித்தற்கு மனமும், புத்தியும் போதாவிடத்துக் குணம், நிர்க் குணம் என்ற வியவகாரம் ஏது? - (எல்லாரும்) ஜய ஜய ஜநார்த்தன, ஜய ஜய பகவன்! அற்புதப் பொருள் அமைந்த இம் மங்கலப் பாட்டை நாம் பாடுகின்றோம்.

2. இந்த ஆரதிக்கு ஒளி பரஞ்சோதி யிடத்தி னின்று வருகிறது. இதனைப் பார்க்கும்பொழுதே ஒருவனுக்குப் பேதவுணர்ச்சி போய்விடுகிறது, மெய்ம் மறந்து போகிறது.

3. இத் தீபம் எரியும்பொழுது பேதாவஸ்தை யில்லை யென்னு முண்மை ஒருவனுக்கு அனுபவ மாகிறது. சரீரத்தைச் சரீரத்திற்கு அர்ப்பிக்கும் பொழுது சீக்கிரமாக ஜீவ சிவ பேதம் மறைகிறது.

4. பிற்புறம் முற்புறம் என்பது இல்லாது ஏக மாய்த் திரண்ட கட்டி, காணும் ஒன்று எல்லாவற் றுக்கும் மேற்பட்டது; விரும்பப்பட்டது; மன்று விரும்பப் படாதது மன்று, இரகசியமு மன்று வெளிப்படையு மன்று. அந்த 'நான்' ஆகாசமெங்கும் நிரம்பி யிருக்கிறது.

5. மனம் அதை எப்பொழுதுங் கண்டிருந்தாலும் ஒருபோதும் தெரிந்துகொள்வதில்லை. இல்லாமை உண்மையை விழுங்கி விட்டது. இந்த ஆரதி அதிசயமானது, ஓ ஏகா ஜநார்த்தன!

இப் பொருள்கொண்ட மங்கலப்பாடலை ஸ்ரீ நாதர் தம் குரலாலேயே பாடினார்; பகவானுடைய நாமங்களைச் சொல்லிப் பூமி மேல் தண்டாகாரமாக விழுந்து சேவித்தார். பிறகு அவர் அஞ்சலிஹஸ்தராய் ஜனங்களை நோக்கி, "உங்க ளெல்லாருடைய நல்லெண்ணங்களும் எனக்குத் துணையாகுக" என்று சொல்லி மீண்டும் பணிந்தார். அவர் கூறியதைக் கேட்ட ஜனங்களுக்குக் கண்ணில் நீர் பெருகிற்று. "நாதர்க்கு ஜய, ஏகநாதர்க்கு ஜய" என்று சொல்லிக்கொண்டு அவர்கள் அவருக்கு நமஸ்காரஞ் செய்தனர். அப்புறம் ஏகநாதர் கோதாவரியின் ஜலத்துள் நடந்து சென்றார். ஜலம் அவர் கொப்பூழைத் தொட்டவிடத்து அவர் நின்று, எல்லாரையும் பகவந நாமங்களை யுச்சரிக்கும்படி செய்தார். அப்பொழுது அவர் ஆத்மா சரீரத்தை விட்டுச் சென்றது; தேவர்கள் மலர் மாரி சொரிந்தனர். அக் காட்சியைக் காண வந்த ஜனங்க ளெல்லாம் பக்தி மேலீட்டால் துக்கித்தனர். அவர்கள் அப்புறம் வழக்கம் போல அவர் சரீரத்தைத் தகனஞ் செய்து தத்தம் வீடு சேர்ந்தனர். மறு நாள் அவர் புத்திரரோடு அவர்கள் சஞ்சயனத்திற்காக வந்தனர். அப்பொழுது, என்ன ஆச்சரியம்! சாம்பரி லிருந்து கிருஷ்ண துளசிச் செடியும், அரசங் கன்றும் முளைத்து வருதலைக் கண்டனர். ஜனங்கள் அரசின் மெல்லிய தளிர்களைப் பார்த்த பொழுது சந்தோஷத்தால்,

**ஏகநாதர் பிரயாணம்**

"அவரேதான் அசுவத்த விருக்ஷ வுருவோடு வந்து விட்டார். ஸ்ரீ நாதர் அதற்குள்ளாகவே அவதாரமாகி விட்டார்" என்று கூறினர். அப்புறம் அசுவத்த விருக்ஷத்தை நடுவில் வைத்து, அதைச்சுற்றி ஒரு கன் மேடை கட்டி, அங்குக் கர்ப்பக்கிருகமொன் றமைத்து, அதில் ஸ்ரீ நாதர் பாதுகையைப் பிரதிஷ்டித்தனர். இந் நாள் வரை புருஷர் ஸ்திரீகள் பலர் அவ்விடத்திற் பணிகின்றனர். கருணைகர ராகிய ஸ்ரீ நாதர் அவர்கள் இருதயங்களி லுள்ள ஆசைகளைப் பூர்த்தி செய்து வைக்கிறார். ஷஷ்டியன்று பைடணத்தில் ஒரு பெரிய உற்சவம் நடைபெறுகிறது. ஸ்ரீ நாதர் அசுவத்த விருக்ஷ ரூபமாய் நின்று காட்சி கொடுக்கிறார். அதிசயங்கள் பல அவ்விடத்து நிகழ்கின்றன. இன்னும், கன்மேடை உடைந்துவிடப் போகிறதே யென்று அசுவத்த மரம் முன் இருந்தபடியே சிறிய வுருவினதாயிருக்கிறது. ஸ்ரீ நாதரின் இவ் வெளிப்பாட்டை எப்பொழுதும் பார்க்கக் கொடுத்துவைத்த புண்ணிய நகரத்து ஜனங்களே பாக்கியவந்தர்கள்! அவர் பாதுகையைத் தரிசித்ததனால் கணக்கிறந்த பாபிகள் உய்ந்தனர். ஏகநாதர் மரண கதையைக் கேட்பவர்கள் மரண வேதனைப்படார்; அவர்களுக்கு ஆனந்தத்தை யளித்து வைகுண்ட நாதர் அவர்களைத் தம்முலகிற்குக் கொண்டுபோகிறார்.



Printed at the "Aurora Press," Madras — 1930. (A)